உ

ஓம் சற்குருவே நம.

# கைவல்ய நவநீதம்.

## மூலமும் உரையும்.

இம்மூலஞ்செய்தவர்

நாராயணதேசிகர் மாணாக்கராகிய

தாண்டவராயமூர்த்திசுவாமிகள்

இவ்வுரை செய்தவர்

திருத்துருத்தி கரபாத்திரசுவாமிகள் பரம்பரைக்குரிய

நாகபட்டணம்

அருணாசலசுவாமிகள்

பதிப்பித்தபிரதிக்கிணங்க

பிடாரித்தாங்கல்,

நாராயணசாமிமுதலியார் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

வித்தியாரத்நாகரஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1903.

சென்னைபிரம்பூர்குயப்பேட்டை 65 வது, நெம்பர்வீடு.

உ

கடவுள் துணை.

# விளம்பரம்



கனவான்களே! சென்னை பிரம்பூர் குயப்பேட்டை படவெட்டம்மன் கோவில் தெருவு 64-வது நெம்பருடைய வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தில் ஸ்தாபிக்கப்பட்ட வி-பி கம்பெனியில் தமிழ், தெலுங்கு, கிரந்தம், துலுக்குமுதலிய புஸ்தகங்களும் ஸ்மார்த்த வைஷ்ணவர்களுக்கு வேண்டும் புஸ்தகங்களும் பால்யாகளுக்கு வேண்டும் காலேஜிப் புஸ்தகங்களும் உத்தியோகஸ்தர்களுக்கு வேண்டும் ஆக்டுபுஸ்தகங்களும், இசுலாமானவர்களுக்கு வேண்டும் தமிழ் எழுத்தில் துலுக்குபுஸ்தகங்களும், காவலர், பாவலர், நாவலர் யாவருக்கும் வேண்டும் இலக்கணம், இலக்கியம், புராணம், கதை, அம்மானை, நாடகம், விலாசம், கீர்த்தனை, அந்தாதி, கலம்பகம், கோவை, தூது, வெண்பா, சதகம், கும்மியெனும் அனேகம் தினுசுகளும், அத்வைத சாஸ்திரமும், ஆறுமுகநாவலர் புஷ்பரத செட்டியார் சை-இரத்தினசெட்டியார் இவர்களுடைய அச்சுக்கூடங்களிற் பதிப்பித்த உயர்ந்த புஸ்தகங்களும், வியாதிகள் சொஸ்தப்படும்படி தக்க அவிழ்தங்களும், அவரவர் பேர்களுக்குத் தக்கதாய் ரொம்பவும் அழகான வேலைசெய்த றப்பர் சீல்களும், ஜெர்மன் சில்வரால் செய்த நகைகளும், சாமான்களும், நல்ல வாசனைபொருந்தியதாயும் நாள்படயிருந்தால் கெடாமலிருக்கும்படியாயும், உள்ள அத்தர் தினுசுகளும், பூசு பில்லைகளும், வாசனை வத்திகளும் இவைக ளெல்லாம் தயாரா யிருப்பதால் வேண்டியவர்கள் அடியிற்கண்ட எனது மேல்விலாசத்திற்கு எழுதினால் உடனே வி-பி தபாலில் அனுப்பக்கூடும் என்னுடைய கேட்லாக்கு வேண்டுமானால் அரையணா ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

ஒவ்வொருவரும் எங்களுக்கு விஷயந் தெரியும்படி தெளிவாய் ஒவ்வொரு முறையிலுந் தங்கள் பெயர் ஊர், இருப்பிடம், போஸ்டாபீஸ், தாலுக்கா, ஜில்லா முதலியவைகளோடே விலாசத்தை கட்டாய மெழுதவேண்டும்.

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தலைவர்

பெரம்பூர் போஸ்டு மதறாஸ்.

ஸ்ரீ பி. நா. சிதம்பரமுதலியார்.

உ

சிவமயம்.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

——(-)——

சீர்வளர்பிரமசிருஷ்டியின்முனமே
யேர்வளர்சத்தாயிலங்குறுபிரமம்
பரமூலகுயிரெனப்படுபொருளெவற்றையும்
முரணுறுஞ்சசாதியாமுதலியபேத
மற்றொளிர்பரமாகாசசுயம்புவா
யுற்றதன்னிலைமையினேரிறைகுறையா
தெறிதிரைக்கரத்தாலினமணிகொழிக்குஞ்
செறிபுனற்பொன்னிசூழ்செப்பியநாட்டிற்
பொன்னிலத்தவரிழிபொற்புறுபடியென
நன்னிலைமாடமார்நன்னிலமதனிற்
செந்தணலோம்புந்திறந்திரியாதுய
ரந்தணர்குலத்திலவதரித்தருளிய
நாராயணகுருநான்மலர்ப்பதத்தைப்
போதவனருள்பெற்றிடுமகனென்
முற்றுணர்தாண்டவமூர்த்தியனுபவப்
பெற்றினுலகோர்பேரின்பமடையக்
கிளரும்வேதாந்தக்ஷீரோததியைத்
தளர்வறுசமாதித்தாழிநிறைத்திட்
டகற்றுவிசாரவனலினாற்காய்ச்சி
மகிழ்குருவாக்கியமத்தாற்கடைந்து
ஞானகைவல்லியநவநீதத்தை
யானபேரன்பினளித்தனனதனை
யெளிதினிலியாவருமின்புடன்றுய்க்க
வொளிமணக்கிருதமாயுரைசெய்விக்கும்படி
சைவாழ்வனைத்துஞ்சத்தியமலவெனத்
திகழுமமலைகான்சென்றுபல்தவத்தோ
ருடனுறைந்திடலொறுத்துணர்வுறப்பட்டினத்
தடிகளெனத்துறந்தானுஜைநகாசியை

நாடியாத்திரைசெயுநாட்டுக்கோட்டைப்
பீடுறுமருணாசலப்பெருந்தவத்தோ
னருளியமொழிவழியன்புடனுட்கொண்
டருளொணிலவுங்கட்கணிகலையானை
நிலைக்கடல்வயிற்றினிறப்பிற்பற்பல
கலைக்கடறன்னைக்கருத்துளடக்கிய
வகத்தியமுனிவரன்பொருதியமும்பொதியு
நகத்துருசக்கனமயமகிலுநவொடு
நீர்வருபொருனையுநிகழுமநீரா
மேலர்பெறுச்செந்நெற்கருப்பெனக்கன்னல்
கழூகெனக்கமுகுந்தெங்கெனத்தெங்குதா
னமுதுகுமெழிலிக்காண்காலென்னத்
திகழ்வுறவளங்களுஞ்சேர்ந்தினிதோங்கும்
புகழ்பெறுபாண்டிப்புத்தேனாட்டிற்
களைகளைகடைசியர்கண்ணூடுறழுமக
மளைவுறுசாலையையம்புயமீது
புல்லிதழ்க்குவளைபூத்தவென்றபுனை
வல்லிதிற்கையால்வவ்வுறக்கண்டா
குழத்தியர்புன்னகைகண்டிடவுபங்கி
யுழவர்கணானுறுமொண்பணைசூழும்
வாதவூரடிகண்மதியுருவாகப்
போதவூராணனோர்பூசுரனாகி
குருந்தடிமாந்தருள்கோயில்பெருந்துறை
மருங்கிற்பளிங்குமேன்மாடத்துலவு
மின்னார்முகமதிதமைவிண்மதிதான்
றனாராசுதனைக்கொளுமொன்னல
ஒர்ணக்கலங்கியேங்குருமயத்
தன்னார்கூந்தலறவெனக்கண்டு
பயமற்றேகுறும்பான்மையுமறையவர்
வயமுறுமரசர்வணிகர்சூத்திரர்முறை
மனுமாவித்திரர்வயலெலனுநகரோன்
பொன்னிசூழ்பூம்புகார்வணிகர்குலோத்தமன்
நாரியர்மனங்கணையமுறநாடுஞ்
சீரியல்வேனிற்சிறந்தநல்லெழிலான்
மாலைவண்டுணுகருக்காந்தனுநவமணி

மாலையுமார்பில்வயங்குவெண்கவிகையான்
அறிஞர்நல்குரவெனுமங்கிதணியப்
பொழிவனஞ்சொரியுநற்புயல்கரமுடையான்
சித்திதுசடமீதென்றவைதேர்ந்து
முத்தியைப்பெறமுபன்முதறிவுடையோ
னில்லறமதனிலிருந்துமெய்த்துறவே
நல்லறமெனவேதாந்தத்தைநண்ணி
சாதுசங்கத்தொடுசாத்திரார்த்தங்களை
மூதுணர்வுறநிதமோதிநன்மோன
நிலையினென்னுறம்புலநெறிச்செலுமனத
யலைவுறாதடக்குமடைக்கியப்பறிஞன்
ஈறறிடுங்கருத்தாவெனுமால்கேட்கச்
சான்றோனுபவச்சாம்பிரதாயந்தழீஇத்
தகைபெறும்பன்னூற்கருத்தையுந்தனது
சகசானந்தமுந்தழுவியவ்வலா
னுருக்குமவ்வுரையிற்குயர்பரானந்த
விருதமெனப்பெயர்கண்டுகிளத்தினன்
விண்ணவர்முதலோர்வீடுறுமெய்த்தவ
நண்ணுறுவந்துறுங்காவிரிநாட்டிடைத்
திருத்துருத்தியினோர்தேசிகவரசர்
யருமறைமுடிவாமாதனத்திருந்து
சித்தியாங்குறுநிலமன்னரைச்செயித்து
முத்திமாவுலகாண்டிடமுடிசூடு
மிந்திரபீடத்தெழிற்கரபாத்திர
சுந்தரனடிமுடிசூடியதெத்தாத்
திரயனடிபெறுஞ்செங்கமலன்றூண்
மறுவுறுநாகையின்மன்னுபேரறிஞ
னகோரசரசயம்புவாகியவேவார்முதல
சுகோத்தியுருவாய்த்தோன்றருணாசலக்
குரவனடிமுடிகொண்டடியவர்க்குப்
பரவுணர்வாய்ப்பொருள்காட்டுமெய்ப்பானு
வோதருமூவகைவினைக்குமூவாமதி
சாதனமொன்றுமில்லாததமியேனையு
மோர்பொருளாகவுவகையிற்கூவிச்
சீர்பதந்தலைமேற்றிகழ்வுறச்சூட்டி

வொருமொழிபமுதையுள்ளுறவூட்டி
நிருவிகற்பாங்கநிட்டையினிறீஇ
மிகுசொரூபானுபூதியைவிளக்கிச்
சுகசானந்தத்தலைமீக்கொண்டு
சும்மாவிருக்கச்சுகமெனவருளிய
வெம்மானெழினுற்றிலங்கும்பிறைசை
அருணாசலச்சுவாமிகளெனத்
திருநாமம்பெறுந்தேசிகோத்தமனே.

உரைச்சிறப்புப்பாயிரம் - முற்றிற்று,

இஃது இந்நூலுரையாசிரியர்மாணாக்கராகிய இராமசாமிக்கவிராயர் பா-வாத்தியார் முனியப்பமுதலியார் இவர்களாற்செய்யப்பட்டது,

கடவுள்வணக்கம்,

நிருவிகற்பசமாதியினின்றெழும்
பொருவிலானந்தபோதனைப்பேணுவா
மொருமைமுத்தியுதவுங்கைவல்லிய
வருமைநூற்கெனுநின்றுணையாற்றவே.

அருளிறைவணக்கம்.

ஒளிநிறைந்தவுணர்வின்பொறுமையே
களிகொண்மாணிடனுருக்காட்டியிங்
தெளிதிணைகவந்தென்னையெனக்கரு
ளளிர்மலர்ப்பதத்தையனையேத்துவாம்



உ

ஓம் சற்குருவேநம.

# கைவல்ய நவநீதம்.

---

## முதலாவது.

## தத்துவவிளக்கப்படலம்.

### பாயிரம்.

அவதாரிகை.

வடநூலாராய்ச்சியில் வல்லமையுள்ளவிந்நூலாசிரியர்தாமடைந்தசுவானுபூதிப்பிரத்தியட்சத்தை யுலகஞ்சுளுவிலடைந் தானந்தாதீதமாகும்பொருட்டருளினாற் சொல்லப் புகுந்த விந்நூலினது முடியவதனந்தரங்கமான பிரஞ்ஞானம்பிரமமெனனுமிருக்குவேத மகாவாக்கியார்த்தமாகவிளங்கு மத்துவிதஸ்வரூபத்தைவிலட்சணமாகவுஞ்சலட்சணமாகவுந் துதிப்பான் றொடங்கி யிச்செய்யுளிற் சமாதியின்கண் ணுதயமானவிலட்சணமாகிய கூடஸ்தபிரமத்தைத் துதிக்கின்றார்.

பொன்னிலமாதராசை பொருந்தினர்பொருந்தாருள்ளந்
தன்னிலந்தரத்திற்சீவ சாட்சிமாத்திரமாய்நிற்கு
மென்னிலங்களினுமிக்க வெழுநிலம்வற்றின்மேலா
உன்னிலமருவுமேக நாயகன்பதங்கள்போற்றி.

இ-ள் பதப்பொருள்.

பொன்-பொன்னிடத்தும்-நிலம்-மண்ணினிடத்தும்-மாதர் - மடவாரிடத்தும்-ஆசைபொருந்தினர்-ஆசையுள்ளவஞ்ஞானிகளும்-பொருந்தார்-நிராசையுள்ளஞானிகளுமாகிய இவர்களது உள்ளந்தனில்-இதையாகாசத்தில்-அந்தரத்தில்-நான்குபூதங்களினு நிறைந்திருக்கின்றவாகாயத்தைப்போல சீவசாட்சிமாத்திரமாய் கூடஸ்தசைதன்னியமாத்திரமாகநிற்கும் நிறைந்திருக்கின்ற என்நிலங்களினும்-எவ்விதமானநிலைகளிலும் மிக்கமேலாய்-எழுநிலம்வற்றில் ஞானபூமிகளேழினுமேலான உன்னிலமருவும் முடிவாகிய துரியபூமியிற்பொருந்திய ஏகநாயகன் ஒன்றாகியபிரமசைதன்னியத்தின் பதங்கள்போற்றி திருவடிகளை வணங்குவாய்-என்றவாறு.

## பதசாரம்.

சகலசமயங்களுக்கு மேலானது ஞானபூமியென்பார்-அந்நிலங்களி னுமிக்கு ஏழுநிலமெனவும் அவைகளின்முடிவானது துரியபூமியென் பார்-தன்னிலமெனவும்-அதனிடமாகவிளங்குகின்றது துரியாதீதமென் பார்-ஏகநாயகனெனவும் அத்தேதுரியஸ்வரூபமாய்ச்சொரூபமுதல்ஸ் தம்பபரியந்தஞ் சர்வவியாபகமாய்வியாபித்துவிளங்குவதென்பார்பொ ன்னிலமாதராசைபொருந்தினர்-பொருந்தா ருள்ளத்தனிலந்தரத்திற் சிவசாட்சிமாத்திரமாய்நிற்குமெனவும்யாவர்க்குஞ்சைதன்னியத்திற்பி ரகாசமான கூடஸ்தபிரமமேயிடமென்பார்பதங்களெனவும்அவைகளி னயிக்கியமேயத்துவிதமென்பார் போற்றியெனவுங்கூறினர் பொன்னி லமாதவென்பது இச்சையைவிளைப்பதற்குக்காரணமான வீடணைத்திரி யமெனக்கொள்க புத்திரேடணையெனப்படையவனுரிமையிற்பெறுவதா கியவரசின்மேல்வைத்துக்கூறினர்.

## இதன்றாற்பரியம்.

அகோசரமான நிர்விசயானந்தவஸ்து கோசரிக்குமிடத்துப் பூர ணானந்தமாகப்பிரவேசித்து நித்தியானந்த சாக்ஷாத்காரமாகத்தடித்து அகிலதீதமாகவிளங்குவதைப்பிரமமாகவுமத்தேதவிடயசம்பந்தங்களில் சறுக்கற்றிருந்ததைப் பிரத்யேகாத்ம ஸ்வரூபமாகவுங்குறித்ததாம்,

அ-தை. இச்செய்யுளின்முற்கூறியவத்துவிதவஸ்துவைசகசநிஷ்டை யிற் சலக்ஷணமாகவிளங்கிய-சுயம்-சைதன்னியமாகத்துதிக்கின்றார்.

ஈன்றளித்தளிக்குஞ்செய்கைக் கேதுவாமயனுமாலா
யான்றவீசனுமாய்த்தானே யனந்தமூர்த்தியுமாய்நிற்கும்
மூன்றமுத்தனுமாயின்பம் புணரியாதவனுநாளுந்
தோன்றியவிமலபோத சொரூபத்தைப்பணிகின்றேனே,

இ-ள். ஈன்று சிருஷ்டித்து-அளித்து-இரட்சித்து-அழிக்கும் சங்கரி க்கும் செய்கைக்கேதுவாம்-இம்முத்தொழிற்குமேதுவாகிய அயனாய்பி ரமனாகியும் மாலாய்விஷ்ணுவாகியும் ஆன்றவீசனுமாய்-மாட்சிமையுள் ளவுருத்திரனாகியும் அனந்தமூர்த்தியுமாய் இன்னுமனேகவடிவங்களா யும்நிற்கும் இருக்கின்ற பூன்றமுத்தனுமாய் பூரணமானமுத்தனாகியும் இன்பப்புணரியாதவனும் ஆனந்தசமுத்திரத்திலுதிக்குஞானசூரியனா கியும் நாளுந்தோன்றியசதோதயமாகிய விமலபோதசுத்த சைதன்யமா னசொரூபத்தைப் பணிகின்றேன் பிரமஸ்வரூபத்தை வணங்குகிறேனென்றவாறு.

ப-ம். தனதுஸ்புராணமெல்லாந் தனதுவடிவமாக விளங்குமென்பார் (அயனும்மாலாயானுருவீசனுமாய்த் தானேயனந்தமூர்த்தியுமாய்(நிற்குமெனவும்-பேரின்பவிளக்கமேசைதன்னியமென்பார் இன்பப்புணரியாருவமெனவும்-உற்பத்திதிதிலயங்களின் றிவிளங்கினசுத்தசைதன்னியமென்பார்(நாளுந்தோன்றிய விமலபோதசொரூபமெனவுங் கூறினார்) (இ-ம்)சர்வம்பிரமமயமென்னுமுபநிஷதவாக்கியப்படிக்கு ஸ்வரூபசாட்சாத்காரமான சுத்தசைதன்னியத்தை துதிசெய்ததாம்,

(அ-கை)முற்கூறியவாத்மஸ்வரூபமேவடிவமானவருளினை நீதமாகவும் சாட்சாத்காரமாகவும் துதிக்கத்தொடங்கி யிக்கவியி லதீதமாகத் துதிக்கின்றார்.

எவருடையருளால்யானே யெங்குமாம்பிரமமென்பார்
கவருடைப்புவனமெல்லாங் கற்பிதமென்றறிந்து
சுவருடைவெளிபோல்யானே சொரூபசுபாவமானேன்
அவருடைப்பதுமபாத மனுதினம்பணிகின்றேனே.

இ-ள்,எவருடையருளால்-யாவருடைய கிருபையினால்-யானேநானே எங்குமாம்பிரமம்-எவ்விடத்திலு நிறைந்திருக்கின்றபிரமஸ்வரூபமும் என்பால்-என்னிடத்தில் கவருடைப்புவனமெல்லாம்-தோற்றிவிரிந்திருக்கின்றவுலகமுழுதும்-கற்பிதமென்றறிந்து-பொய்யென்றறிந்துசுவரிடைவெளிபோல்-சுவரிடத்திருக்குங் கனம்போல்-யானே-நானே-சொரூபசுபாவம்-பிரமசுபாவமும்-ஆனேன்-ஆயினேன்-அவருடைய அவர துபதுமபாதம்-கமலமலர்போன்றதிருவடிகளை-அனுதினம்-எப்போதும்பணிகின்றேன்-வணங்குகின்றேன் எ-று,

ப-ம் சர்வபிரமமென்பார்-எங்குமாயபிரமமெனவும்-சர்வமு மில்லை என்பார்(கவருடைப்புவனமெல்லாங்)கற்பிதமெனவும் யாவுந் தன்மயமாக விளங்குவனவென்பார்-சொரூபசுபாவமானேனெனவுங் கூறினார் (இ,ம்)சர்வமாய்ச்சர்வமிலதாயிருக்கின்ற தன்னை தன்னிடத்துதானாயிருந்துவிளங்கியகுரு துரியத்தைவணங்கினதாம், ௫

(அ-கை)இச்செய்யுளிற் சற்குருசொரூபத்தை சாட்சாத் காரமாகத் துதிக்கின்றார்.

என்னுடைமனதுபுந்தி யிந்திரசரீரமெல்லா
மென்னுடையறிவினாலே யிரவிமுன்னிமமேயாக்கி
யென்னுடைநீயுநானு மேகமென்றயிக்கியஞ்செய்ய
வென்னுடைகுருவாய்த்தோன்று மீசனையிறைஞ்சினேனே.

இ-ள். என்னுடை-என்னுடையமனதுபுந்தி-மனம் புந்திகளாகியவந்தக்கரணமும் இந்திரியம்-ஞானேந்திரியகன்மேந்திரியங்களுஞ்சரீரம்

தூலதேகமுமாகிய-எல்லாம்-இவைகளனைத்தும் என்னுடையறிவினால் எனதாத்மஞானத்தினால் இரவிமுன்னிமமேயாக்கி-சூரியனைக்கண்டபனிபோலச்செய்து-என்னுடைய-எனதுசுபாவமான-நீயும் நீயென்னுங்கூடஸ்தனு நானுமநாதியென்னும்பிரதமமுமேகமென்றுஒன்றேயென ஐக்கியஞ்செய்ய-அத்துவிதமாக்கஎன்னுடைகுருவாய்-எனதாசாரியராக-தானுமீசனை-உதயமானவருளிறையை-இறைஞ்சினேன்-வணங்கினேன்(ப-ம்)தனதுபிரியத்தடிப்பேகுருஸ்வரூபமென்பார்—என்னுடையகுருவெனவும்-கன்னையிரட்சிக்குநிமித்தமுதயமான தருளிறையென்பார் ஈசனெனவுங்கூறினார்(இ-ம்)மனமுதலிய தத்துவங்களனைத்தையுஞ்சமாதிஞானத்தினால் கரைத்ததனிலுதையமாகுமானந்தமாகிய வஃதேயிக்திக்கேயுக்தென்னுமத்துவிதஸ்வரூபத்தைதரிசிப்பிக்கும்பொருட்டுபூரணமேயோருருவாகவெழுந்தருளியவாசாரியரைவணங்கினதாம்

(அ-கை)தனதாசிரியரைவணங்கியவாருளினாற்கூறப்புகுந்த இந்நூன்முகத்திற்கூறப்படும் விடயமுமிதனாலுண்டாகுப்பயனுமிந்நூற்குமிற்கூறப்படுவதாகியவிடயத்திற்குமுள்ளசம்பந்தமுமிது கேட்டதற்குறிபவதிகாரியுமாகிய வனுபந்தசதுட்டயமிந்நூரதற்குமாணாக்க னுணரும்பொருட்டினைக்கவேண்டுதலினைவற்றுளதிகாரியும்விடயமு மிச்செய்யுளிற்கூறுகின்றார்.

அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றிவான்போல்
சந்ததமொளிருஞான சற்குருபாதம்போற்றி
பந்தமும்வீடுங்காட்டப் பரந்தநூல்பார்க்கமாட்டார்
மைந்தறுமுணருமாறு வஸ்துதத்துவஞ்சொல்வேனே.

இ-ள். அந்தமுநடுவுமின்றியாதியுமின்றி ஆதிமத்தியாந்தரகிதமாய் வான்போல்ஆகாயத்தைப்போலசந்ததமொளிருமசோதமாய்விளங்குகின்ற-ஞான சற்குருபாதம்போற்றிஞானாசாரியரதுபாதத்தைவணங்கி பந்தமும்வீடுங்காட்ட- பெத்தமுமுத்தியுமாகிய விவைகளின் ஸ்வரூபத்தைதெரிவிக்கும்பொருட்டு-பரந்தரவிரிந்திருக்கின்ற-நூல்வேதாந்தசாஸ்திரங்களைப் பார்க்கமாட்டாமைந்தரும் ஆராய்ந்தறிய சத்தியில்லாதசீடரும்-உணருமாறு-எளிதிலுணரும்படி-வஸ்துதத்துவஞ் சொல்வேன-பரவஸ்துவினுண்மையைச்சொலவேன்-எ-று.மைந்தரென்பததிகாரியெனவும்வஸ்துதத்துவமென்பதுவிடயமெனவுங்கொள்க பரந்தநூல் பார்க்கமாட்டாமைந்தருமென்னுமும்மையாற்பார்ப்பவர்க ளெனைபதுமாயிற்று ப-ம் காலமுதலியவைவநசிக்கினுந் தானசியாதிருத்தலினந்தமின்றெனவும்இடையின்றித்தான்பூரணந்தமாகவிளங்குதலின்நடுவின்

றெனவும்எப்போதும்தான்சுயமாய்ப்பிரகாசித்தலின் ஆதியுமின்றியெனவும்இங்ஙனஞ்சகோதயமாவிளங்கியசச்சிதானந்தமான சுத்தசைதந்நியமே குருசொரூபமாதலால்சந்ததமொளிருஞான சற்குருவெனவும் தானதன்மயமாய்நிற்றலின்பாகம்போற்றியெனவும் கல்வியல்லவெனக் கண்டத்தின்சாரமான தன்னைவிரைவிற்றெரிந்துகொள்ளவிருப்பமுற்றவர்களொளிதிலுணரும்படியுணர்த்துதலின்பரந்தநூல் பார்க்கமாட்டாமைதருமுணருமாறுவஸ்துதத்துவஞ்சொல்வேனெனவும்கூறினார்,

அ-கை இச்செய்யுளிற்சம்பந்தமும் பிரயோசனமுங்கூறுகின்றார்.

படர்ந்தவேதாந்தமென்னும் பாற்கடன்மொண்டுமூன்னூற்
குடங்களினிறைத்துவைத்தார் குரவர்களெல்லாங்காய்ச்சிக்
கடைந்தெடுத்தளித்தேனிந்தக் கைவல்லியநவநீதத்தை
யடைந்தவர்விடையமண்டின் றலைவரோபசியிலாரோ

இ-ள். படர்ந்த-விரிந்திருக்கின்ற-வேதாந்தமென்னும் - உபநிடதமென்னும்பாற்கடன்மொண்டு க்ஷீரசமுத்திரத்தின் முகுந்து மூன்னூற்குடங்களில்-மூன்னூலாகியகுடங்களில்-குரவர்கள்-ஆசிரியர்கள் நிறைத்துவைத்தார்-பூரித்துவைத்தார்கள்-எல்லாங்காய்ச்சி அவைகளத்தனையுங்காய்ச்சி, கடைந்து-கடைதல்செய்து, இந்தக்கைவல்யநவநீதத்தை இஞ்ஞானசாத்திரமாகியகைவல்யநவநீதத்தை எடுத்தளித்தேன்-எடுத்துக்கொடுத்தேன்-அடைந்தவர்-இதைபுசித்தவர்கள்-பசியிலார்நித்தியதிருத்தியடைந்தவர்களாதலால்விடயமண்டின் றுவிடயாநந்தமென்னுமண்ணைபுசித்து அலைவரோ-பவத்திற்சுழல்வார்களோ-சுழலார்-எ-று.

கைவல்யநவநீதமென்பது சம்பந்தமும்அடைந்தவர்பசியிலாரென்பது-பிரயோசனமுமாமெனக்கொள்க

ப-ர். வேதமுடிவானமகாவாக்கியமோர்மொழியாயினுமத்துசிட்டனுக்குபோதமாகும்போதமாகும்பொருட்டுண்டானசுத்தவேதாந்தமென்னும்பாற்கடலெனவும்அவைகளிற்றங்களுக்கநுபவமாகும்பொருட்டாகியவெடுத்தறிவித்தவாக்கியங்களையெடுத்துக் கோடலைமொண்டெனவும் தாம்பெற்றபேருலகபெறும்படி பாலினமாகியநூல்களிலவ்வாக்கியங்களையமைத்தலைமூன்னூற்குடங்களினிறைத்துவைத்தார்குரவர்களெனவும்-அப்பலசாத்திரங்களிலுள்ளவாக்கியங்களைசேகரித்தலை எல்லாமெனவும் அவ்வாக்கியங்களின்பூர்வபட்சத்தைநீக்கிவிசாரத்தாற்சித்தாந்தப்படுத்துதலைகாய்ச்சியெனவும் அச்சித்தாந்தத்தை குருவுபதேசத்தாற்சமாதியிலநுபவமானவருய் கலைகடந்தெனவும் அக்கிலுயமானதிருவா

இ-ங-க-ம்-அநித்தியவஸ்துக்களிவையெனகண்டு நித்தியவஸ்துவை யுடைதற்கேதுவானகுணங்களையேசாதனசதுட்டயமாகக்கூறினதாம்.

அ-கை அச்சாதனங்களினின்றுவமையாகச்சிறப்பினவெனவுமதனு லுண்டாகும் பயனிக்தெனவுங்கூறுகின்றார்.

சாதனமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை
யாதலாலிந்நான்குமடைந்தவர்க்கறிவுண்டாகு
நூதனவிவேகியுள்ளி னுழையபதுநுழையுமாகிற்
பூதசென்மங்கள்கோடி புனிதனும்புருடனுமே.

இ-ள். சாதனமின்றிசாதனமில்லாமல் ஒன்றை ஒருகாரியத்தைசாதிப்பார் சாதிப்பவர்கள் உலகிலில்லை பூமியின்கண்ணில்லை ஆதலால்ஆகையாலஇந்நான்கும் இச்சாதனசதுட்டயங்களை அடைந்தவற்கு பெற்றவர்களுக்குஅறிவுண்டாகும்ஞானோதயமாகும் நூதனவிவேகியுள்ளில்புதியவிவேகியின்மனதில் நுழைபாதுபுகாது நுழையுமாகில் புகுமானால் பூதஇறந்தகாலத்துள்ளசென்மங்கள்கோடி அந்தசனனங்களில்புநிதனும்புருடனும் சித்திசுத்தியுள்ளவனுகியபூமானும்என-று இ-ம் மெய்புணர்வையுணர்தற்கிச்சாதனங்களவசியம்வேண்டுமென்பதாம்.

அ-கை அச்சாதனமுள்ளசீடனது தீவிரதாபக்குலத்தையறிவித்தல்.

இவனதிகாரியானே னிந்திரியங்களாலும்
புவனதெய்வங்களாலும் பூதபௌத்திரங்களாலும்
தவனமூன்றடைநதுவெய்யிற் சகித்திடாப்புழுப்போல்வெம்பிப்
பவ்வறுஞானதீர்த்தம் படிந்திடப்பதறினனே.

இ-ள். இவன் இச்சாதனத்துட்டயமுள்ளவனே அதிகாரியானேன் இந்நூலுக்கதிகாரியாவான் இந்திரியங்களாலும் ஆதியாத்மிகத்தினுலும்புவனதெய்வங்களாலும் ஆதிதெய்வீகத்தினுலும பூதபௌதிகங்களாலும் ஆதிபௌதிகங்களாலும் தவன்மூன்றடைந்து தாபத்திரயாக்கினியையடைந்து வெய்யிலிற்சகித்திடாப்புழுப்போல் சூரியனதுஉஷ்ணகிரணத்துக்கு சகிக்கமாட்டாதகிருமியைப்போல் வெம்பிவெப்பமுற்று பவமறும்பிறவியையொழிக்கின்றஞானதீர்த்தப்படிந்திட ஞானசாகரத்தில்மூழ்க பதறினன்தீவிரமுற்றனன்-என று இ-ம் தாபத்திரயாக்கினியாகியசம்சாரதுன்பங்களுக்காற்றுதவனேயவைநீங்கி பிரமானந்தமடையவிரைவனென்பதாம்.

அ-கை அத்திவரதாயக்குலனுக்காசிரியர் தரிசினமாதல்.

ஆனவிம்மனைவிமக்களாத்தவிடணைகண்மூன்றிற்
கானவர்வலையிற்பட்டுக் கைதப்பியோடுமான்போற்
போனவன்வெறுங்கையோடே போகாதவண்ணஞ்சென்று
ஞானசற்குருவைக்கண்டு நன்றாகவணங்கினானே.

இ-ள். ஆனவிம்மனைவி மனக்கானவிவ்வில்லாளும் மக்கள் புத்திரரும் அர்த்தம் தனமுமாகிய ஈடணைக்கண்மூன்றில் ஈடணாத்திரியங்களினின்றும் கானவர்வலையிற்பட்டு வேடர்கள்வீசும் வலைக்குளகப்பட்டு கைதப்பியோடுமான்போல் தவறிச்செல்லுமரிணத்தைப்போலபோனவன் ஓடினவன் வெறுங்கையோடேசும்மாபோகாதவண்ணம் செல்லாதபடிசென்று உள்ளத்திலன்பும் புறத்திலாராதனைக்குரிய வஸ்துக்களுங்கொண்டுபோய் ஞானசற்குருவைக்கண்டு ஞானாசாரியரைத் தரிசனஞ்செய்து நன்றாக திரிகாலசுத்தியாக வணங்கினான் பூரித்துப்பணிந்தான்-எ-று இ-ம் ஈடணாத்திரயமான துன்பங்களினின்று நீக்கிய விவனுக்கின்பவடிவமான சற்குருதெரிசனமாயிற்றென்பதாம்.

அ-கை தரிசனஞ்செய்தஅவ்வாசிரியரிடத்திற்செய்யும்விண்ணப்பம்.

வணங்கிநின்றழுதுசொல்வான் மாயவாழ்வெனுஞ்சோகத்தா
லுணங்கினேனையனேயென் னுள்ளமேகுளிரும்வண்ணம்
பிணங்கியகோசபாசப் பின்னலைச்சின்னமாக்கி
யிணங்கியகுருவேயென்னை யிரட்சிக்கவேண்டுமென்றான்

இ-ள் வணங்கிநின்று பணிந்தெழுந்துநின்று அழுதுசொல்வான் கண்ணீர்சொரியவழுதுரைப்பான் மாயவாழ்வெனும் பொய்யானதுடும்பவாழ்க்கையென்னும் சோகத்தால் துன்பத்தினால்-உணங்கினேன்வாடினேன் ஐயனே எனதாசிரியரே என் னுள்ளம் எனதகம்குளிரும்வண்ணம் சீதளமாம்படிபிணங்கிய செறிந்திருக்கிற கோசபாசப்பின்னலை பஞ்சகோசமாகிய பந்தப்பின்னலை சினனமாக்கி தூளாக்கி இணங்கிகுருவேமுத்திநிலையடைவிப்பதற்குடன்பட்டிருக்கு மாசிரியரே என்னை அடியேனை இரட்சிக்கவேண்டுமென்றான் எ-று இ-ம் அறிவினன்மையால்வருமவ்வத்துன்பத்தைநீக்கி யறிவினால்வருமின்பத்தின் மூழ்கும்படிசெய்விக்க வாசிரியரை வேண்டிக்கோடலாம்.

அ-கை அங்ஙனம்வினவின சீடனைப்பரிசோதித்தல்.

அன்னைதன்சிசுவையைய னாமைமீன் பறவைபோலத்
தன்னகங்கருதிநோக்கித் தடவிச்சந்நிதியிருத்தி
யன்னதுபிறவிமாற்று முபாயமொன் றுண்டுசொல்வேன்
சொன்னதுகேட்பாயாகிற் றொடர்பவந்தொலையுமென்றார்.

இ-ள் அன்னை தாயையொத்த ஐயன்குருவானவர் தன்சிசுவை தன்னுடையசீடனை ஆமை கூர்மத்தைப்போல் தன்னகங்கருதி தனதுள்ளத்தினினைத்து மீன்மச்சத்தைப்போல நோக்கி பூரணதிஷ்டிவைத்து பறவைபோல் பட்சியைப்போல்தடவி ஹஸ்தமஸ்தகசம்யோகஞ்செய்து சந்நிதியிருத்தி எதிரிலிருக்கவைத்து உன்னதுபிறவிமாற்றும் உனதுபவத்துன்பத்தைநீக்கும் உபாயமொன்றுண்டு தந்திரமொன்றிருக்கின்றது சொல்வேன் உபதேசிப்பேன் சொன்னதுகேட்பாயாகில்போதித்தவண்ணங்கேட்டு நடப்பாயாகில் தொடர்பவஞ்சிருஷ்டிமுதற்றொடருஞ்சநநமானது தொலையுமென்றார்நீங்குமென்றருளினார்-எ-று ப-ம் விஷயத்தைநினைக்குமாகாமியத்தைக்கெடுத்தறிவையுணரும்படிசிந்தித்தாரென்பார் ஆமைபோற்கருதியெனவும் முன்பந்தப்பட்டிருக்கின்றசஞ்சிதமொழிந்து தனதுசுத்தமாத்திரமானதிருஷ்டிவரும்படி பார்த்தாரென்பார் மீன்போனோக்கி யெனவும்-பிராரத்தமாகவந்த பௌதிகவடிவுநித்தியானந்தமாக விளங்கத்தனது பூரணஞானமாகவியாபித்தாரென்பார் பறவைபோற்றடவியெனவுங்கூறினார். ௰௫

இ-ம் சமஸ்காரஞ்செய்தவாசிரியர் உபதேசிப்பதற்காக வகம்மதைகளுளவோ விலவோவெனவராய்ந்ததாம்.

அ-கை ஆசிரியர்வசனத்தின்மகிழ்ந்தன்புகூர்தல்.

தொடர்பவந்தொலையுமென்று சொன்னதைக்கேட்டநேரந்
தடமடுமூழ்கினான்போற் சரீரமுங்குளிர்ந்துள்ளாறி
யடருமன்பொழுகுமாபோ லானந்தபாஷ்பங்காட்டி
மடன்மலர்ப்பாதமீண்டும் வணங்கிநின் றீதுசொல்வான்.

இ-ள். தொடர்பவம் தொன்றுதொட்டுத்தொடாநின்ற சநநமானது தொலையுமென்று நீங்குமென்று சொன்னதை அருளியதை கேட்டநேரம் கேட்டபோதே தடமடு விசாலமான தடாகத்தில் மூழ்கினான்போல முழுகினவனைப்போல சரீரமுங்குளிர்ந்து தேகமுங்குளிர்ச்சியாயுள்ளாறி மனங்குளிர்ந்து அடருமன்பு நிறைந்தவன்பானதொழுகுமாபோல் கரையழித்துச்செல்வதுபோல் ஆனந்தபாஷ்பங்காட்டி இரண்டுகண்களிலுமானந்தபாஷ்பம்பெருக மடன்மலர்ப்பாதம் இதழ்விரிந்தகமலமலர்போன்றபாதங்களை மீண்டுந்திரும்பவும் வணங்கிபணிந்து எழுந்துநின்றுஈதுசொல்வான் இதனைச்சொல்லத்தொடங்குவான்-எ-று

அ-கை சீடன் விண்ணப்பத்திலுலகமின்றென்பதை குறிப்பினுலரிதல்.

சொன்னதுங்கேட்கமாட்டாத் தொண்டனுனுஞ்சுவாமி
நின்னதுகருணையாலே நீயென்னையாளலாமே
யுன்னதுபிறவிமாற்று முபாயமொன்றுண்டென்றீரே
யின்னதென்றதைநீர்காட்டி யீடேற்றலவேண்டுமென்றான்.

இ-ள், சொன்னதை போதித்ததை கேட்கமாட்டா கேட்டுநடக்கமாட்டாத தொண்டனானும் அடிமையானுலும் சுவாமி எனதெய்வமே நினதுகருணையால்தேவரீரது கிருபையினால் நீயென்னை தேவரீரடியேனை ஆளலாமே தடுத்தாளலாமே உனதுபிறவிமாற்றும் உனதுபவத்தைக்கெடுக்கும் உபாயமொன்றுண்டென்கிறீரே தந்திரமொன்றிருக்கின்றதென்றருள்செய்தீரே, இன்னதென்று - இத்தன்மையதென்று, அதை அவ்வுபாயத்தை நீர்காட்டி தேவரீர்காண்பித்து ஈடேற்றல் வேண்டுமென்றான் இரட்சிக்கவேண்டுமென்றான் எ-று. (இ-உ-க-ம்)
சீடனறிவுஎவ்வளவுநல்லமாணுலுமதன்கண்ணுதயமானவானந்தத்திற்கு விளக்கமாகவந்தை விளக்குதல்குருதுரியமாதலாற்குருவருளேவிளக்கவேண்டுமென்பதாம்.

அ-ஙை. அகப்பாவமின்றென்பதையறிந் தாத்மஸ்வரூபத்தையுபதேசிக்கத்தொடங்கல்.

அடங்கியவிருத்தியானென் றறிந்தபின்செறிந்தமண்ணின்
குடமதையுட்புழுமுன்னூதுங் குளவியின்கொள்கைபோலத்
தொடங்கியகுருவுமாமை சொரூபமேமருவவேண்டி
உடம்பினுட்சிவனைப்பார்த்துபதேசமோதுவாரே.

இ-ள். அடங்கியவிருத்தியானென்று விருத்தியடங்கினவனென்றறிந்தபின் தெரிந்தபின செறிந்த நெருங்கிய, மண்ணின்குடமதையுள் மட்கூட்டினுள்ளிருக்கின்ற, புழுமுன் - கிருமியின்முன்னே ஊதுங் குளவியின் சத்திக்குளவியினது கொள்கைபோல தன்மையைப்போல தொடங்கியகுருவும் உபதேசிக்கத்தொடங்கியவாசாரியரும், ஆத்மசொரூபம் - ஆத்மஸ்வரூபத்தைமருவவேண்டி சீடனடையும்பொருட்டு உடம்பினுள் தேகத்தினுள்ளிருக்கும் சிவனைப்பார்த்து சிவனைநோக்கிஉபதேசமோதுவார் உபதேசஞ்செய்வார் எ-று.

இ-ள் சீடனதுயதார்த்தஸ்வரூபத்தைப்பார்த்தவனாகவிளங்கும்பொருட்டனுக்கிரகிக்கத்தொடங்கினதாம். ௰அ

அ-கை, பலத்தை நீக்கும்பொருட்டுக்குண்டான காரணமும் பக்குவிற்குங்காலவளவையுங்கூறல்.

வாராயென்மகனேதன்னை மறந்தவன்பிறந்திறந்து
தீராதசுழல்காற்று செத்தைபோற்சுற்றிச்சுற்றிப்
போதகாலநேமிப் பிரமையிற்றிரிவன்போத
மாறாயுந்தன்னைத்தானென் றறியுமவ்வளவுந்தானே.

இ-ள். என் மகனே எனதுபுத்திரனே, வாராய்சேனாய் தன்னைமறந்தவன் தன்னாத்ம சொரூபத்தைமறந்தவன் பிறந்திறந்து-சனித்துமரித்து தீராதசுழல்காற்றுற்ற ஓயாதசுழல்காற்றிலகப்பட்ட செத்தைப்போல் சருகைப்போல் - சுற்றிச்சுற்றி அப்பவத்திற் சுழன்றுசுழன்று போதகாலநேமி நீங்காதகாலசக்கரத்தின்கண் பிரமையிற்றிரிவன சுழற்சியிற்சஞ்சரிப்பன்போதமாராயுந்தன்னை அறிவினாலாராய்ந் தறியுமாத்மாவை தானென்றுபிரமமென்று அறியுமவ்வளவும் தெரியுமட்டும்- எ-று. இ-ம் அறிவின்மையாலுண்டான பவமறிவுதயமாய்த்தன்னைத்தானெனவுணருமட்டு மிருக்குமென்பதாம். ௰௯

அ-கை மகாவாக்கிய வுபதேசப்பிரகாரம் அறியவேண்டியபொருளிதுவெனவுரைக்கிற்.

தன்னையுந்தனக்காதாரத் தலைவனையுங்கண்டானேற்
பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாய்ப்பிறப்புத்தீர்வ
னுன்னைநீயறிவாயாகி லுனக்கொருகேடுமில்லை
யென்னைநீகேட்டையாலே யிதுபதேசித்தேனே.

இ-ள் தன்னையும் கூடஸ்தனையும் தனக்காதாரத் தலைவனையுந்தனக்கிடமான பிரமத்தையும் கண்டானேல் தரிசிப்பானாயின் பின்னைபின்பு-அத்தலைவன்றானாய் அப்பிரமமேகூடஸ்தனாய் பிரமமாய் அக்கூடஸ்தனேபிரமமாய் பிறப்புத்தீர்வன் சனனநீங்குவான் உன்னைநீயறிவாயாகில் உனதாத்மஸ்வரூபத்தை நீதெரிந்து கொள்வாயானால் உனக்கொருகேடுமில்லை உனக்கொருகெடுதியுமில்லை என்னை எம்மைநீகேட்டையால் நீகேட்கின்றபடியால் இதுபதேசித்தேன் எனதனுபவமானவிதைச்சொன்னேன் எ-று.

ப-ம் கற்பதானதேகமுகத்திருதிபரியந்தம் ஒவ்வொன்றினுக்கியாமற்றானாய்த்தேடித்திருக்கின்ற பிரத்தியகாத்ம சைதன்னியத்தைத்தன்னையெனவும் அங்ஙனந்தேடித்தேகின அவைசளனைத்திலும் பூரணமான பிரமசைதன்னியமாய் விளங்குவதைத்தலைவனெனவும்அக்கேவிக்கிக்கேபக்கேபதாய் விளங்குஞ்சுத்தசைதன்னியந் தானாகுவதைபின்னையத்தலைவன்றானாய்ப் பிரமாமெனவும் அங்ஙனம் விளங்கியனுபவத்திற்றுகபாஸ்த மனமின்மையாற் சனனமரணமின்றென்பதைபிறப்புத்தீர்வனெனவுங்கூறினர். ௨௰

தேகியாரென்றான் சரீரியாரென்றுகேட்டான் பின்பின்பு அந்அவனை ஐயவத்தைகேட்டவையர்கேட்டவாசாரியர் பீடையும் ஞானமும் நகையும் பந்தகையுங்கொண்டனர் எ-று ப-ம் இத்தேகந்தானு யிருப்பவனோ பெக்மனமுய்விலக்கலாமென வாலோசிக்குமவருக்கமும் தேகந்தானென வறிந்தவன்றேகியையுந் தானென்றறிவனென்று மகிழ்ச்சியுங் கொண்டாரென்பார் பீடையுகையுங் கொண்டாரெனக் கூறினார் இ-ந் ஆசிரியர்தனதனுபவமான சுத்தசைதன்னியத்தைத் தரினென்றுகூறச் சீடன்தனக்கனுபவமான தேகந்தானையறித் தான்வேறுனதோவெனவினாவினதாம்.

அ-கை, தேகந்தானன்றதன் கண்ணுள்ளதேகியேதானென்பதுதனக்குத்தானேதோன்ற அர்த்தாந்தியங்களை யறிகின்றவன் யாரெனவாசிரியர்வினவுதல்.

தேகமல்லால்வேறேதேகியார் காணேனென்றாய்
மோகமாங்கனவில்வந்து முனைத்திமெவனூர்சொல்லாய்
சோகமாங்கனவுதோன்றாச் சுழுத்திகண்டவனூர்சொல்லா
யாகநீனவிலென்று மறிவுதானேதுசொல்லாய்.

இ-ள். தேகமல்லாமல் சரீரத்தையன்றிவேறே வேறுயுள்ள தேகியார்சரீரியார் காணேனென்றாய் யான்கண்டிலேனென்றாய் அங்ஙனமாயின் மோகமாம் மோகமாகிய கனவில்வந்து முனைத்திமெவனூர் சொற்பனத்திலுதித்தவன்யாவன் சொல்லாய் இதனைநீசொல்சோகமாங்கனவுதோன்றா மயக்கமாகிய சொற்பனந்தோன்றாத-சுழுத்தி கண்டவனூர் சுழுத்தியிற்சூனியமாகத் தரிசித்தவனூர் சொல்லாய் சொல்வாய்ஆக ஆகியவிவ்விரண்டையும் நீநனவிலென்னும் நீசாக்கிரத்திலிவைக்கும் அறிவுதானேதுசொல்லாய் அறிவுயாது எ-று, (இ-ம்) தேகத்தைத் தவிரதேகியொருவனுளனென்பது தோன்றவினவினதாம். உக

அ-கை தேகத்தின்கண்ணவத்தைகளை யறிகின்றதேகியொருவனுளனெனத் தோன்றுகின்றது அதனைவிளக்கவேண்டுமெனல்.

நனவுகண்டதுநான்கண்ட கனவுளநினைவுநீங்கிக்
கனவுகண்டதுயிரண்டுங் காணுதசுழுத்திகண்டேந்
தினமனுபவித்தலொக்குந் தெரியவுமில்லைசற்றே
மனதினிலுதிக்கும்பின்னை மறைக்குமதருளுவீரே.

இ-ள் நனவுகண்டதும் சாக்கிராவத்தையிற்பார்த்ததும்நான்கண்டநான்பார்த்த நனவளநினைவுநீங்கி சாக்கிரத்திலுள்ள நினைப்புநீங்கிக்

கனவுகண்டதும் சொற்பனத்திற்பார்த்ததும் இரண்டுங்காணுதநிவ்வி ருவத்தைகளின் றொழிவின்றிய சுழுத்திகண்டும் சுழுத்தி ரூபத்தை பார்த்ததும் இன மனுபவித்தல் நானொரு மனுபவிப்பதனால் ஒக்கும் தேவரீர் தேகியொன்றிருக்கின்று வென்றெளியதோவ்வும் தெரியவுமி ல்லே அதுபிரத்தியட்சமாகவுமில்லே சற்றேமனதினிலுதிக்கும் சற்றும னதிற்றோன்றுகின்றது பின்னேமறைக்கும் பின்பு மறைக்கின்றது அது வுயிரின் சுவரூபத்தை அருளுவீர் கிருபைசெய்வீர்-எ-று. கண்டதென் பதுகண்டுமெனவும் மறைபுமென்பது மறைக்குமெனவுந் திரிந்து நின் றன-இம் தானென்பது தேகமென்று தேகியவத்தைகளை முன்னி ட்டறிவிக்க வொருவாற்றானரிக்க சி மருது யின்மினிட்டோலத்தோ ற்றிமறைதலின தன யதார்த்த சுரூப மிக்கெனவிளங்க வனுக்கிரகிக் க வேண்டிக் கோடலாம்.

அ-கை. மூன்றேகாந்தராறுபிருத்தவனைக் கிருபித்து விலட்சப்படு த்திப்பின்னடுத்த விலக்கணையாக முன்பு சடமானதேக விலக்கணங்கூறி யஃதைநீக்கிப் பின்சித்தேகாளுன தேகியிலக்கணங்கூறத்தொடங்கல்

தாலத்தினமரங்கள்காட்டித் தனிப்பிறைகாட்டுவார்போ
லாலத்திறுடுக்கள்காட்டி யருந்ததிகாட்டுவார்போற்
றாலத்தைமுன்புகாட்டிச் சூக்குமசொரூபமான
மூலத்தைபின்புகாட்ட முனிவர்தொடங்கினுரே.

இ-ள். தாலத்தின் பூமியின்கணுள்ள மரங்கள்காட்டி தருக்களை க்காண்பித்து தனிப்பிறைகாட்டுவார்போல தனியான மூன்றாம்பிறை யைத்தரிசிப்பவர்போல ஆலத்திறுடுக்கள்காட்டி ஆகாயத்தின்கணுள்ள தாரகைகளைக்காட்டி அருந்ததிகாட்டுவார்போல் அருந்ததியைக் காண்பிப்பவர்போல தூலத்தைமுன்புகாட்டி தூலமாயுள்ளதத்துவங் களை முன்னே தரிசிப்பித்து சூக்குமசொரூபமான அணுவுக்கணுவான மூலத்தைக் காரணத்தை பின்புகாட்ட பின் தரிசிப்பிக்கமுனிவர்தொட ங்கினுர் ஆசிரியராரம்பித்தார்-எ-று. ஆலமென்பது ஆகுபெயர். உ௫

இ-ம் போதமாகும்படி போதிக்குமரபு கூறியதாம்,

அ-கை. தானாகிய சித்தைத் தனியே தரிசிப்பிக்குநிமித்தம் தன்னை ச்சுகசிவபரமாகத் தோற்றுவிக்குமாறோ யுக்தியையும் அத்துவிதமா னகூடத்த பிரமமாகத்தோற்றுவிக்கு மபவாதயுக்தியையுங் கூறத்தொ டங்கல்.

அந்தசத்துவத்திற் பிரதிபலித்த-பிரமச்சாயை- பிரமப்பிரதிபலன்மே அந்தரியாமி-அந்தரியாமியாம்-மாயை யெனக்குணங்களும் - மாயாசம் பந்தமான வெந்தக்குணங்களும்-பற்றுதோன்-பற்றாதேன்-பற்றாதவ னே-நிமித்தகாரணமீசன்-பஞ்சபூதபவுதிகமுதலியசிருட்டிக்கு நிமித்த காரணமாகிய வீசனும் எ-று. ௩௨

அ-கை. ஈசன் காரணசரீர வுற்பத்தியையுஞ் சீவனுற்பத்தியை யுங்கூறன.

ஈசனுக்கிதுசுழுத்தி யிதுவேகாரணசரீரங்
கோசமானந்தமாகுங் குணமிராசதமவித்தை
தேசறுமவித்தைதோறுஞ் சிற்சாயைசீவகோடி
நாசமாமுயிர்க்கப்போது நாமமும்பிராஞ்ஞனே.

இ-ள், ஈசனுக்கு-இவ்வீஸ்பரனுக்கு-இது-இம்மாயையே சுழுத்தி சுழுத்தியவத்தையாம்-இதுவே-இஃதே-காரண சரீரம்-காரணசரீரமாம் கோசமானந்தமாகும்-இதுவேயானந்தமயகோசமாம்-குணமிராசதம்ர சோகுணம்-அவித்தை-அவித்தையாம்-தேசறும்வித்தை தேசறும்விள க்கமின்றியவித்தைதோறும் பிரதிபலித்த-சிற்சாயை-ஞானப்பிரதிபல மே-சீவகோடி-சீவராசிகளாம்-நாசமாம்-பாவைபுமிறந்தசுழுத்தியைய பிமானிக்கும்-உயிர்க்கு-சீவர்களுக்கு-அப்போது-அவ்வவசரத்தில் நா மமும்பிராஞ்ஞனும்-பெயர் பிராஞ்ஞனும் எ-று. ௩௩

அ-கை சீவனதுகாரணசரீரவுற்பத்தியைக்கூறுகின்றார்.

அழுக்கொடுபெற்றுஞ்சீவர்க் கதுவேயானந்தகோசஞ்
சுழுத்திகாரணசரீரஞ் சொன்னவிம்மட்டுமோக
முழுக்குணத்திரண்டாலவந்தால் மூலவாரோபஞ்சொன்னோம்
வழுத்துசூக்குமவாரோ வழியுநீமொழியக்கேளாய்.

இ-ள், அழுக்கொடுபெற்றும்-அவித்தையைச்சேர்ந்திருக்கின்ற-சீவர்க்கு சீவர்களுக்கு-அதுவே-அவ்வித்தையே-ஆனந்தகோசம்- ஆனந்தமயகோசமாம்-சுழுத்தி-அதுவே-சுழுத்தியவத்தையாம்- காரணசரீரம்-அதுவேகாரணசரீரமாம்- சொன்னவிம்மட்டும்- சொல்லியவிதுபரியந்தம் மோகம்-மயக்கமாகத்தோற்றியபிரகிருதியின்- முழுக்குணத்திரண்டாலவந்தமுழுதுமானசத்துவரசோகுணத்திலுண்டான-மூலவாரோபம்காரணசரீரவத்தியாசத்தை-சொன்னோம்-உரைத்தோம்- வழுத்திருக்கும் வாரோபவழியும்சொல்லப்பட்ட சூக்குமசரீராத்தியாசமுண்டானமார்க்கத்தையும்-மொழிய-யாஞ்சொல்ல-நீகேளாய் நீகேட்பாய்-எ-று. ௩௪

சுத்தசைதன்னியச்சாயை அதனிடமாதலின்- அதனைப் பிரமகூடஸ் தவீசனும் அந்த சத்துவரசோகுணத்திற்றங்குதலில் அக்குணங்க

ளை மாயையவித்தையெனவும், அவற்றிற் பிரதிபிம்பித்தசாயை யாரோ பமாதலின் அவற்றைச்சீவேஸ்வரரெனவும் - அம்மாயையவித்தைகள் மேல்விளைவுக்குக்காரணமாதலின் அவைகளைக்காரண சரீரமெனவும் அவைகளிலவைத்தடங்கிநிற்றலை-சுழுத்தியவத்தையெனவும் அவைக ளிலன்புற்றுநிற்றலை-ஆனந்தமயகோசமெனவும் அவைகளையபிமானித் துநிற்பவரை-அந்தரியாமி பிராஞ்ஞனெனவுங்கொள்க (இ உ க ம்) சீ வேஸ்வரவுற்பத்தியும் அவர்களுக்குண்டான காரணசரீரவத்தியாசமு ங்கூறினதாம்.

அ-கை-சீவேஸ்வரர்களுக்குச் சூட்சுமசரீரமுண்டானமுறைமையை க்கூறுவான்றொடங்கி முன்புசத்திகளின் றோற்றமுரைத்தல்.

ஏமமாயாவிநோத வீசனருளினாலே
பூமலியுயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாகத்
தாமதகுணமிரண்டு சத்தியாய்ப்பிரிந்துதோன்றும்
வீமமாமூடலென்றும் விவிதமாந்தோற்றமென்றும்.

இ-ள், ஏமமாயாவிநோதமோகமாகிய மாயை விளையாட்டாகவுடை யவீசனருளினாலீஸ்வரனுடைய கிருபையினால்-பூமலி யுயிர்கட்கெல் லாம்பொலிவுமிகுத்தசீவர்களனைவர்க்கும் போகசாதனமுண்டாக-அ னுபோகசாதனமுண்டாகும்பொருட்டு தாமதகுணம் -தமோகுணமா னது-வீமமாமூடலென்றும் பயங்கரமானவாவரணமெனவும்- விவித மாந்தோற்றமென்றும் நானாவிதமாகும்விக்ஷேபமெனவும் இரண்டுசத் தியாய்ப்பிரிந்துதோன்றும் இருசத்திகளாய்ப்பிரிந்துதோன்றும்-எ-று.

உயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாக வென்பதனாற்சீவர்க ள்சமஷ்டியீஸ்வரனாதலின் அவ்வீஸ்வரனுக்குங்கொள்க.

அ-கை, விட்சேபசத்தியிற் றன்மாத்திரையான சூட்சுமபூதவுற்பத் திகூறல்.

தோற்றமாஞ்சத்திதன்னிற் சொல்லியவிண்ணும்விண்ணிற்
காற்றதாங்காற்றிற்றீயாங் கனலிநீர்நீரின்மண்ணும்
போற்றுமிவ்வைந்துநொய்ய பூதங்களென்றுபோருஞ்
சாற்றுமற்றிவற்றிற்போக சாதனதனுவுண்டாகும்,

இ-ள், தோற்றமாஞ்சத்திதன்னில் விட்சேபசத்தியில் சொல்லியவி ண்ணும், சொல்லப்படுஞ்சத்ததன்மாத்திரையான வாகாயமுண்டாம் விண்ணில் அவ்வாகாயத்தில் காற்றதாம்பரிசதன்மாத்திரையானவாயு

யுண்டாம் காற்றில் அவ்வாயுவில் தீயாம்-ரூபதன்மாத்திரையானவக்கி நியுண்டாம் கனலில் அவ்வக்கினியில் நீர் ரசதன்மாத்திரையானவப்பு ண்டாம் நீரில் அவ்வப்பில் மண்ணும் கந்தன்மாத்திரையான பிருதிவி யுண்டாம் போற்றும் போற்றப்பட்ட இவ்வைந்தும் இத்தன்மாத்திரை களைந்தும் நொய்யபூதங்களென்றுயோம் சூக்குமபூதங்களென்றுநாம ங்களாம்-சாற்றும் சொல்லப்பட்ட இவற்றில் இத்தன்மாத்திரைகளில் போகசாதனதனுவுண்டாகும் அநுபோகத்துக்குச்சாதனமான் சூக்கு மசரீரந்தோன்றும்-எ-று. ௩௬

அ-கை தன்மாத்திரையின் சத்துவகுணத்தில் அந்தக்கரணஞானே ந்திரியவுற்பத்திகூறல்.

ஆதிமுக்குணமிப்பூத மடங்கலுந்தொடர்ந்துநிற்குங்
கோதில்வெண்குணத்திலைந்து கூறுணர்கருவியாகு
மோதியபின்னைமைந்து முளப்புந்திரண்டாஞ்ஞான
சாதனமாமிவ்வேழுஞ் சற்குணப்பிரிவினாலே

இ-ள், ஆதிமுக்குணம்- உண்டானமூன்றுகுணங்களும் இப்பூதமட ங்கலும் இத்தன்மாத்திரைகளைந்திலும் தொடர்ந்துநிற்கும் கூடியிருக் கும் கோதில் குற்றமற்ற வெண்குலத்தில் சத்துவகுணத்தில் ஐந்துகூ றுவிஷ்டியானவைந்துபங்கும் உணர்கருவியாகும் ஞானேந்திரியங்க ளாம் ஓதிப்பின்னையைந்தும் சொல்லப்பட்டசமஷ்டியான வைந்துபங் கும் உளம்புந்திரண்டாம மனம்புந்தியெனவிரண்டாகும் சற்குணப் பிரிவினால் சத்துவகுணம்சமாதலால் இவ்வேழும் இந்தவேழும் ஞான சாதனமாம் அறிகருவிகளாம்-எ-று. ௩௭

அ-கை, தன்மாத்திரையின் ரசோகுணத்தில் வாயுகன்மேந்திரியங் களினுற்பத்திகூறல்.

இராசதகுணத்தில்வேறிட் டெடுத்தகூறைந்துமைந்தும்
பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிற்கன்மமென்றும்
பராவியபெயராமீதப் பதினேழுமிலிங்கதேகஞ்
சுராசுரர்நரர்விலங்காய்த் தோன்றியவுயிர்கட்கெல்லாம்.

இ-ள் இராசகுணத்தில் ரசோகுணத்தில் எடுத்தகூறைந்தும் எடுத் தொன்றாகவைத்தபங்கைந்தும் பிராணவாயுக்களென்றும் தனித்தனி யேயெடுத்தபங்கைந்தும் பெருந்தொழிற்கன்மமென்று பெரியகிரியை ச்செய்யுங் கன்மேந்திரியங்களெனவும் பராவியபெயராம் பரவியநாம ங்களாம் இந்தப்பதினேழும் இப்பதினேழுதத்துவங்களும் சுரர்தேவர்களு ம் அசுரர் அவுணர்களும் நரர் மனிதர்களும் விலங்காய்மிருகங்களுமாகி

தோன்றிய உண்டான உயிர்கட்கெல்லாம் சீவர்களனைவர்க்கும் இலிங்கதேகம் சூக்குமசரீரங்களாம் எ-று, சிலநூலாசிரியர் சூட்சுமதேகமிருபத்துநான்கு தத்துவமென்றதை இந்நூலாசிரியர் விடயமைந்தையும் ஞானேந்திரியத்திலடக்கியும் அகங்காரத்தையுஞ் சித்தத்தையு மனம் புத்தியிலடக்கியும் பதினேழாகக்கூறினாரெனக்கொள்க,

இ உ௧ம் சீவேஸ்வரருக்குண்டான சூக்குமசரீரத்தியாசங்கூறினதாம்,

(அ-கை) சூக்குமதேகத்தினால்வருங்கற்பனாநாமங்களைக்கூறல்,

இவ்வுடன்மருவுஞ்சீவர்க் கிலங்குதைசதனென்றாகு
மிவ்வுடன்மருவுமீசற் கிரணியகருப்பனாகு
மிவ்வுடலிரண்டுபேர்க்கு மிலிங்கசூக்குமசரீர
மிவ்வுடற்கோசமூன்று மிதுகனாவவத்தையாமே,

(இ-ம்) இவ்வுடல் இவ்வியஷ்டிசூக்குமதேகத்தை மருவுஞ்சீவற்குச்சேர்ந்தபிமானிக்குஞ் சீவனுக்கு இலங்குதைசதனென்றாகும் விளங்காநின்ற வபிமானிநாமத்தை சதனென்பதாம் இவ்வுடல் இச்சமஷ்டிசூக்குமதேகத்தைமருவுமீசற்கு சேர்ந்தபிமானிக்கின்ற ஈஸ்வரனுக்கு இரணியகருப்பனாகும் அபிமானிநாமமிரணியகருப்பனென்பதாம் இவ்வுடல்இச்சரீரம்இரண்டுபேர்க்கும் சீவேஸ்வரரிருவர்க்கும் இலிங்கசூக்குமசரீரம் சூக்குமசரீரமாம் இவ்வுடல் இச்சரீரத்துக்குக்கோசமூன்றும் பிராணமயமனோமயவிஞ்ஞானமய வெனக்கோசங்கண்மூன்றாகும் இது சனாவவத்தையாம் இதுசொற்பனவவத்தையாம் எ-று,

தன்மாத்திரைகள்சூக்குமாதலின் அவற்றைச் சூக்குமபூதமெனவும் அவற்றின்றடிப்பைச் சூக்குமதேகமெனவும் அதை யபிமானிப்பவர்களை இரணியகருப்பன் தைசதனெனவும் அக்கு பிராமணோச்சியஞ்செய்தலைச் சொர்ப்பனாவஸ்தையெனவும் அக்குபிராமணை புத்திகளாகத்தன்னை மறைத்தலைக் கோசங்களெனவுங்கொள்க, ௫௧

அ-கை பஞ்சபூதபௌதிகமானசகத்துற்பத்தியைக் கூறுவான்றொடங்கியதுண்டாகுதற்கேதுகூறுகின்றார்,

சூக்குமசகமிம்மட்டுஞ் சொல்லினோமிப்பாற்றூல
மாக்குமாரோபந்தானு மடைவினின்மொழியக்கேளாய்
தாக்குமிவ்வுயிர்க்குத்தூல தனுவும்போகமுமுண்டாகக்
காக்குமிவ்வீசன்பஞ்சீ கரணங்கள்செய்கின்றானே,

இ-ள், சூக்குமசகம் சூக்குமசரப்பிரபஞ்சத்தை இம்மட்டும் இதுபரியந்தம் சொல்லினோம் சொன்னோம் இப்பால்மேல்தூலமாக்குந்தூலபூதமுந் தூலதேகமுமுண்டாகும் ஆரோபந்தானும் அத்திரசத்தையும்

அடைவினில் இரமமாகமொழியக்கேளாய்-சொல்லக்கேட்பாய். தாக்குமிவ்வுயிர்க்கு சூக்குமசரீரத்திற்சேர்ந்திருக்கின்றவிச்சீவர்களுக்கு தூலதனுவும் தூலதேகமும் போகமும் அநுபோகமும் உண்டாக உண்டாகும்படி காக்குமிவ்வீசன் சீவருக்குப்போதுகாக்குமிவ்வீஸ்வரன் பஞ்சிகரணங்கள் பஞ்சீகரித்தலைசெய்தான் செய்தனன் எ-று தனுவும்போகமுமென்றவுமையால் அண்டமும்புவனமுங்கொள்க.

அ-கை. பஞ்சீகரமும் அவற்றலாகியகாரியமுங்கூறல்.

ஐந்துபூதமும்பத்தாக்கி யவைபாதிநந்நான்காக்கி
நந்துதன்பாதிவிட்டு நாலொடுநாலுங் கூட்ட
வந்தனதூலபூத மகாபூதமவற்றினின்றுந்
தந்தனநான்காந்தூல தனுவண்டபுவனபோகம்.

இ-ள் ஐந்துபூதமும்பத்தாக்கி தமோகுணப்பங்காகிய சூக்குமபஞ்சபூதங்களைப் பத்துபங்குசெய்து அவைபாதி அவற்றிற்பகுத்த பாதியைநான்காக்கி ஒவ்வொன்றைநான்குசெய்துநந்துதன்பாதிவிட்டு கேடில்லாத்தன்மாசனமானபாதிநீக்கி நாலொடுமற்ற நான்கொடுநாலுங்கூட்ட நான்கையுஞ்சேர்க்கவந்த அதூலபூதம் தூலபூதமுண்டாயின் மகாபூதமவற்றினின்றும் தூலமாகியவைகளினின்றுமதந்தன உண்டாக்கப்பட்ட அதூலதனு தூலசரீரமும் அண்டம் அண்டமும் புவனம் புவனமும் போகங்களுமாகியநான்குமாம் நான்காகும் எ-று.

அண்டமென்பது பஞ்சபூதசமஷ்டியெனவும் புவனமெனபது அவைகளினுள்ளபதப்பிராப்திஸ்தானங்களெனவுங்கொள்க.

இ உ-க-ம் சூட்சுமபூதத்தைப் பஞ்சீகரித்துத் தூலபூதமுமவற்றிற் றூலசரீரமுதலியநான்குந் தோன்றினவென்பதாம். ௪௧

அ-கை தூலதேகத்தினுல் வருங்கற்பனநாமங்களைக்கூறல்.

தூலமேமருவுஞ்சிவன் சொல்லியவிசுவனுக்குந்
தூலமேயமருமீசன் சூழ்விராட்புருடனுக்குந்
தூலமாஞ்சாக்கிரத்தைச் சொன்னதோரன்னகோசந்
தூலகற்பனையிதென்று தொகுத்ததுமனத்திற்கொள்வாய்

இ-ள் தூலமேமருவுஞ்சிவன் வியஷ்டிதூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கிறசீவனுக்கபிமானி நாம சொல்லிய சொல்லப்பட்ட விசுவனுக்கும்விசுவனென்பதாம் தூலமேமருவுமீசன் சமஷ்டி தூலதேகத்தைச்சேர்ந்தபிமானிக்கின்ற வீஸ்வரனுக் கபிமானிநாமஞ்சூழ் விராட்புருடனுக்குங்கூறாநின்ற விராட்புருடனென்பதாமதூலம் இவையிருவருக்குந்

இ-ம்,புவனமென்பது சகளீகரித்திருக்குங் கயிலாச முதலிய ஸ்தானமும் பூதங்களென்பது விராட்டுருவமுமெனக்கொள்க.

இ-உ-௩-ம் ஆரோபத்தையக்கிபதிஷ்டானத்தைத் தரிசிப்பித்ததாம்

அ-கை, அதிஷ்டானத்தைத்தவிர வாரோபமின்றெனல்,

பட்டுநூலும்போற்செய்தவணியும்பொன்னும்போய்பார்க்கிற்
கட்டுமண்ணும்போலொன்றுங் காரியகரணங்களொன்று
ளுடன்முதற்சபாவமீறு மொன்றிலொன்றிதவாதே
யடைவினிலொடுக்கிக் காண்பதபவாதவுபாயமாமே,

இ-ள். பட்டுநூலும் போல் படர்ந்ததுவும் போல செய்த பணியும் பொன்னும்போல்-செய்தவாபரணமுமாடகமும்போல கடமுமண்ணும்போல்-கலசமுமிருத்துவும்போல-பார்க்கிலபார்க்குமிடத்தில் காரியகாரணங்கள் காரியகாரணங்களிரண்டும் ஒன்றும் ஒன்றேயாம்-உடன்முதற்சுபாவமீறுப்-தூலதேகமுதற்பிரகிருதிபரியந்தம் ஒன்றிலொன்றுண்டான பிரகாரம அடைவினில் முறையாக ஒடுக்கி அடக்கி காண்பது சுத்தப் பிரமத்தைத் தரிசிப்பது அபவாத வுபாயமாம்அவ்வபவாதயுத்தியாம-எ-று.

இ-ம். தன்னிடத்திற் கற்பிதமான சகலவுபாயங்களைத் தன துருவமாக வொடுக்கிக் காண்பதே யபவாதவுத்தியென்பதாம். ௨௭

அ-கை-முற்கூறிய ஆவரணசத்திவிலக்கணங்யாதெனவினுதல்

தூடணதமத்தில்வந்த தோற்றமாஞ்சத்திசெய்யு
மீடணவிகாரஞ்சென்னீ ரிரண்டுசத்திகளென்றீரே
மூடலாஞ்சத்திசெய்யு மோகமுஞ்சொல்லுமையா
கேடறுங்குருவேயென்னக் கிருபையோடருள்செய்வாரே,

இ-ள் தூடணதமத்தில் வந்த தூசிக்கத் தக்க தமோகுணத்தி லுண்டான தோற்றமாஞ் சத்திசெய்யும விசேஷசத்தி செய்யா நின்ற ஈடணவிகாரஞ் சொன்னீர்-இகசாருப்பிரபஞ்ச முண்டானவேறுபாடுகளைச்சொன்னீர்-இரணடு சத்திக ளென்றீரே யிரண்டுசத்திக ளென்றுசொன்னீரே மூடலாஞ் சத்திசெய்யும் ஆவரண சத்தி செய்கின்ற மோகமுமயக்கத்தையுங் கேடறும் சத்தியமான குருவே ஐயா குருசாமியேசொல்லுமென்ன அருள வேண்டுமென்று கேட்க கிருபையோடு கருணையோடும் அருள்செய்வார்- ஆசிரியரனுக்கிரகிப்பார்-எ-று.

லாதாரஞ்சமம்விசேட மாமெனவிரண்டுகூறு
மாதாரஞ்சமமாமெங்கு மாரோடம்விசேடமாமே.

இ-ள். ஆதாரமறைந்துபோனால் விம்பமறையுமானால் ஆரோபமெங்கேதோன்றும் பிரதிவிம்பமெங்ஙனந்தோன்றும் ஆதாரமறையாதாயின்-விம்பமறைபவில்லையெனின் ஆரோபமில்லையேயென்றால்பிரதிவிம்பமில்லையேயெனின் ஆதாரம் ஆதாரமானது சமம விசேடமாமென சமமாமெனவும் விசேடமாமெனவும் இரண்டுகூறும் இரண்டுவகையாம் சமம் சமமானது எங்கும் எவ்விடத்துமுள்ள ஆதாரமாம்ஆதாரமாகும் விசேடம் விசேடமானது ஆரோபமாம் கற்பிதமாம்-எ-று.

ஆதாரமான சுத்தசைதன்னியப் பூரணமான கூடஸ்தபிரமமாகவிளங்குமிடத்திற்சமமெனவு மதனிலுதயமான வறிவுசிவேஸ்வரசத்தாகவிரிந்துகொடுக்குமிடத்து விசேடமெனவுமிங்ஙனமுதித்தொடுங்குமறிவுண்மையாயினுமக்கிரியைகண்மித்தையாதலி னவ்விசேடத்தை யாரோபமெனவுங்கொள்க. ௫௧

அ-கைக—இ-து.

சகமதிலிதுவென்சுட்டாச் சமானக்கண்மறைந்திடாது
மிகவுரைகயிறும்பாம்பும விசேடக்கணமறைந்துபோகு
மகமெனுஞ்சமானந்தன்னை யஞ்ஞானமறைந்திடாது
பகர்வதோர்விசேடஞ்சிவன் பரனெனுமவரைமூடும்.

இ-ள். சகமதில்உலகத்தின்கண் இதுவெனசுட்டப்படாத-சமானக்கண்-சமமாகியகண்கள் மறைந்திடாது ஒன்றுமறைக்க மறைபடாதுமிகவுரைகயிறும்பாம்பும் மிகவுஞ்சொல்லாநின்றபழுதையுஞ் சர்ப்பமாகிய விசேடக்கண் மறைந்துபோகும் விசேடமாகத் தோன்றினவையொன்றுமறைக்கமறைபடும் அதனைப்போல் அகமெனுஞ்சமானந்தனைதானென்னுங் கூடஸ்தபிரமத்தை அஞ்ஞானமறைத்திடாது அறியாமையான வாவரணமறைக்கமாட்டாது பகர்வதோர்விசேடம் சொல்லப்பட்டஓர்விசேடமாகிய சிவன்பரனெனும்சிவேஸ்வரரென்கிறஅவரைமூடும்-அவர்களைமறைக்கும்-எ-று. சிவன்பரனெனுமவரைமூடுமென்றது அவர்களுணர்வையெனவும் அஞ்ஞான மறைத்திடாதென்றது ஆவரணமறைத்திடாதெனவுங் கானலிருக்குமிடத்துச்சலந்தோற்றுதலும்அக்கானலாய்ப்பார்க்குமிடத்துதோற்றியுமில்லாததுபோல ஆதாரமிருக்குமிடத் தாரோபந்தோற்றுதலும் அவ்வாதாரமாய்ப்பார்க்குமிடத்து தோற்றியுமில்லாததே யாமெனவுங்கொள்க.

இ-ம், ஆரோபமான சிவேஸ்வரரைத் தமக்காதாரமான கூடஸ்தபிரமத்தைப்பார்க்கவொட்டாம லவரதுணர்வை யிவ்வாவரண மறைக்குமேயன்றி யாதாரத்தைமறைக்க மாட்டாதென்பதாம். ௫௨

அ-கை, அவ்வுணர்வை மனமுதலாகத்தோன்றின விட்சேபகாரிய மறைத்ததேயன்றி ஆவரணமெங்கே மறைத்ததெனல்.

கேவலநிலைதோன்றுமற் கெடுத்ததுபஞ்சகோசஞ்
சீவனுஞ்சகத்துமாகிச் செனித்தவிட்சேபமன்றோ
வாவரணந்தானேபாழ்நாத்த மென்றுரைத்ததேதோ
மேவருங்குருவேயென்று வினவினமகனேகேளாய்.

இ-ள். கேவலநிலைதோன்றுமல் முத்திநிச்சயந் தோன்றுமல் கெடுத்தது-அழித்தது-பஞ்சகோசம-பஞ்சகோசமும் சீவனும சிதாபாசனும் சகத்துமாகி உலகமுமாய் செனித்தவிட்சேபமன்றோ உண்டான விட்சேபமல்லவா அங்ஙனமிருக்க ஆவரணந்தானே ஆவரணமே பாழ் பாழெனவும் அனர்த்தமென்று அனர்த்தமெனவும் உரைத்ததேது சொல்லியதென்னமே வருங்குருவே யென்று அடைதற்கரிய வாசாரியரே யென்று வினவினமகனே கேட்டமாணாக்கனே கேளாய் நீகேட்பாய்-எ-று.

ஆனந்தமய கோசமுஞ்சீவனும் விட்சேபகாரியங்களல்லாதனவாயிருக்கவங்ஙனங் கூறியதென்னையெனின் அந்தக்காரணப்பிரதிபலன் சீவனும் அஞானியாமையானந்த மயகோசமு மாதலா லிங்ஙனங்கூறியதெனக்கொள்க. இ-ம், வெளிப்படை ௩௩

அ-கை, விட்சேபத்தினாலுண்டாகு நன்மையு மாவரண சத்தியினாலுண்டாகுந் தீங்கையுங்கூறுகின்றார்.

தோற்றமாஞ்சத்திதானே துன்பமாம்பலமானாலு
மாற்றலான்முத்திசேர்வார்க் கனுகூலசகாயமாகு
மூற்றமாமபகத்காலம்போ லுபகாரசிசியினுண்டோ
மாற்றமென்னுரைப்பேன்மைந்தா மறைப்பதுமிகப்பொல்லாதே

இ-ள், தோற்றமாஞ்சத்திதானே விட்சேப சத்தியே துன்பமாம் பலமானாலும் துன்பத்தைக் கொடுக்கின்ற தேக முதலியவைகளாலும் ஆற்றலான் முயற்சியினால் முத்திசேர்வார்க்கு வீடடைபவர்களுக்கு அனுகூலசகாயமாகும் அநுமிகவுஞ்சகாயமாம ஊற்றமாம் அறிந்தகுதவியாம் பகற்காலம்போல் இதனைப்போல உபகாரஞ்சகாயமானது நிசியினுண்டோ இரவினுளதோ மாற்றமென்னுரைப்பேன் நான் சொல்வேன் மைந்தா மகனேமறைப்பது மூடுகின்ற வாவரணம் மிகப் பொல்லாது மிகவும்பொல்லாததாம்-எ-று. ௩௪

அ-கை. இன்னுமதனை வற்புறுத்தல்,

சுழுத்தியிற்பிரளயத்திற் றோற்றமாஞ்சகங்காணடு
மழுத்தியபவம்போய்முத்தியடைந்தபேரொருவருண்டோ
முழுக்கவிட்சேபமெல்லா முத்தியிற்கூட்டுகிற்குந்
தொழுத்தவாவரணமுத்தி கூடாமற்கெடுத்தகேடே,

இ-ள். சுழுத்தியில் நித்தியப்பிரளயமாகிய சுழுத்தியிலும்பிரளயத்திலும் பிராகிருதப்பிரளயத்திலும் தோற்றமாஞ் சகங்களையாண்டும் உண

டாவைவுலக்முதலியவை கணசித்தும் அழுக்கிப்பவம்போய் நாற்கதியி லமிழ்த்தியசனன நீங்கி முத்திவீட்டை அடைந்தபேர்பெற்றவர்கள் ஒருவருண்டோ ஒருவருளரோ முழுக்கவிட்சேபமெல்லாம் முழுதும் விட்சேபகாரியமனைத்தும் முத்தியிற் கூட்டுகிற வீட்டிற்சேர்க்கும் தொழுத்த அறியாமை மிகுந்த ஆவரணம ஆவரண மானது முத்திகூடாமல வீட்டைச்சேராமல் கெடுத்ததே கெடுத்ததேடா ஞ-எ-று. பம்மனேகியர் ஞேயாற் பரமசுகத்தையடைதலின் விட்சேபமெல்லா முத்தியிற்கூட்டுகிற்குமென்றார்.

இ-உ-க-ம். முத்தியடைதற்கு அநிதலுள்ள விட்சேபந் சாதனமாமேயன்றி அறியாமையான வாவரணமாகாதென்பதாம்.

அ-கை, மித்தையான விட்சேபசத்தியினால் வெளிப்படு முத்தியு மித்தையேயாமெனி லக்ஷணமாகாதெனல்.

சுத்தியில்வெள்ளிபோலத் தோன்றியதோற்றமான
சத்தியும்பொய்யேயென்றார் சத்திசாதனமாவந்த
முத்தியும்பொய்யாமென்னின் மோகநித்திரையிலங்கா
னித்திரைதெளியுமாமோ னிருவாணநிலைமெய்யாமே

இ-ள். சுத்தியில்வெள்ளிபோல கிளிஞ்சிலி லரசிதாரோபம்போல தோன்றிய உண்டான தோற்றமானசத்தியும் விக்ஷேபசத்தியும் பொய்யேயெனறால் மித்தையாயின் சத்திசாதனமாவந்த அச்சத்திசாதனமாகவுண்டான முத்தியும் வீடும்பொய்யாமென்னில் மித்தையாமெனின் மோகநித்திரைவிலங்கால் மோகமானசொர்ப்பனசிம்மத்தினால் நித்திரைதெளியுமாபோல்நித்திரை தெளிந்து சாக்கிரம்வருவதுபோல் நிருவாணநிலை அச்சத்தியினாலுண்டாகு முத்திநிலையும்பொய்யாம் உண்மையேயாம்-எ-று.

இ-ஸ். மித்தையானசொர்ப்பனசிம்மத்தினால்உண்டானசாக்கிரந் சத்தியமானதுபோல மித்தையான விக்ஷேபசத்தியின் காரியமான நியனதிகளா லுண்டானவீடும் சத்தியமேயாமென்பதாம்: ௫௬

அ.கை, இச்சத்திகளின்காரணமானமாயைகளை நீக்குமாறுகூறல்.

இம்பரினஞ்சைநஞ்சா லிரும்பினையிரும்பாலெய்பு
மம்பினையம்பாற்பற்று மழுக்கினையழுக்கான்மாய்ப்பர்
வம்பியன்மாயைதன்னை மாயையான்மாய்ப்பர்பின்னைத்
தம்பமாயதுவுங்கூடச் சவஞ்சுடுகடிபோற்போமே.

இ-ள். இம்பரிற்நஞ்சை சர்ப்பக் கீண்டின விஷத்தை நஞ்சால் ஒளஷதமான விஷத்தினாலும் இரும்பினை அயத்தை இரும்பால் அரவயத்தினாலும் எய்யு மம்பினை விடு மம்பை அம்பால் அதற்குப் பகையான அம்பினாலும் பற்றுமழுக்கினை பிடித்த வழுக்கை அழுக்கால் அதை நீக்கு மழுக்கினாலும் மாய்ப்பர் கெடுப்பார்கள் அங்

இ-ள். தத்துவவிசாரஞ்செய்து தற்பததொம்பதம் விசாரித்து சகலசந்தேகமும்போய் எல்லாவையமுநீங்கி அத்துவிதந்தானுதல் கூட ஸ்தபிரமைக்கியமான வத்துவிதஸ்வரூபந்தானுக விளங்குதல் அபரோக்ஷஞானமாகும் அபரோக்ஷஞானமாம் சுத்தனுஞ் சிவபேதம் அகமபாவமான சீவேஸ்வரபேதம் கழிவதேநீங்கலே துக்கம்போதல் துக்கநிவர்த்தியாம் முத்தனுய் சீவன்முத்தனுய் எல்லாஞ்செய்துமுடித்ததுகிருத்கிருத்தியமானது ஆனந்தமாம்தடையற்றவானந்தமாம்-எ-று

இ-உ-க-ம். அஞ்ஞான மாவரணமிரண்டும அசுத்தமாயா சம்பந்தவிக்ஷேபம் பரோக்ஷ மிரண்டும் சுத்தாசுத்த மாயா சம்பந்தம் அபரோக்ஷமுதலிய மூன்றுஞ் சுத்தமாயா சம்பந்தமாம் அவைகளில் அபரோக்ஷஞானத்திஞல் பரோக்ஷமும் விக்ஷேபசத்தியின்காரியமான திரிஸ்யமும்துக்கநிவர்த்தியினுபாணமும் தடையற்றவானந்தத்திஞலஞ்ஞானமுநீங்கும் அவைகணீங்கவேயிவைகளுமங்களுநீங்கி நிரதிசயானந்தமாகத்தானே விளங்குமென்பதாம்.

அ-கை அச்சத்தாவத்தைகளை விளக்குநிமித்தந் தசபுமான் திட்டாந்தங்கூறல்.

இதுநினக்கறியும்வண்ணமிப்படிபொருதிட்டாந்தம்
புதுமையாங்கதைகேள்பத்துப் புருடரோராற்றைநீக்கி
யுதகதீரத்திலேறி யொருவனென்பதுபேரெண்ணி
யதனொடுதான்பத்தாமென் றறியாமன்மயங்கிநின்றான்

இ-ள். இது நினக்கறியும்வண்ணம் இதனுனக்குத் தெரியும்படி இப்படி இவ்வண்ணம் ஒருதிஷ்டாந்திரம் ஒருதிட்டாந்தமாகபுதுமையாங்கதைகேள் வியப்பானவோர் சரித்திரங்கூறுவன் கேட்பாய்பத்துப்புருடர்பதின்மர் ஓராற்றைநீந்தி ஓர்நதியைநீந்திஉதகதீரத்திலேறி நதிக்கரையிலேறி ஒருவன் ஒருபுருடன் ஒன்பதுபேரையெண்ணி அதனொடு அவர்களோடும் தானெண்ணின தான்பத்தாமென்றறியாமல்தசமனென்றுதெரியாமல் மயங்கிநின்றான்பிரமித்துநின்றான்-எ-று

அ-கை. திட்டாந்த மாட்டாந்திக்களுக் கொப்புமைகாட்டல்.

அறியாதமயலஞ்ஞா னமவனிலைக்காணேனென்றற்
பிறியாவாவரணமாகும் பீடைகொண்டழல்விக்ஷேப
நெறியாலன்றசமனுண்டு நிற்கின்றானென்றசொல்லைக்
குறியாகவெண்ணிநோக்கிக் கொள்வதபரோக்ஷஞானம்.

இ-ள், அறியாதமயக்கந்தன்னைத் தெரியாதமயக்கமே அஞ்ஞானம் அஞ்ஞானமாம் அவனிலை அத்தாமனிலையைக் காணேனென்றல் இல்லாமையாற் காணகிலேனெனல் பிறியாவாவரணமாகும் அரியாமைநீ

ஸ்ரோதவ்யாபரணம் பிடைகொண்டழல்-தசமனைக்காணேனென்று தன்
பழுற்றலறல் விட்சேபமாம் தெளியாளை வழிச்செல்வோனிவன்கரு
ணைதக்கண்டு தசமனுண்டு பதின்மனுள்ளன் நிற்கிறானென்ற சொல்
லை இவ்விடத்திருக்கிறானென்று சொல்லியவசனத்தை குறியாகவெ
ண்ணி குறிப்பாகநினைத்துநோக்கிக்கொள்வது அறிந்துகொள்வது ப
ரோட்சஞானமாம்-எ-று. ௬௨

இ-து.

புண்ணியபதிகன்பின்னும் புருடரொன்பதின்மர்தம்மை
யெண்ணியநீபத்தாவா னென்னவேதனைக்காணல்
கண்ணினிற்கண்டஞானங் கரைதல்போவதுநோய்போத
லின்னியமனத்திலைபங் தெளிதலானந்தமாமே

இ-ள். புண்ணியபதிகன் புண்ணியவானான நெறிச்செல்வோன் பி
ன்னும் பின்பும் புருடரொன்பதின்மர் தம்மைபூமான்களொன்பதுபெ
யரை எண்ணியநீ எண்ணினநீ பத்தாவாயென்னவே தசமனுமென்று
சொல்லவே தன்னைக்காணல் தன்னைத்தசமனுகக்காண்டல் கண்ணி
ற்கண்டஞானம் அபரோக்ஷஞானமாம் கரைதல்போவது அழுகைநீங்
கினதுநோய்போதல துக்கநிவர்த்தியாம் இன்னியமனதில் வனைமை
யானவுளத்தில் ஐயந்தெளிதல்சந்தேகந்தீர்த்தல் ஆனந்தமாம்தடைய
ற்றவானந்தமாம்-எ-று

இ-உ-க-ம் தசமன்றிட்டாந்தத்தினும் றன்னைமறந்ததனுல்வந்தவு
பாதிகளையும் தத்தரிசனத்தில் வைகணிக்கத்தையும் கூறினதாம். ௬௩

ஆ-கை தசமன்தன்னைத்தா னெனக்கண்டதுபோலத் தன்னைத்
தானுகத் தரிசிப்பிக்கவேண்டுமென்ற சீடனைநோக்கி மகாவாக்கியார்த்
தநிருபகத்தினு லத்துவிதமானதன்னை அறிவிக்கத்தொடங்கல்.

தெசபுமான்றனைக்கண்டாற்போற் றேசிகமூர்த்தியேயென்
னிசவடிவினையான்காண நீர்காட்டலவேண்டுமென்றான்
சுசிபெறுமிலக்கியார்த்தக தொம்பதர்தற்பதங்க
ளசிபதமைக்கியஞ்செய்யு மதிசயவுண்மைகேளாய்.

இ-ள் தெசபுமான் பதின்மனுள்வன் தனைக்கண்டாற்போல் தன்
னைக்கண்டதுபோல தேசிகமூர்த்தியே ஆசாரியரே என்னிசவடிவினை
என்தத்துவஸ்வரூபத்தை யான்காண நான்றரிசிக்கும்படி நீர்காட்டல்
வேண்டுமென்றுகேட்டான் தொம்பதத் தற்பதங்கள் நீயதுவென்னு
ம்பதங்களில் சுசிபெறுமிலக்கியார்த்தம் பரிசுத்தமான விலக்கியார் சுக
மான கூடஸ்தபிரமத்தின் ஐக்கியம் ஐக்கியத்தை அசிபதம் ஆனுயென்
னும்பதமானது செய்யும் காட்டும் அதிசயவுண்மைகேள் அற்புதமான
வுண்மைகேள் அற்புதமான வுண்மையைகேட்பாய்-எ-று.

அங்கை ஒன்றானசைதன்னியமே நான்குசைதன்யமாகத்தோன்
றுமெனல்

இ-ள். பிரிவதெப்படியென்றக்கால் அன்னமயமாகவே நீங்கு தெங்கனெமெனின் பிணமாகும் உடல் சடமாகின்ற தேகம் ஐயம்பூதவிகாரம் பஞ்ச பூதவிகார மாதலால் நானென்னுமறிவிலை அதனை நானென்கின்ற உணர்வை கொல்லல் வேண்டும் கெடுத்தல் வேண்டும் வெறியனோர் துருத்தி வெறுந்துருத்தியானது மூச்சுவிடுவதுபோல காற்றை விடுவதுபோல மூக்காலேறி பிராணனும் மூக்கினால் வீசும் பிராண வாயுவும் இராசதகுணவிகாரம் ரசோகுணத்தின் விகாரமாதலால் நீயல்லை நீயல்லை-எ-று, கஎ

அ கை இது.

காரணமானது புந்திகருத்தாவாமவையான்மாவோ
காரமுளவிரண்டுகோசஞ் சத்துவகுணவிகாரம்
வாமறுகனவானந்த மயமென்னுமொன்றுமே தே
விரவியதுவமஞ்ஞான விருத்திவிகாரமாமே.

இ-ள். காரணமானதுபுந்தி அந்தக்கரணமானமனமும் புத்தியும் கருத்தா அகம்பாவமுமாம் காரமுள பேதமுள இரண்டுகோசமனோமயகோசமும் விஞ்ஞானமயகோசமும் வாமறுகனவு இல்லாத சொப்பனமும் சத்துகுணவிகாரம் சத்துவகுண விகாரமுமாம் ஆதலால் அவையான்மாவோ அவ்விரண்டுமாத்மா வல்ல ஆனந்த மயமெனையும் ஆனந்தமயகோசமென்னுமொன்றையும் விரவி பொருந்திய கபடமான அஞ்ஞானவிருத்தியும் அவித்தியா விருத்தியினது விகாரமாம் விகாரமாகலால் நானென்றே ஆத்மாவென்று கருதாதே-எ-று. கஅ

இ-உ. கம் தேகமூன்றில் அவித்தைபரியந்தமான மூன்றுதேகம் மூன்றவத்தை மூன்றபிமானியும் பஞ்சகோசங்களையுந்தான் அன்றென நியத்திகளாக் காம்.

ஆ-னக நியதிகளாற்றநீயவ்விடத்திலுள்ளசுத்தசைதன்னியத்தைத் தரிசித்து வாழும்பொருட்டுப் பஞ்சகோச விலக்ஷண னுவாயெனல்,

சத்தொடுசித்தானந்தஞ் சுதந்திரஞ்சாட்சியேக
நித்தியம் வியாபியான்மா நீயதுவாயிருந்து
பொத்தொடுடந்துக்காதிப் பொருந்துபேதங்களான
சத்திரபஞ்சகோசக் குகைவிட்டுவெளியிலாவாய்.

இ-ள்-சத்தொடு சத்தும் சித்தும் ஆநந்தம் ஆநந்தமுஞ் சுவய் சயம்ம் திரம் திரமும் சாட்சி சாட்சியும் ஏகம் ஏகமும் நித்தியம் நி

த்தியமும் வியாபி பூரணமுமாகிவிளங்குவது ஆன்மா ஆத்மஸ்வரூப மாமாதலால் நீயதுவாய் கூடஸ்தனை பிரமம்பிரமமே கூடஸ்தனென வத்துவிதஸ்தமீபமாக அறிந்து தரிசித்து பொத்தொடு சடந்துக்காதி அனுதசடதுக்க முதலியவற்றை பொருந்துபோதங்களான அடையாகின்றவேறுபாடுகளுள்ளகுத்திரபஞ்சகோசக்குகைவிட்டுவஞ்சகமான பஞ்சகோசமாகியதேகத்தைநீங்கிவெளியிலாவாய்வெளிப்படுவாய்,

இ ள் பஞ்சகோசங்களைக் கண்டவைகட்கு விலட்சணனுவாயெ ன்பதாம்

அ கை விலட்சணமான விடத்தைப்பார்த்திவ் விருளோ டாவென னவினுதல்.

பஞ்சகோசமும்விட்டப்பாற் பார்க்கின்றபோதுபாழே
விஞ்சியதுவல்லாமல் வேறொன்றுந்தெரியக்காணே
னஞ்சனவிருளேயோகா னகமெனவனுபவிப்பேன்
வஞ்சமில்குருவேயென்ற மகன்மதிதெளியச்சொல்வார்,

இ ள்,பஞ்சகோசமும்விட்டு ஐந்துகோசமானமூன்றுதேகத்தை யுநீங்கி அப்பால் மேல் பார்க்கின்றபோது பார்க்கும்பொழுது பாழே விஞ்சியது சூனியமே சேஷித்திருக்கின்றது அதுவல்லாமல் அச்சூனியமேயன்றி வேறொன்றும்மற்றொன்றும்தெரிய தோன்ற ...னென பார்க்கிலேன் அஞ்ஞானவிருளேயோகரியஅந்தகாரத்தை நானகமென அனுபவிப்பேன் நானென்றனுபவிப்பேன வஞ்சமில்குருவேயென்ற உண்மையான வாசாரியரேயென்றுகேட்ட மகன்மதிதெளியசீடனறிவு தெளியும்படிசொல்வார்போதிப்பார் என்று அஞ்சனவிருளென்பது பிரகிருதியெனக்கொள்க.

இ ம் கிபநிகளை ... தனைக்காணுமல்கிபநிகளையப்பட்ட வரைக்கடோற்றுமைவிடத்தான் மேற்றவில்லையெனக்கலங்கி வினுவினதாம். எய

இ கை பிரகிருதியை நீங்கிச் சுத்தமாதன்னிடனுண தன்னைத்தரிசிப்பிக்கும் பொருட்டுருள்கடைவதைபாழு அவனைநீயெனக்காண பாயெனல்,

முன்புகறசமன்புத்தி மோகத்தாலெண்ணியெண்ணி
யொன்பதுபேரைக்கண்டு வொருவனுந்தனைக்காணுதை

பின்பவனிடையிற்கண்ட பெரியபாழவனேபார
யன்புளமகனேகாண்பதடங்கலுங்காண்பாநீயே.

இ-ள் முன்புகறசமன் முன்சொல்லிய பதின்மனுனவன் புத்தி மோகத்தால்-புத்திமயக்கத்தினல் எண்ணியெண்ணி நினைத்து நினைத்து ஒன்பதுபேரை-ஒன்பதுபெயர்களை கண்டவொருவனுக்தன்னைபார்த்தவொருவனுகிய தன்னைகாணுதபின்பு பாராதபின அவனிடையிற்கண்ட தன்னிடத்திலே தன்னைத்தசமனுகப்பார்த்த அவனே ஆவனுமெபெரியபாழ்-பெருப்பாலபாராய் பார்ப்பாய் அன்புளமகனே அன்புள்ளபுத்திரா காணபதடங்கலும் சூனியமுதலிய திரிஸயங்களனைத்தையுங்காணபவனீயேயாவாய்-எ-று,

இ-ம் அவ்விருளாகியவறியாமை நீயன்றதனைக்கண்ட ஞானமேநீயெனவறிவித்ததாம், எக

அ-கை அங்ஙனமதிஷ்டான சைதன்னியமான தனது சந்நிதியிற்சகலமுமுதித்தொடுங்குமெனல்.

தூலசூக்குமமஞ்ஞானந்தோன்றுமூன்றவத்தைதாமுங்
காலமோர்மூன்றுஞ்சன்மகடலெழுங்கலலோலங்கள்
போலவேவந்துவந்துபோனவெத்தனையென்பேனு
ஞலமர்கடவுளாணைபவைக்கெலாஞ்சாட்சிநீயே.

இ-ள் தூலசூக்குமமஞ்ஞானம் தூலசூக்கும காரணமாகிய சரீரத்திரவியங்களும் தோன்றுமூன்றவத்தை தாமும்தோற்றுநின்றசாக்கிரசொப்பன சுழுத்தியென்னு மவத்தாத்திரியங்களும் அவற்றையபிமானிக்கிர விசுவதைசதபிராஞ்ஞனுமான வபிமானத்திரவியங்களும் காலமேமூன்றும்திரிகாலங்களும் சனபம்பவமாகிய கடலெழுஞ்சாகரத்திலுண்டான கல்லோலங்கள் போலவே பேரலைகளைப்போலவே வந்துவந்து உண்டாகியுண்டாகி போனது அழிந்தன நான்யானெத்தனையென்பேன் எவ்வளவென்றுசொல்வேன் ஆலமலர்கடவுளாணைகல்லாலினிழலில் வசிக்குஞ்சற்குருவின்பேரிலாஞ்ஞைப்படிக்கு அவைக்கெலாம் அவைகளனைத்திற்கும் சாட்சிநீயே நீயேசாட்சியாகும் எ-று.

இ-ள் ஆரோபமான வவித்தைமுதலியவைகளினேகதேசரூபமஅவைகட்கதிஷ்டானமான வாழ்ம் ஞானவியாபகத்தையுந்தெரிவித்ததாம். எஉ

அ-ன்க அவ்வாதம் ஞானத்தைத்தவிர மற்றோர்ஞான மன்றென்பதையுறுதிப்படுத்து நிமித்தந்தன்னையறிவது தானேயெனல்.

எல்லாங்கண்டறியுமென்னையேதுகொண்டறிவேனென்று
சொல்லாதேசுயமாஞ்சோதிச்சுடருக்குச்சுடர்வேறுண்டோ
பல்லார்முன்றசமன்றனைப்பார்ப்பதுந்தனைக்கொண்டேயா
னல்லாதுபதினொன்றாமவனிடத்துண்டோபாராய்.

இ-ள் எல்லாம் அனைத்தையும் கண்டறியுமென்னை பார்த்தறிகின்றவென்னை ஏதுகொண்டறிவேனென்று எதைக்கொண்டறிவேனென்று சொல்லாதே உரையாதே சுயமாஞ்சோதி சுயஞ்சோதியான சுடருக்கு பிரகாசத்தை யறிவிப்பதற்கு சுடர்வேறுண்டோ பிரகாசமறுமுளதோ பல்லார்முன்-பலர்முன்னர் தசமன்றன்னை-பதின்மனை பார்ப்பதும்-காண்பதும் தனைக்கொண்டே தானல்லாது தன்னைக்கொண்டேயன்றி பதினொன்றும்-பதினொராம்புருடனும் அவனிடத்து-அத்தசமனிடத்து உண்டோபாராய்-உளதோபார்ப்பாய்-எ-று.

இ-ம் ஆத்மசைதன்னியமொன்றேயென்றறிவித்ததாம். ௭௩

அ-கை சர்வஞ்ஞசத்துவ கிஞ்சிஞ்ஞத்துவத்தையும் அறிவறியாமையையுநீக்கிச் சத்தசைதன்யத்தைத் தரிசிப்பித்தல்.

அறிவுக்குமறிவுசெய்யுமறிவுவேறுண்டென்றெண்ணி
மறிவற்றகுதர்க்கமூடர்க்கனைவக்கதைபலவாய்த்திரு
மறிபடுபொருணீயல்லையறிபடப்பொருணீயல்லை
யப்பொருளாகுமுன்னையனுபவித்தறிவாய்நீயே.

இ-ள், அறிவுக்கும் சுயஞ்சைதன்யத்துக்கும் அறிவுசெய்யுமறிவு அறிவுக்குஞானம் வேறுண்டென்று மற்றொன்றிருக்கிறதென்று எண்ணும் நினைக்கின்ற அறிவற்றகுதர்க்கமூடர்க்கு-உணர்வின்றியகுதர்க்கஞ்செய்யு மஞ்ஞானிகளுக்கு அனைவக்கதை-அனுவன்காதைதை பலவாய்த்திரும் பிரயோசனமாய்முடியும் அறிபடுபொருணீயல்லை-திரிஷ்யவஸ்துக்களுநீயல்லை அறிபடப்பொருணீயல்லை-அறியாமையான சூனியவஸ்துக்களுநீயல்லை அறிபொருளாகுமுன்னை-சைதன்யவஸ்துவான உன்னாத்மஸ்வரூபத்தை-நீயே நீ அனுபவித்தறிவாய்-அனுபவித்துணர்வாய்-எ-று.

இ-ம். துவிதமாகிய பாவுணர்வை நீக்கி யத்துவிதமான பாவுணர்விதுவென வுணர்த்தியதாம். ௭௪

அ-கை அப்பாவுணர்வே தானாகிவிளங்கிய சிதானந்தமே சர்வமாக விளங்குகின்றதென வுணர்த்துதல்.

மதுரமாஞ்சட்டிசுட்டமாய்ப்பணியாரமெல்லா
மதுரமாக்கிடவதற்குமதுரந்தான்சுபாவமன்றோ;

வந்துவிதுவெனுஞ்சடங்களறிவாகவறிவைத்தந்தே
யதுவிதுவிரண்டுமாகா வகம்பொருளறிவாய்நீயே.

இ-ள். மதுரமாங்கட்டி - தித்திப்பாகிய கருப்புக்கட்டிசேர்த்து சுட்டசூடப்பட்டமாப்பண்ணிகார மெல்லாம - மாப்பலகாரங்களத்தனையும் மதுரமாகிய - மதுரமாகச்செய்த அதற்கு அவ்வெல்லங்கட்டிக்கும் துரந்தான் - மதுரமானது சுபாவமன்றோ சுபாவமல்லவா அதுவென்னுஞ்சமஷ்டியும் - இது இதுவெனும் வியஷ்டியுமான சடங்கள் - திரிய வஸ்துக்களை அறிவாகஞானமாக அறிவைத்தந்து ஞானதிஷ்டியைக் கொடுத்து அதுவிதுவிரண்டுமாக சீவேஸ்வர துவிதமாகாத அகம்பொருள் தானேயேக வஸ்துவித்தியஸ்துவை அறிவாய் நீயே - தரிசிப்பாய் - எ-று.

இ-ள, தனதசத்தந்தவிர வேறொன்றுமில்லையெனத்தனதுவியாபகத்தை விளக்கியதாம். ௭௫

ஆ-ஙை. இவ்வத்துவிதநிலை சித்திக்கும்பொருட்டதிஷ்டானத்துக் கைக்கியமேயன்றி யாரோபத்துக்கைக்கிய மின்றெனல்.

இந்தநீதொம்பதத்தி னிலக்கியப்பொருளாமென்றும்
பந்தமிற்பிரமமேதற் பதத்தி னிலக்கியார்த்த
மந்தமாஞ்சீவேச னவாச்சியார்த்தரு
சந்ததம்பேதமாவார் தமக்கைக்கியங்கூடாதே.

இ-ள். இந்தநீ - இத்தன்மையுள்ள கூடஸ்தனாகியநீயேதொம்பதத்தின் - தொம்பதத்தினுடைய இலக்கியப்பொருளாம் லட்சியார்த்தமாம் என்றும் எப்போதும் பந்தமிற்பிரமமே மாயாரகிதமான பிரமமென்னுமதுவே தற்பதத்தனில் - தற்பதத்தினுடைய இலக்கியார்த்தம் - லட்சியார்த்தமாம் அந்தமாம் - தோற்றி நசிப்பதான சீவேசனவர்களோ சீவேஸ்வரர்களவர்கள் வாச்சியார்த்தம் வாச்சியார்த்தமாய்ச் சந்ததம் எப்போதும் பேதமாவார் தமக்கு பேதமாகிய சீவேஸ்வரர்களுக்கு ஐக்கியங்கூடாது ஏகமாதற்கூடாதாம் - எ-று.

பேதமாவார்க்கைக்கியங் கூடாதென்றதனால் அபேதமாவார்க்கைக்கியங் கூடுமென்றுமிற்று (இ-ம) மகாவாக்கியத்தி னிலக்கியார்த்தமான கூடஸ்தபிரமம் அபேதமாகலினவர்கட் கைக்கியங் கூடுமென்பதாம்.

ஆ-ஙக-இ-ஞ.

வேதமானதுவுக்கேளாய்ப் போராடுமிடங்களானு
போதருப்பாதியாலு முடலாலுமுணர்விறலும்

பாதலம்விசும்பும்போலப் பலதூரமகன்றுநிற்பா
ராதலாலிவர்கட்கென்று மைக்கியமென்பதுகூடாதே.

இ-ள். பேதமானதும்பேதமென்பதும்கேளாய்-கேட்பாய்பே ராலும்-சிவேஸ்வரரென்ன நாமங்களினாலும் இடங்களாலும் அண்டபி ண்டங்களாயிருக்கின்ற ஸ்தானங்களினாலும் ஓதருமுபாதியாலும்சொ ல்லுதற்கரிய காரணகாரியமான வுபாதிகளினாலும் உடலாலும் சமஷ் டிவியஷ்டியாகிய தேகங்களினாலும் உணர்வினாலும் சர்வஞ்ஞத்வகி ஞ்சிஞ்ஞத்துவமென்னு ஞானத்தினாலும் பாதாளவிசும்பும்போல பா தாளமும்விண்ணுலகமும்போலபலதூரம்-நானாவிதத்தினாலும் அகன்று நிற்பாராதலால் நீங்கிநிற்பார்களாதலால் இவர்க்கு இத்தன்மையுள்ள சிவேஸ்வரர்களுக்கு எந்நாளும் எப்போதும் ஐக்கியமென்பது-கலத்த லென்பது கூடாது கூடாதாம். எ-று.

இ-ம் மகாவாக்கியத்தின் வாச்சியார்த்தமான சிவேஸ்வரரிவ்விதம் பேதமாதலினவர்கட் கைக்கியங்கூடாதென்பதாம். ௭௭

அ-கை மகாவாக்கியார்த்தப்படி கூடஸ்தபிர்ம மேகமென்னும் பொருடோன்ற மூவிதவிலக்கணையைக் கூறுகின்றார்.

வடநூல்வல்லவர்கள் சொலலும்வாசகப்பொருள்சேராம
லிடராகிற்பொருளாம்வண்ண மிலக்கணையுரையார்கொள்வர்
திடமானவதுவுமூன்றாச் செப்புவார்விட்டதென்றும்
விடலிலாதென்றும்விட்டு விடாததென்றும்பேராமே.

இ-ள். வடநூல்வல்லவர்கள் கிரந்தகர்த்தாக்கள் சொல்லும்சாஸ் திரங்களிற் சொல்லாநின்ற வாசகப்பொருள்வாச்சியார்த்தத்தினால்சே ரமல் பொருள்பொருந்தாமல் இடராகின் தடையாயின பொருளாம் வண்ணம்-அர்த்தமாகும்பொருட்டு இலக்கணவுரையால இலக்கியார்த் தத்தினால்-கொள்வார் பொருள்கொள்வார்கள்திடமாக-திரமாகஅதுவும அவ்விலக்கணையையும் மூன்றாச்செப்புவார் மூன்றுவிதமாகச்சொல்லு வார்கள் விட்டதென்றும் விட்டவிலக்கணையெனவும் விடலிலாதென் றும்-விடாதவிலக்கணையெனவும்விட்டுவிடாததென்றும் - விட்டுவிடாத விலக்கணையெனவும் பேராம் நாமங்களாய்-எ-று. ௭௮

இ-ம் இலக்கணையினாமங்களைக் கூறினதாம்.

அ-கை அவற்றிற்குகாரணங்கூறல்

கங்கையிற்கோஷமென்றுங் கருப்புச்சேம்போடுதென்றுங்
தங்கியசோயந்தேவதத்த னென்றுஞ்சொல்வார்க

லிங்குதாரணங்களுக்கி யிந்தமூன்றுரைகளாலே
துங்கநூல்விரோதமான சொல்லெல்லாம்பொருளாந்தானே.

இ-ள். கங்கையிற்கோஷமென்றும்பாகீரதியிலிடைச்சேரியுள்ளனவும் கறுப்புச்சேப்போடென்றும் கருமைசெம்மைகள் செல்லுகின்றனவெனவும் தங்கிய தங்கனின்றசோயம் அவனேயிவனென, தேவதத்தனென்றுந் தேவதத்தனென்னுமோர்புருடனெனவுஞ்சொல்வார்கள் உரைப்பார்கள் இங்கு-இவ்விடத்து உதாரணங்களுக்கி உதாரணங்களாகக்கொண்டு இந்த மூன்றுரைகளால் இம்மூன்றிலக்கணப் பொருள்களினால் துங்கநூல் மேலானசாஸ்திரங்களில் விரோதமான - அர்த்தம் பொருந்தாமல் வேறுபடுகின்ற சொல்லெல்லாம் வாக்கியங்களனைத்தும் பொருளாம் அருத்தமாம்-எ-று.

ப-ம். கங்கைக்கணிடைச்சேரியென்னுமிடத்து கங்கையினிடத்திடைச்சேரியிருக்குமா அதன்கரையிலிருக்குமென்றகுறை விட்டுக்குறைக்கொள்வது விட்டவிலக்கணை யென்பார் கங்கையிற் கோஷமெனவும் கருமைசெம்மை செல்லுகின்றன வெனுமிடத்து வைகடனியேசெல்லும் கருமைநிறமாகியபசுவும் செம்மை நிறமாகிய குதிரையுஞ் செல்லுகின்றனவென்றந்நிறத்தைவிடாமல் அம்மாவைக்கொள்வது விடாதவிலக்கணையென்பார் கறுப்புச்சேப்போடு யெனவும்- அவ்விடமுமக்காலமுமவ்வேடமு மவ்வேடமுமுள்ளவனே இவ்விடமுமிக்காலமுமிவ்வேடமுமுள்ளவனென் அவைகளை நீக்கி யிப்புருடனை மாத்திரங் கொள்ளும்போது அவ்விடமுதலானவைகளை நீங்கி யிருப்புருடனை மாத்திரமிருக்கின்றதை விட்டுவிடாத விலக்கணை யென்பார் தங்கியசோய தேவதத்தனெனவும் இவ்விலக்கணைவாக்கியப்படி பொருள்கோடலே நூல்களனைத்திலுமுள்ள அவிரோதமான பொருள்கோடலென்பார் இந்த மூன்றுரைகளாலே துங்கநூல்விரோதமான சொல்லெல்லாம்பொருளாமெனவுங் கூறினர்.

இ-ம். தொம்பதார்த்தத்தைவிட்ட விலக்கணையாற்றரிசிக்க வேண்டுமெனபது தூலமுதல் வித்தைபரியந்தமான சரீரத்திரயங்களைவிட்டு அவைகட்கு விலக்ஷணமான கூடஸ்தசைதன்யத்தைத்தரிசிப்பதும் தற்பதார்த்தத்தைவிடாதவிலக்கணையாற் றரிசிக்கவேண்டுமெனபது சைதன்யம் ஆனந்தானுபூதியின்றி விளங்காமையால் இச்சைதன்யத்தை விடாமலானந்தோப்பிரயத்தைத்தரிசிப்பதும் அசிபதார்த்தத்தைவிட்டுவிடாதவிலக்கணையாற்றரிசிக்க வேண்டுமெனபது ஆனந்தமின்றியறி –

வும் அறிவிற்றியானத்ரூபமின்மையால் அவைகளின் பேதமானது விடக்கைக்கிட்டு அபேதமான அக்ஷரவஸ்துவை விடாமற்றிரட்டபதுமாம். எ௬

அ-கை-இது.

பன்னியசோயமென்னு பதங்களின் வாச்சியார்த்த
மன்னியதேசங்காலமவனிவனென்பவெல்லாந்
சொன்னவிவ்விரோதம்விட்டுத் தொகையிலக்கியம்விடாம
லுன்னிடிற்றேவதத்த னொருவனைவெளியாக்காட்டும்.

இ-ள். பன்னிய முன்சொன்ன சோயமென்னும் அவனேயிவனென்னும் பதங்களின் பவங்களுக்குவாச்சியார்த்தம் வாச்சியார்த்தமான அனிய-வேறான-தேயம்-தேசமும் காலங்காலமும் அவனிவனென்ப அவனிவனென்பனவாக சொன்ன சொல்லப்பட்ட இவ்விரோதமெல்லாம்-விரோதமாயுள்ள விலக்கணத்தையும்விட்டு விடுத்து தொகையில் முடிவில் இலக்கியம் விடாமலுன்னிடில இலக்கியார்த்தத்தைவிடாமற் சிந்திக்கில் தேவதத்தனொருவனை தேவதத்தனென்னுமொரு புருடனையேவெளியாக்காட்டும் பிரத்தியக்ஷமாகக்காண்பிக்கும்-எ-று.

இ-ம். இவ்விலக்கணையின் பொருளொருமையை நன்றாக தெரிவித்தாம். ௮௰

அ-கக இத்திஷ்டாந்தப்படி தாஷ்டாந்தத்தைவிளக்குதல்.

தத்துவப்பதங்கடாமுஞ் சாக்ஷியாப்பிரமமான
வத்துவைவிடாமற்பேத வாச்சியார்த்தத்தைவிட்டு
நித்தமுமதுநீயாகு நீயதுவாகுமென்னு
மர்த்தமுமகண்டமென்றே யசிபதமைக்கியங்காட்டும்.

இ-ள். தத்துவப்பதங்கடாமும் தற்பதந் தொம்பதங்களின் பேத வாச்சியார்த்தத்தைவிட்டு வாச்சியார்த்தமான பேதமாயுள்ள சீவேஸ்வரனைவிட்டு சாக்ஷியாய்ப் பிரமமான கூடஸ்த பிரமமானவத்துவை விடாமல் பொருளைவிடாமல் நித்தமும் எப்போதும் அதுநீயாகும் பிரமமேகூடஸ்தனும் நீயதுவாகுமென்னும் கூடஸ்தனேபிரமமென்னும் அர்த்தமும் பொருளும் அகண்டமென்றே ஒன்றென்று அசிபதம்அஸி யென்னும்பதமானது ஐக்கியங்காட்டும் அத்துவிதத்தைவிளக்கும் என

இ-ம் ஆசிரியருபதேசப்படி யாணநிட்சயமிருப்பது கொன்றுத வின்முடிவான மகாவாக்கியத்தினிலக்கியார்த்தமானகூடஸ்தபிரமத்தி னொருமையையுணர்த்தியதாம்.

அ-கை. இவ்வத்துவிதமான சுவானுபூதியேதாஞக விளங்குவா யெனல். ௮௧

கடநீரின்மேகநீரிற் கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங் கூடியொன்றுமெப்போது
மிடமானபிரமஞ்சாக்ஷி யிரண்டுமெப்போதுமேகந்
திடமாகச்சுவானுபூதி சிவோகமென்றிருந்திடாயே.

இ-ள் கடநீரில்கடசலத்திலும் மேகநீரில்மேகசலத்திலும் கண்ட வான்தோற்றுகின்றபிரதி விம்பாகாயமான இரண்டுபொய்யே இரண்டு மித்தையேயாம் குடவானும்கடாகாயமும்பெரியவானும்மாகாயமும் எ ப்போதுமெக்காலமும் கூடியொன்றும் கலந்தேகமாகும் அதுபோலஇ டமானபிரமம் வியாபகமானபிரமமும்சாக்ஷி கூடஸ்தனுமான இரண் டும் இரண்டுசைதன்யமும் எப்போதும் எக்காலமும்ஏகம் ஒன்றேயா மாதலின் திடமாகஸ்திரமாகசுவானுபூதிசுவானுபூதியாகிய சிவோகமெ ன்று சிவோகமென்றும் இருந்திடாய் இருப்பாய்-எ-று.

இ-ம் சுருதிகுருவாக்கியார்த்த மொன்றுபட்ட வத்துவிதமான சுத்தசைதன்யமேதாஞக விளங்குவாயென மௌனநிலையையுணர்த்தி யாசிரியர்மௌனமாயிருந்தாரென்பதாம். ௮௨

அ-கை குருவாக்கியப்படி சமாதியிற்றன்னைத்தரிசித்தல்.

தஞ்சமாக்குருவுஞ்சொன்ன தத்துவவழிதப்பாமற்
பஞ்சகோசமுங்கடந்து பாழையுந்தள்ளியுள்ளிற்
கொஞ்சமாயிருப்பும்விட்டுக் கூடஸ்தபிரமமென்னு
நெஞ்சமுநழுவியொன்றாய் நின்றபூரணத்தைக்கண்டான்.

இ-ள். தஞ்சமாம்-தனக்குயிர்த்துணையான குருவுஞ்சொன்ன ஆ சாரியனுக்கிரகஞ்செய்த தத்துவவழி-தற்பதத்தொம்பதசோதனை செ ய்தமார்க்கங்கள்தப்பாமல்தவறாமல் பஞ்சகோசமுங்கடந்துஐந்துகோ சங்கட்கும்விலட்சணனாய பாழையுந்தள்ளி அசங்கனங்கண்டசூனியத் தையுநீக்கி உள்ளில்-அகத்தில் கொஞ்சமாயிருப்பும்-அற்பமாகத்தோ ற்றிநிற்கின்றஸ்மரணத்தையும் விட்டுவிடுத்து கூடஸ்தபிரமமென்னு கூடஸ்தபிரமமென்கின்ற நெஞ்சமுநழுவி நினைவுமிறந்து ஒன்றாய்நின்ற

அத்துவிதமாயிருந்த பூரணத்தைக்கண்டான் பரிபூரணஸ்வரூபத்தை தரிசித்தான்-எ-று. ௮௪

அ—கை-சமாதிகூடிசுவானுபூதிமயமாதல்

அநுபவானந்தவெள்ளத் தழுந்தியேயகண்டமாகித்
தனுகரணங்களாதிச் சகலமுமிறந்துசித்தாய்
மனதுபூரணமாய்த்தேக மானசற்குருவுங்காண
நனவினிற்சுழுத்தியாகி நன்மகன்சுபாவமானான்.

இ-ள். அநுபவானந்தவெள்ளத்து சுபானுபவமாகியநிரதிசயானந்தசமுத்திரத்தில் அழுந்தி மூழ்கி அகண்டமாகி அகண்டாகாரமாய்தனுகரணங்களாதி தேகேந்திரியவந்தக் காரணமுதலியசகலமுமிறந்து அவைத்துநசித்து சித்தாய சின்மாத்திரானுபவத்தினால்மனதுபூரணமாய் மனம்பூரணமாகி தேகமானபூரணமேதிருவுருக்கொண்ட சற்குருவுங்காண ஆசிரியரும்பார்க்கும்படி நனவினிற்சுழுத்தியாகி நனவிற்சுழுத்தியையடைந்துநன்மகன் நற்சீடன் சுபாவமானான் தனதியல்பானஸ்வரூபமாக விளங்கினான்-எ-று.

இ உ-க—ம், சுருதிகுருவாக்கியப்படிசுவானுபவம் விளங்கிற்றென்பதாம். ௮௫

அ—கை-சமாதியினின்றும்வெளிப்படல்.

அளிமகனெடும்போதிவ் வாறனைபின்மனதுமெள்ள
வெளியில்வந்திடவுணர்ந்தான் விமலதேசிகனைக்கண்டான்
றுளிவிழிசொரியப்பாதந் தொழுதுவிழுந்தெழுந்துசூழ்ந்தான்
குளிர்முகச்சுவாமிகேட்கக் கும்பிட்டுநின்றுசொல்வான்

இ-ள். அளிமகன் கனிவுள்ளசீடனானவன் நெடும்போதுவெகுநேரம்இவ்வாறனைபின் இவ்வண்ணமாகவிளங்கினபின்பு மனதுஸ்வரூபசமஸ்காரமானமனதுமெள்ளவெளியில்வந்திட மெள்ளவச்சமாதியினின்றுந்துரியமாய்வெளிப்பட உணர்ந்தான் அறிந்தவனாய் விமலதேசிகனைநிர்மலமானவாசாரியரைகண்டான்பார்த்து விழிகண்கள் துளிசொரிய ஆனந்தபாஷ்பம்பொழிய பாதம்அவரதுபாதத்தில் தொழுதுவிழுந்துசாஷ்டாங்கமாகநமஸ்காரஞ்செய்து எழுந்துபின்பெழுந்துசூழ்ந்தான்வலம்வந்து குளிர்முக-பிரமானந்தம்விளங்குகின்ற முகத்தையுடையசுவாமிகேட்கஆசாரியர்கேட்கும்படி கும்பிட்டுநின்றுசொல்வான் சிரசின்மேலஞ்சலியோடுநின்றுதுதிப்பான்.

இ-ம் சமாதியநுபவசமஸ்காரத்தோடு சகசநிட்டைக்கு வெளிப்பட்டதாம். ௮௬

அ-௯௧, கைம்மாறுதாமேனெனக்குருவைத்துதிசெய்தல்.

ஐயனேயெனதுளேநின் றனந்தசென்மங்களாண்ட
மெய்யனேயுபதேசிக்க வெளிவந்தகுருவேபோற்றி
யுய்யவேமுத்திநல்கு முதவிக்கோருதவிநாயேன்
செய்யவேதொன்றுங்காணேன் றிருவடிபோற்றிபோற்றி,

இ-ள் ஐயனே ஆசாரியரே-எனதுளே நின்று-எனதகத்தினின்று அனந்தசென்மங்கள் அளவிறந்தபவங்கடோறும் ஆண்டமெய்யனே ஆளாகின்றகர்த்தனே உபதேசிக்க அனுக்கிரகிக்குநிமித்தம் வெளிவந்த குருவே மானிடவடிவுகொண்டெழுந்தருளியவாசிரியரே போற்றிவணங்குகிறேன் உய்யவே அடியேனீடேறும் பொருட்டு முத்தி நல்கு முதவிக்கு வீடளித்தசகாயத்திற்குஒருதவிஓர்கைம்மாறுநாயேன்செய்யஅடியேன்செய்ய வேதொன்றுங்காணேன மற்றொன்றுங்காண்கிலேன் திருவடிபோற்றிபோற்றி தேவரழகியபாதங்களைத்துதிக்கின்றேன்-எ-று.

அ-௯௨, சமாதியனுபவம்பெற்றசிட்டனைநோக்கிச் சகச நிட்டையனுபவமுதயமாம்பொருட்டுனதனுபவந்தடையின்றிவிளங்குமெனி லஃதேகைம்மாறெனக்கூறுதல்.

சிட்டனிவ்வாறுசொல்லத் தேசிகர்மகிழ்ந்துநோக்கிக்
கிட்டவாவெனவிருத்திக் கிருபையோடருளிச்செய்வார்
துட்டமாந்தடைகண்மூன்றுந் தொடராமற்சொரூபஞான
நிட்டனாயிருப்பாயாகில் நீசெய்யுமுதவியாமே.

இ-ள், சிட்டன் சீடனானவன் இவ்வாறுசொல்ல இவ்வண்ணந்துதித்துரைக்கத்தேசிகர் ஆசிரியரானவர் மகிழ்ந்துநோக்கி மகிழ்ச்சியுடன் பார்த்துக்கிட்டவாவெனவிருத்திசமீபத்தில்வாவென்றழைத்திருக்கச்செய்து கிருபையோடு கருணையோடும் அருளிச்செய்வார் அனுக்கிரகஞ்செய்வார் துட்டமாம்பொல்லாதவைகளாகிய தடைகண்மூன்றும் மூன்றுதடைகளும் தொடராமல் தொடர்ந்துவாராமல் சொரூபஞானநிட்டனாய்ஸ்வரூபசைதன்யசமாதியையுடையவனாய் இருப்பாயாகின்இருப்பாயானால் நீசெய்யுமுதவியாம் இஃதேநீயெனக்குச் செய்யுங்கைம்மாறும்-எ-று,

இ-உ-க-ம், தானெனவனுபவமான சுகபோதத்தைத்தவிரவேறு கருதாமலிருக்கவேண்டுமென்பதாம்.

அ-௯௩. அனுபவமான வத்துவித ஞானந்தடைகளினு நீங்குமோவென்ற சீடனைநோக்கி யவைகளுண்டே லனுபவந்திரமாக [illegible]

நீநானென் றிரண்டில்லாம னிறைந்தபூரணமாயென்று
கீளுசத்தெரிந்தஞான நழுவுமோ குருவேயென்றான்
றானாகும்பிரமரூபஞ் சற்குருநூலாற்றோன்று
மானாலுந்தடைகளுண்டே லநுபவமுரைத்திடாதே.

இ-ள், நீநானென்று நீயெனவுநானெனவும் இரண்டில்லாம னிறைந்த துவிதமின்றி யத்துவிதமாகவியாபித்தபூரணமாய்ப்பரிபூரணமாய்எங்கும்எவ்விடத்தும்காளுகைத்தெரிந்தஞானம் தானாகவிளங்கிய சைதன்யமானது குருவே ஆசாரியரே நழுவுமோவென்றான் நழுவுமோ வென்றுகேட்டான் தானாகும்பிரமரூபம் தன்மையானபிரமஸ்வரூபமானது சற்குருஆசாரியருபதேசத்தினாலும் நூலால் வேதாந்த சாஸ்திரங்களினாலும்தோன்றுமானாலும் உதிக்குமானாலும் தடைகளுண்டேல் தடைகளிருக்குமானால் அனுபவமுரைத்திடாது அவ்வனுபவந் திரப்படாது எ-று.

நீயென்பது முன்னிலையிற் குருவாக விளங்கிய மனந்த மெனவும் நானென்பது தன்மையினாற் சீடனாகவிளங்கிய வறிவெனவுங்கொள்க

அ-கை தடைகளையுமவற்றைநீக்கு முபாயங்களை கூறல்.

தடைகளேதெனிலஞ்ஞானஞ் சந்தேகம்விபரீதங்கள்
படர்செயுமிச்சமூன்றும பலசன்மப்பழக்கத்தாலே
வுடனுடன்வரும்வந்தக்காலுயர்ஞானக்கெடுமிவற்றைத்
திடமுடன்கெடுப்பாய்கேட்டல் சிந்தித்தற்றெளிதலாலே.

இ-ள் தடைகளேதெனில் அத்தடைகளியாவையென்றால்அஞ்ஞானம் அஞ்ஞானமும் சந்தேகம் சந்தேகமும் விபரீதங்கள்விபரீதங்களுமாம் படர்செய்யும் துன்பஞ்செய்யும் இச்சமூன்றும் இம்மூன்று தடைகளுஞ்சன்மப்பழக்கத்தால் அனந்தசென்மப்பழக்கத்தினால் உடனுடன்வரும்பலவடிக்கடிவரும் வந்தக்கால் ஆங்ஙனம்வருமாகின் உயர்ஞானக்கெடும் மேலானஞானமழியும் இவற்றை இத்தடைகளை திடமுன் ஸ்திரமாககேட்டல் சிரவணத்தினாலும் சிந்தித்தல் மனனத்தினாலும் தெளிதலால்நிதித்தியாசனத்தினாலும் கெடுப்பாய் நீக்குவாய-எ-று. அகூ

அ-கை தடைகளுளவாயினனுபவம் விளங்காதெனத் திருஷ்டாந்தமுகத்தாலறிவித்தல்.

அக்கினிகட்டுப்பட்டா லற்பமுஞ்சுடமாட்டாது
மக்கினஞானத்தாலே வந்தபந்தமும்வேவாது
இக்கெனப்பழகிக்கேட்டால் சிந்தித்தறெளிதலாலே
விக்கினமடஞ்சந்தேகம் விபரீதம்போக்குவாயே.

இ-ள். அக்கினிநெருப்பானது கட்டுப்பட்டால் யந்திரத்தினாலு ஷ்டசணத்திஸ்தம்பனமானால ஆற்பமும் சற்றுஞ்சுடமாட்டாது எரிக்க மாட்டாது அதுபோல மக்கினஞானத்தால் தடைகளினாற் பிரகாசக்கு ன்றினசித்தினால்வந்தபந்தமும்வரப்பட்ட திரிசிலாசயனையும்வேவாது விடாது ஆதலால் சிக்கெனபபழகி இடைவிடாமற் பழக்கஞ்செய்து கேட்டல்சிரவணத்தினால் விக்கினமடம் ஞானத்துக்குத் தடையாகிய வஞ்ஞானத்தையுஞ்சிந்தித்தல் மனனத்தினால் சநதேகம சந்தேகத்தை யுந் தெளிதலால் சுவானுபவ மாததெளிதலினால் விபரீதம் கற்பிதமா னதிரிசியத்தையும்போக்குவாய் நீக்குவாய் எ-று. ௬௰

பிரமபாவனையைமுடிப்பேதக்காட்டுவதஞ்ஞானங்
குரவன்வாக்கியநம்பாமற் குழம்பினமனஞ்சந்தேகந்
திரமறுசகமெய்யென்றுந்தேகநானென்றுமுள்ளே
விரவியமோகந்தானே விபரீதமென்பர்மேலோர்,

இ-ள் பிரமபாவனையைமூடி இருக்குஸ்மரணத்தை மறைத்துபே தங்காட்டுவது திரிசியத்தைக்காண்பிப்பது அஞ்ஞானம்அஞ்ஞானமா ம்.குரவன்வாக்கிய ஆசாரியருபதேசவாக்கியார்த்தத்தைநம்பாமல நம்பு தல்செய்யாமல் குழம்பினமனம் மனக்கலக்கம் சந்தேகம்சந்தேகமாம் திரமறுநிலையில்லாதசகமெய்யெனாலும் சகஞ்சத்தியமெனவுந் தேகநா னென்றும் சரீரம் யாமெனவும் உள்ளே மனத்தின்கண் விரவியமோக ந்தானேபொருந்தினமயக்கமே மேலோர்மகான்கள் விபரீதமென்பர் விபரீதமென்றுசொல்லுவார்கள்-எ-று, ௬௧

அவை அத்தடைகளைக் கெடுக்குங் கேட்டன் முதலியவைகளினி யல்புகூறல்,

தத்துவவனுபோகந்தான சாதித்தல்கேட்டலென்பா
ரொத்துளபொருளுக்கா னுசாவல்சிந்தித்தலென்பார்
சித்தமேகாந்தமான தரிசனந்தெளிதலென்பார்
சித்தமிப்படிசெய்தக்காணிர்வாணம்பெறுவாய்நீயே.

இ-ள், தத்துவவனுபோகந்தான்மகாவாக்கியார்த்தமானபிரமோ பதேசத்தைசாதித்தல் குருமுகமாகப்பெறுதலை கேட்டலென்பார் கே ட்டலென்றுரைப்பார்கள் ஒத்துளபொருள் அதனைக்கியார்த்தத்தையுசா சாவல்விசாரித்தலை சிந்தித்தலென்பார சிந்தித்தலென்று சொல்லுவா ர்கள் சித்தம் மனமானது ஏகாந்தமானதரிசனம்தனிமையான சுவானு

பூமியைத்தரிசித்தலே தெளிதலென்பார் மனிதனென்று சொல்லுவார்க ளிந்தம்மைஎப்போதும் இப்படிசெய்தாக்கால் இவ்வண்ண மனுசந்தித் தால்நிர்வாணம்முத்தியைபெறுவாய்நீ நீயடைவாய்-எ-று.

இ-உ-க-ம் அஞ்ஞானமுதலியதடைகளைக் கேட்டன் முதலியவு பாயங்களாற்கொடுக்கிற சுபாநுபவந்தடையின்றிவிளங்குமென்பதாம்

அ-கை அக்கேட்டன்முதலியவைகள் வேண்டுங்காலவளவுகூறல்

எத்தனைநாண்ஞாதாவுஞானமுமிருக்குமென்னி
லத்தனைநாளும்வேணுமெப்பாலோர்செயலும்வேண்டா
நித்தமும்வெளிபோற்பற்று ஞேயமாத்திரமாய்ச்சீவன்
முத்தரானவர்விதேகமுத்திபெற்றிருப்பரென்றும்.

இ-ள் எத்தனைநாள் எவ்வளவு காலம் ஞாதாவும் காண்பானும் ஞானமும் காட்சியும் இருக்குமென்னில் இருக்குமாகில் அத்தனைநா ளும்அவ்வளவுகாலமும்வேணும் இக்கேட்டன்முதலியமூன்றுவேண் டும் அப்பால் அதற்குமேல் ஓர்செயலும்வேண்டாம்அனுஷ்டானமும் வேண்டுவதில்லை நித்தமும் எப்போதும்வெளிபோல்நான்குபூதத்திலு ந்தாக்கற்றிருக்கின்ற வாகாயத்தைபோல பற்றுதிருசியங்களிற் பற்று தலிற்றும்ஞேயமாத்திரமாய் ஆத்மஸ்வரூபமாய் சீவன்முத்தரானவர் சீவன் முத்தியையடைந்தவர்கள் என்றும் எப்பொழுதும் விதேகமு த்தி விதேககைவல்யத்தைபெற்றிருப்பவர் அடைந்திருப்பார்கள்-எ-று

இ-ம் காண்பானுங் காட்சியுநீங்கி ஸ்வரூபந்தானாகிற பரியந்தங் கேட்டன் முதலியவைகளைப் பழகல்வேண்டுமென்பதாம்,

அ-கை அச்சீவன்முக்தர்கள் தொகையுநாமமுஞ் சொல்லியவர் களியல்புகூறத்தொடங்கல்,

ஞானமார்சீவன்முத்தர் நால்வகையாவர்கேளாய்
வானிகர்பிரமவித்து வரன்வரியான்வரிட்ட
னானவாமதீதாமவர்களிற்பிரமவித்தின்
றானமுமற்றைமூவர் தாரதம்மியமுஞ்சொல்வேன்,

இ-ள், ஞானமார் சீவன்முத்தர் ஞானநிறைந்த சீவன் முத்தர்கள் நால்வகையாவர் நான்குவிதமாவார்கள்கேளாய்அதனைக்கேட்பாய்வா னிகர் பிரமவித்து ஆகாயத்துக்கொப்பான பிரமவித்தெனவும் வரன்

பிரமவரனெனவும், வரியன்-பிரமவரியானெனவும் வரிட்டன் பிரமவரிட்டனெனவும் ஆனவர்கணமீசாம் ஆனவர்களுடைய பெரியவையாம் அவர்களில் அவர்களுக்குள், பிரமவித்தின்றனமும பிரமவித்தினிலையும்மற்றைமூவர் வினைபமூவருடைய தாரதம்மியமுஞ்சொல்லேன்தாரதம்மியத்தையுஞ்சொல்வேன்.எ-று.

இ-ம், வெளிப்படை.

ஆ-கை. சீவன்முத்தர்களிற்பிரமவித்தினிபல்புகூறல்
தீரராய்ப்பிரமவித்தாய்த் தெளிந்தவர்தெளியுமுன்னம்
வாரமாயிருந்தங்கள் வருணமாச்சிரமஞ்சொன்ன
பாரகாரியமானாலும் பலர்க்குபகாரமாக
நேரதாச்செய்வார்தீர்ந்த நிலைவிடாச்சீவன்முத்தர்.

இ-ள். தீரராய் தீரமுள்ளவர்களாய் பிரமவித்தாய் பிரமவித்தாய் தெளிந்தவர் தெளிவுற்றவர்கள் தெளியுமுன்னம் இங்ஙனந்தெளிவதற்குமுன்பு வாரமாயிருந்த உரிமையாயிருந்ததங்கள் தங்களுடையவருணமாச்சிரமம் வன்னாச்சிரமங்களைக்குறித்துச்சொன்னகன்மநூலாற்சொல்லப்பட்டவைகள் பாரகாரியமானாலும் வருத்தமானகருமங்களாயினும்பலர்க்குபகாரமாக யார்க்குமனுகூலமாக தீர்ந்தநிலைவிடா முடிவானநிச்சயத்தைவிட்டு நீங்காதசீவன்முத்தர் பிரமவித்தானவர்கள் நேரதாச்செய்வார் கிரமமாகவவற்றைச்செய்வார்கள்-எ-று.

இ-ம், பிரமவித்து லோகோபகாரநிமித்தஞ் சற்கருமமனுஷ்டிப்பானென்பதாம் ௯௫

ஆ-கை-இது.

காமமாதிகள்வந்தாலுங்கணத்திற்போனமத்திற்பற்றார்
தாமரையிலைத்தண்ணீர்போற்சகத்தொடுங்கூடிவாழ்வார்
பாமரரெனக்காண்பிப்பார்பண்டிதத்திறமைகாட்டா
ருமருமாவாருள்ளத்துவகையாஞ்சீவன்முத்தர்

இ-ள். காமமாதிகள்வந்தாலும் காமமுதலியவைகளொருபோது நேரிட்டாலும் கணத்திற்போம் அதிசாபிராரத்வமாககூதணத்தினீங்கும் மனத்திற் பற்றார் மனதில்லையார்கள் தாமரையிலைத் தண்ணீர்போல் கமலபத்திரோதகம்போல சுகத்தொடுங்கூடிவாழ்வார் உலகத்தாருடன்சேர்ந்துவாழ்வார்கள் பாமரரென் அஞ்ஞானிகளைப் போலகாண்பிப்பார் காட்டுவார்கள் பண்டிதத்திறமைகாட்டார் வித்துவத்திறத்

செய்வார்கள் பூதலம்புரப்பா பூமிபாலனைஞ் செய்தாலுஞ் செய்வார்கள் ஐயப்புகுந்துண்பர் பிணசூதலாங் கிடபுசித்தாலும் புசிப்பார்களே எ-று

இ-ம் பிரமவித்தொழிலைச்செய்யினும் அவைகள் பிராரத்வ கன்மமேயன்றிபவர்க்கில்லையென்பதாம். ௩௭

அ-கை இ-ஞ.

சென்றதுகருதார்நாளைச் சேர்வதுநினையார்கண்முன்
னின்றதுபுசிப்பார்வெய்யி னிலவாய்விண்வீழ்துநீந்தும்
பொன்றினசவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றுபாரார்
நன்றுதீதென்னார்சாக்ஷி நடுவானசீவன்முத்தர்

இ-ள் சென்றதுகருதார் முன்னிக்கினவைகளைநினைத்துவாளார்கள் நாளைச்சேர்வதுநினையார் எதிர்காலத்து வரும்பொருளை நினைத்துமகிழார்கள் கண்முனின்றதுபுசிப்பார் நிகழ்காலத்துள்ள பொருளைப்பிராரத்வமென்றநுவிப்பார்கள் வெய்யில் ஊஷ்ண கிரணமானது நிலவாய் அபூர்வகிரணமாய் விண்முழுதுவீழ்ந்தும் ஆகாயத்தினின்றுவிழுநாகவிறங்கினாலும் பொன்றின மரித்த சவம்வாழ்ந்தாலும் பிரேதஞ்சீவித்தாலும் புதுமையாய் அதிசயமாக ஒன்றும்பாரார் ஒன்றையுங்காணார்கள் நன்றுதீதென்னார் நன்றென்னுந் தீதென்றுஞ் சொல்வார்கள் சாட்சிசாட்சியாய் நடுவான மத்தியகதமாய் விளங்கிய சீவன்முத்தர்பிரமவித்துக்கள் எ-று,

ப-ம் முன்புள்ளவரிவன்மையும் பின்புள்ள கிரிசியவுணர்வையுங்காணாது நடுநிலையாகிய பாவநாவிற்சுகித்திருத்தலின் சென்றது கருதார்நாளைச் சேர்வதுநினையார்கண் முன்னின்றதுபுசிப்பாரெனவுஞ் சகல்விசித்திரமந்தன துவிலையாகக்கருதி அவைகளில்வியப்புறாதிருத்தலின்வெய்யினிலவாய் வினவிழுதுவீழ்ந்தும் பொன்றினசவம்வாழ்ந்தாலும் புதுமையாயொன்றும்பாராரெனவும் சர்வமுந்தனது சித்துருவமாக விளங்குதலின் நன்றுதீதென்னாரெனவும் பத்தியகத் சர்வசாட்சியானதானத்துவிதமாகவிளங்குதலின் சாட்சிநடுவான சீவன் முத்தரெனவுங்கூறினார்.

இ-ம் பிரமவித்துமனமடங்கியனுபவமாய் நிற்றலின் ஒன்றைக்கருதுதலும் வியப்புறுதலுமிலையென்பதாம் இந்நான்குசெய்யுளின் மூன்றிற் பிரமவித்தினியல்பைக் கூறினதெனக்கொள்க. ௩௮

அ-கை மற்றமூவரியல்பு.

அ

பின்னைமூவரிலிரண்டு பேர்களுஞ்சமாதியோகந்
தன்னையுற்றிருப்பார்தேக சஞ்சாரநிமித்தர்தானு
முன்னுவோன்வரனவேற் றோரா லுணர்பவன்வரியானுரு
மன்னியர்தம்மாற்றன்று லரியாதோன்வரிட்டனாமே.

இ-ள் பின்னைமூவரில் மற்றமூன்றுபேர்களில் இரண்டு பேர்களு ம்புரமவரன்பிரமவரியானென்னுமிரண்டு சீவன்முத்தர்களும் சமாதி யோகந்தன்னை சமாதிஞானத்தைத உற்றிருப்பார் அடைந்திருப்பார்கள் தேகசஞ்சாரநிமித்தர்தானும் தேகஞ்சஞ்சரிக்கும் பொருட்டு உன்னு வோன் உணவுமுதலியவற்றை நினைப்பவன்வரன் பிரமவரனும் வேற் றோரால் மற்றொருவரால் உணர்பவன் முன்சொல்லியவைகளைக் கொ ள்ளவரியாதவன் வரிட்டனும் பிரமவரிட்டனும்-எ-று.

பிரமவரிட்டன்சமாதியிலதிதமானவனைக்கொள்க.

இ-ம் பின்னுள்ளபிரமவரன் பிரமவரியான் பிரமவரிட்ட னிவர்க ளியல்பைக்கூறினதாம்.

அ-கை இந்நால்வர்பயன்களைக்கூறல்.

அரிதாகுமிவர்களிவ்வா றநேகரானுலுமுத்தி
சரியாகும்பாடுபட்ட சமாதிக்குபலனேதென்றூர்
பெரிதானதிட்டதுக்கம் பிரமவித்தனுபவிப்பன்
வரியானுவரனுமற்றை வரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார்

இ-ள் அரிதாகும் திரிலோகதுல்லயமாகும் இவர்கள் இச் சீவன் முத்தர்கள் இவ்வாறு இவ்வண்ணம் அநேகரானுலும்அநந்தரானுலும் முத்தி சரியாகும் வீடொரு தன்மையதாம் பாடுபட்டவருத்தமுற்றுச் செய்தசமாதிக்கு நிஷ்டைக்குபலனேதென்றால் பிரயோசன மியாதெ ன்னில் பெரிதானமகத்தான தரியானும் பிரமவரியானும் வரனும் பிர மவரனும் வரிட்டனும் பிரமவரிட்டனும் சுகமாய்வாழ்வார் நிரதிசயா னந்தமாகவாழ்வார்கள் மற்றைஏனையபிரமவித்து அச்சமாதியிற்பாடுப டாத பிரமவித்தானவன் திட்டதுக்கம் சேரிடுந்துன்பங்களை அனுபவி ப்பன்-எ-று.

இ-ம் இச்சீவன்முத்தர்கள் பிராரத்வத்தினுல்வருஞ்சுகதுக்கானு பவத்திற்றூரதம்மியராயினும்பிரமானந்தகைவல்யப்பேற்றிற்குறைவில தென்பதாம்.

அ-லை முத்தன்செப்த்தனியல்புகூறல்.

பிரமஞானிகளுங்கன்மப் பேதையர்போலேவாழ்ந்தாற்
றிரமுறுமஞ்ஞானம்போய்ச் செனியாதவழியேதென்னிற்
பாவுமாகாயமொன்றிப் பற்றுதுமற்றைநாலும்
விரவினதோடுங்கூடும் விதமுருதோருமாவார்.

இ-ள் பிரமஞானிகளுஞ் ஸ்வரூபஞானிகளுங் கன்மப்பேதையர்போல் கர்மிகளானவஞ்ஞானிகளைப்போல, வாழ்ந்தால் சீவித்திருந்தால், திரமுறுமஞ்ஞானம்போய்விலையாகத்தோற்றிய வறியாமைநசித்து செனியாத-இனிப்பிறவாத வழியேதென்னில மார்க்கமியாதென்றால் பாவுமாகாசம்-வியாபித்திருக்குங் ககனமானது ஒன்றிப்பற்றுது ஒன்றிலுந்தோயாதிருக்க, மற்றைநாலும் மற்றைநான்கு பூதங்களும்விரவினதோடுங்கூடும் ஒன்றுடனொன்று கலக்கும் விதம் இவ்விதமாக, இருவோரும் ஞானியஞ்ஞானிகளிருவரும் ஆவார் ஆகுவார்-எ-று.

இ-ம் ஞானியஞ்ஞானிகளின்கிரிகையொன்றாயினுங் கருத்துவேறென்பதாம்.

அ-லை சீவன்முத்தர்களின்றரிசனமகிமைசொல்லியவர்கள்விதேகமுத்தராமவழிசொல்லத்தொடங்கல்.

சீவன்முத்தரைசேவித்தோர் சிவனயனெடுமாலான்
மூவருமகிழுநோன்பு முழுவதுஞ்செய்துசன்ம
பாவனமாகுமென்று பலமறைமுழங்குவிப்பான்
மேவருஞ்சீவன்முத்தர் விதேகமுத்தியுநீகேளாய்.

இ-ள் சீவன்முத்தரை சீவன்முத்தர்களை சேவித்தோர் தரிசித்தவர்கள்சிவன் அரனும் அயன்பிரமனும்நெடுமால் திருமாலும் ஆன ஆகிய மூவருமகிழ மும்மூர்த்திகளுமகிழ்கூர நோன்புமுழுவதுஞ்செய்து தவங்களனைத்துமுடித்து சன்மபாவனமாகுமென்று பவம்பரிசுத்தமானார்களென்று பலமறைமுழங்கும் அநந்தவேதங்கண்முறையிடும் இப்பால் இனி மேவருஞ்சீவன்முத்தர் அறிதற்கரியசீவன் முத்தர்களுடையும்விதேகமுத்தியும் விதேகமுத்திபதத்தையும் நீகேளாய் நீகேட்பாய் எ-று. சன்மபாவனமாகுமென்பது ஞானதனுவாயினதெனக்கொள்க.

அ-லை தன்மந்திரமொழிகூறல்

பஞ்சினையூழித்தீப்போற் பலசங்விதவித்தாஞ்
சஞ்சிதமெல்லாஞானத் தழல்சுட்டுவெண்ணீறாக்குங்
கிஞ்சிலகாமியந்தான் கிட்டாமல்விட்டுப்போகும்
விஞ்சினபிராரத்வத்தின் வினையனுபவித்துத்தீரும்.

இ-ள் பஞ்சினை பஞ்சை ஊழித்தீப்போல் வடவாதலமெரிப்பது போல பலசந்மஅநந்தபவங்க ளுண்டாதற்கு விவிதவித்தாம் பலவித விதைகளான சஞ்சிதமெல்லாம் சஞ்சிதகன்மங்களனைத்தையும் ஞானத் தழல் ஞானக்கினியானது சுட்டுவெண்ணீறாக்கும் எரித்துவெண்மை யாகியசாம்பலாக்கும் கிஞ்சில் அற்பமும், ஆகாமியந்தான்மியகன்மமா னது கிட்டாமல்விட்டுப்போகும் நெருங்காமனீங்கும் விஞ்சின சேடித்த பிராரத்வத்தின்வினை பிராரத்வகன்மமானது அநுபவித்துத்தீரும் மூ ன்றுவிதமாக வனுபவித்துநீங்கும்-எ-று.

மூவிதமாவன இச்சைபனிச்சைபரவிச்சையென்பனவாம்

ஆ-கை இருவினை நீங்குமேதுகூறல்.

பொறுமையாற்பிராரத்வத்தைப் புசிக்குநாட்செயதன்ம
மறுமையிற்றொடர்ந்திடாமன் மாண்டுபோம்வழியேதென்னிற்
சிறியவரிகழ்ந்துஞானி செய்தபாவத்தைக்கொள்க
ரறிபவரறிந்துபூசித் தறமெலாம்பறித்துண்பாரே.

இ-ள் பொறுமையால் சாந்தத்தினால்பிராரத்வத்தைப் பிராரத்வ கன்மத்தைபுசிக்குநாள் அநுபவிக்குங்காலத்தில், செய்தகன்மஞ்செய் யுங்கருமங்கள், மறுமையில்மேற்பிறவியைக் கொடுப்பதற்கு தொடர்ந் திடாமல் தொடர்ந்துவாராமல் மாண்டுபோம் நசிக்கும், வழியேதென் னில்மார்க்கமியாதென்றால், சிறியவரிகழ்ந்து மூடாகணிந்தித்துஞானி செய்த ஞானவான்செய்யும், பாவத்தைக்கொள்வர், பாவகன்மத்தை ப்பெற்றுக்கொள்ளுவார்கள் அறிபவர் விவேகிகள் அறிந்துசிவஸ்வரூ பமென்றறிந்து பூசித்து ஆராதித்து அறமெலாம் அவர்கள் செய்யுந் த ருமங்களனைத்தையும் பறித்துண்பார் கவர்ந்தனுபவிப்பார்கள்.

ஆ-கை சரீரத்திரயவொழிபுகூறல்

அறியமெய்ஞ்ஞானத்தீபா லவித்தையாமுடனீராமே
பெரியதூலமுங்காலத்தாற் பிணமாகிவிழுமந்நேர
முரியசூக்குமசரீர முலையிரும்புண்டநீர்போற்
றுரியமாய்விபுவாய்நின்ற சொரூபத்திலிறந்துபோமே.

இ-ள் அரியமெய்ஞ்ஞானத்தினால் அரிதற்கரிய ஞானாக்கினியினால் அவித்தையாமு . னீரும் காரணசரீரசிக்கும் பெரியதூலமும் பருத்த தூலசரீரமும் காலத்தாற்பிணமாகிவிழும் காலநியமப்படிப்பிரேதமாம் அந்நேரம் அப்போது உரியசூக்குமசரீரம் சாதனத்துக்குரித்தான சூக்கும தேகமானது உலையிருப்பு கொல்லனுலையிற் காய்ந்த வயமானது உண்டநீர்போல கிரகித்தசலத்தைப்போல தூரியமாய்த்தூரியமாகவும் விபுவாய்நின்ற வியாபகமாகவுமிருந்த சொரூபத்திலிறந்து போம் பிரமஸ்வரூபணசிக்கும் என்று.

இது-கம் சஞ்சிதவினையுங்காரணசரீரமும் பரஞானத்தினாற்கெடுதலுமாகாமிவ்வினையுஞ் சூக்குமதேகமும் அஞ்ஞானத்திலயமாகுதலும் பிராரத்வகனமும் தூலதேகமு நியமித்தகாலவெளவிலீங்குசலுமாமென்பதாம்.

அ கை விதேகமுத்தியியல்புகூறல

கடமெனுமுபாதிபோனாற் ககனமொன்றானாற்போல
வுடலெனுமுபாதிபோன வுத்தரஞ்சீவன்முத்த
ரடிமுடிநடுவுமின்றி யகம்புறமின்றிநின்ற
படிநிகழ்விதேகமுத்திப் பதமடைந்திருப்பரென்றும்.

இ-ள் கடமெனும் குடமென்கிற உபாதிபோனால் உபாதி நீங்கினால் ககனமொன்றானாற்போல கடாகாயமுதலிய நான்குமேகமானதுபோல உடலெனும் மூன்றுதேகமென்கிற உபாதிபோனவுத்தரம் உபாதி நீங்கினக்ஷணம் சீவன்முத்தர் சீவன்முத்தரானவர் அடிமுடிநடுவுமின்றி ஆதிமத்யாந்தரஹிதமாய் அகம்புறமின்றி உட்புறமின்றி என்று நின்றபடிநிகழ் எப்போதுமிருந்தவண்ணம்விளங்குகின்றவிதேகமுத்திப்பதம் விதேக முத்திப்பதத்தை அடைந்திருப்பார் பெற்றிருப்பார் என்று.

ஆ கை அவ்வனுபவமெஞ்ஞான்றும் விளங்குவதெனல்

சொல்லியமகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்கமண்ணைக்
கல்லியபின்புதோன்றுங் கிணற்றினாகாயம்போல
வொல்லையாம்பிரமஞானா லுற்றதுபோலேதோன்று
மெல்லையினமெப்போது மேகமென்றிருக்கிடாயே,

இ-ள் சொல்லியமகனே முன்னனுடவஞ்சொன்னபுத்திரா எங்கும் எவ்விடத்தும் சூழ்வெளியிருக்க சூழ்ந்தவாகாயமிருக்க மண்ணைப்பூமியைக் கல்லியபின்பு அகழ்ந்தபின்பு தோன்றும் உண்டானதுபோலத்

தோற்றுகின்றகிணற்றினாகாயம்போல் கூபாகாசம்போல வெல்லையாம்பிரமம் அனுநிட்டாய்விளங்குகிற பிரமஸ்வரூபமானது நூலால் ஆத்மஞானசாஸ்திரங்களாம் உற்றதுபோலேதோன்றும் உதித்ததுபோலத்தோன்றும் எல்லையில பிரமாணாதீதமான நாம்சுத்தத்தைத்வன்னியஸ்வரூபமானமாய் எப்போதும் எக்காலமும் ஏகமென்றிழுந்திடாய்ஒன்றேயென்றிருப்பாய் எ-று.

இ உ கம் இப்போதுதித்ததுபோலத் தோற்றியவனுபவஞ் சிருட்டிக்கு முன்னும் பின்னுமறிவுமான வெப்போதுமிருந்துநித்தியதிருத்தியாக விளங்கிய சச்சிதானந்தமே யன்றியிப்போ துதித்ததன்றென்பதாம்.

அசைசத்தசத்தினுண்மையைத்தெரிவித்தல்.

கானனீர்கிளிஞ்சில்வெள்ளி கந்தப்பநகர்கநாவூர்
வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு
பிணமரந்தரிபுமானிப் பிரபஞ்சமெல்லாம்பொய்யே
ஞானமெய்மகனேயுன்னை நம்மாணைமறந்திடாதே.

இ-ள் கானநீர் கானற்சலம்போலவும் கிளிஞ்சில்வெள்ளிசுத்திகாரசிதம்போலவும் கந்தர்ப்பநகர் கந்தர்வநகரம்போலவும் காநாவூர்சொற்பநகரம்போலவும் வான்மை ஆகாய நீலம்போலவும் கயிற்றிற்பாம்பு ரச்சுசர்ப்பம்போலவும் மலடிசேய வந்தியாபுத்திரன்போலவும் முயலின்கோடு சசவிஷாணம்போலவும் பிணமாந் தறிபுமான பருத்ததாணு சோரனைப்போலவும் இப்பிரபஞ்ச மெல்லாம் பிரமத்திற்றோன்றுகின்றவிச்சகத் தனைத்தும் பொய்யே மித்தையேயாம் ஞானமெய்சுத்தசைதன்னியமொன்றுமேயுண்மையாம்மகனே மாணாக்கனேஉன்னை இங்ஙனம்விளங்கிய வுனதுஸ்வரூபசைதன்யத்தைநம்மாணைதமதாணைப்படிக்கு மறந்திடாதே மறவாமலதுவாய்விளங்குவாய்-எ-று.

இ-ம் எப்போதுஞ்சத்தான சுகபோதமிருக்கின்றதன்றிய சத்தானதிரிசியங்களிலவென்பதாம்.

தத்துவவிளக்கப்படலம்.

முற்றியது.

---



உ

சிவமயம்.

## இரண்டாவது

# சந்தேகந் தெளிதற் படலம்.

அ-கை முற்படலத்திற் றத்துவமானவானந்த பிரஞ்ஞையை நிஷ்டை பிரஞ்ஞையால் விளக்கியினிச்சொரூபபிரஞ்ஞையினுன் முற்கற்பனையாகத் தோற்றிய சீவேஸ்வரசகஞ் சிற்சுகாகாரமாக விளங்குவதைவிளக்கும் பொருட்டுச் சந்தேகந்தெளிதலைக் கூறுகின்றார்.

நார்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்ப
முறமுறக்குத்திக்குத்தி யுரப்பிக்குமுபாயம்போல
பரமமாஞ்சொரூபந்தன்னிற் பற்றியமனோவிருத்தி
திரநிலைபெறச்சந்தேகந் தெளிதலைமொழிகின்றேனே.

இ-ள். நார்மானிடர்கள் குழிபறித்து பள்ளம்கல்லிமெள்ளநாட்டிய மெள்ளவெடுத்துநட்ட நெடியகம்பம்நிலைகண்டஸ்தம்பமானதுஉரமுற யசைவின்றித்திரமாகநிற்கும்பொருட்டு, குத்திக்குத்திகுத்திக்குத்தி உரப்பிக்கும் பலப்படுத்துகின்ற உபாயம்போல் புத்தியைப்போல பரமமாஞ்சொரூபந்தன்னில் பிரமஸ்வரூபத்தில் பற்றியமனோ விருத்தி பொருந்திய சித்தவிருத்தியானது திரநிலைபெற திரநிலையை யடையும் பொருட்டு சந்தேகந்தெளிதலை சந்தேகந்தெளிதலை மொழிகின்றேன் சொல்கின்றேனென-று. இத்திட்டாந்தந்தூணைகநந்தியாமெனக்கொள்க

ப-ம். தானல்லாத விஷயங்களைநீக்கித்தானாகியபிரமத்திற்கலந்தமனம் அப்பிரமவியாபகமான பூரணவிருத்தியிற்சஞ்சரிக்குமிடத்திற் சர்வம்பிரமமயமென்னுஞ் சாக்ஷாத்காரா பவந் தடையின்றிவிளங்குவதேவிவகரித்தும் விவகாரியாத நிலையாதலின் அதற்குத்தடையாயுள்ளவைகளைக்களைதல் வேண்டுமென்பார் சொரூபந்தன்னிற்பற்றிய மனோவிருத்திதிரநிலைபெறச் சந்தேகந்தெளிதலென்றார் இ-ம. சித்தினிடத்திணிடத்துதயமாய்ப்பகிர்முகமின்றியச்சித்திற்கனாந்தமனமானதுசென்றவிடமெல்லாஞ் சிதானந்தமாகரமிக்கும்பொருட்டுச் சந்தேகந் தெளிதலைக்கூறத்தொடங்கினதாம்.

அ-கை குருகுலவாசஞ்செய்யுந்தன்மையைக்கூறல்

நற்கருத்துடையோனுகி ஞானவானுகிநின்றேன்
மர்க்கடநியாயம்போல மகாபூதவிகாரந்தொட்டு
நிர்க்குணவிதேகமுத்தி நிலைபரியந்தஞ்சொன்ன
சற்குருவினைவிடாமற் சந்ததமனுசரித்தான்.

இ-ள். நற்கருத்துடையோனுகிடேரானந்தமானசிந்தனையையுடையவனுய் ஞானவானுகி சைதன்ய ஸ்வரூபியாகி நின்றேன் இருந்தசிடனுமர்க்கட நியாயம்போல் மர்க்கடநியாயத்தைப்போல மகாபூதவிகாரந்தொட்டு பஞ்சபூதகாரியமானது தூலதேகமுதல் நிர்க்குண திரிகுணரகிதமானவிதேகமுத்திநிலைபரியந்தம்விதேகக்கைவல்லியமட்டும் சொன்னசற்குருவினை விடாமல் அருளியவாசாரியனைவிட்டு நீங்காமல் சந்தமனுசரித்தான் சதாகாலமுந்தொடர்ந்துநின்றான்.

இ-ம். வெளிப்படை. ௨

சந்ததம்புருடன்றன்னைச் சாயைபோவிடாமலன்பா
மைந்தனைநோக்கிசாகூி மாத்திரமாய்நின்றயோ
சிந்தையிலையமெல்லாந் தீர்ந்ததோதெளிவினுள்ளே
யந்தரங்கலந்ததுண்டோ வனுபவமுரைசெய்வாயே.

இ-ள். சந்ததம் எப்போதும் புருடன்றன்னை ஓர்புருடனை சாயைபோல் விட்டுநீங்காதசாயைபோத விடாமல் ஆசாரியனைவிட்டு நீங்காமல் அன்பாமைந்தனையவன்புருனமாய் நிற்கின்றசிடனைநோக்கி அருட்கணசாத்திசாகூிமாத்திரம் நின்றயோ பிரத்யேகாத்ம ஸ்வரூபமாக நிற்கின்றுபா சிந்தையில் மனதின்கணுள்ள ஐயமெல்லாம்சமுசயங்களனைத்தும் தீர்ந்ததே நீங்கினதோ தெளிவினுள்ளே தெளிவின்கண் அந்தரம்சிவேஸ்வர சகபேதம்கலந்ததுண்டோ சேர்ந்ததுமுளதோ அனுபவமுரைசெய்வாய் உனதனுபவத்தைச்சொல்வாய்-எ-று.

இ-ம். பேதமின்றித்தெளிவாக சுவானுபவமாய் விளங்குகின்றுயாவென முவகையாகவினுவினதாம். ௩

அ-கை மூன்வினுமூன்றற்கும் விடைகூறல்.

எனவுரைத்தருளுமாசா ணிருபதம்வணங்கியெந்தாய்
சசனவன்காட்டின்மோகத் தமத்தெழுபேதப்பேய்க
ளுனதருளுதயவெற்பி லுபதேசவருக்கன்றோன்றி
மனவிருடெரியஞான லாங்கதிர்பரந்தாலுண்டோ.

இ-ள். எனவுரைத்தருளும் என்று கேட்டருளிய ஆசான்றிருபதம் வணங்கி தேசிக ரூபயபதங்களை வணங்கிப்பணிந்து எந்தாய் என்னுடைய பிதாவே சன்னவன்காட்டில் வலிமையான பலாரண்யத்திலிருக்கும் மோகத்தமத்து மோகாந்தகாரத்தில் எழும் தோன்றுகின்ற பேதப்பெயர்கள் பேதங்களென்னும் பிசாசங்கள் உனதருளுதயவெற்பில் தேவரீரது கருணையென்னு முதயகிரியில் உபதேசவருக்கன்றோன்றி ஸ்ரீமோபதேசமென்னுஞ் சூரியனுதித்து மனவிழிதெரியக்கண்விளங்க ஞானவான்கதிற் மேலான சிற்பிரகாசமானது பரந்தல் வியாபித்தால் உண்டோ இருக்குமோ-எ-று,

ப-ம். சாட்சிமாத்திரமாய் விளங்குகின்றதென்பார் உபதேசவருக்கன்றோன்றியெனவும் சிந்தையிலையமெல்லாந்தீர்க்குதென்பார் மனவழிதெரியவெனவும் அந்தரமானபேத முதிக்கவில்லையென்பார் ஞானவான்கதிர்பார்ந்தா லுண்டோவெனவுங்கூறினார்.

இ-ம், தனதனுபவத்திற்சந்தேக விபரீதமென்பதையறிவித்தாம்.

அ-கை, சமாதியிற்றடை யின்றியினுஞ்சகசத்திலவையின்றி நிற்பதற்கு வினவேண்டுவ துண்டெனல்.

மந்திரமூர்த்திதன்னான் மாற்றியபேய்போனாலு
மெந்திரமெழுதிகட் டியினிவாராவகைசெய்வார்போன்
முத்தியுன்னுபதேசத்தான் மோகம்போனாலுமையா
புந்திநின்றுரைக்கவின்னம் புகலும்விண்ணப்பமுண்டே.

இ-ள். மந்திரமூர்த்திதன்னால் மாந்திரிகனால்மாற்றியப்பேய்நீக்கின பிசாசமானது போனாலும் நீங்கினாலும் எந்திரமெழுதிக்கட்டி எந்திரஸ்தாபனஞ்செய்து இனிவாராவகை மேல்வாராத வண்ணம் செய்வார்போல் செய்பவர்களைப்போல முத்தி முன்னமே உன்னுபதேசத்தால் தேவரீரனுக்கிரகத்தினால் மோகம்போனாலும் மயக்கநீங்கினாலும் ஐய எனதாசிரியரே புந்திநின்றுரைக்க அறிவினிலைபெறும் பொருட்டு இன்னம்மேலும் புகலும்விண்ணப்பமுண்டு அடியேன் கேட்கும் விண்ணப்பமுள்ளது-எ-று.

இ-ம். சகசத்துக்குத்தடையாயுள்ள சந்தேகங்களை நீக்கும்பொருட்டு வினவத்தொடங்கினதாம்.

அ-கை சீடன்றனக் கனுபவமான பிரம்மவஸ்து மனோவாக்குக்க கோசராகோசரமாவென விதிமித்த மங்ஙனங்கூறுஞ் சுருதிவாக்கியத்தை யிரண்டுசந்தேகமாகவினவுதல்.

ஆகமப்பிரமாணத்தா லறியென்றும்வாக்குக்கெட்டா
தேகமாம்பிரமமென்று மிதயத்தா லுணர்வாயென்றுஞ்
சோகமாமனதிற்கெட்டாச் சுயஞ்சோதியென்றுஞ்சொன்னீர்
மோகமாமிரண்டுசங்கை முளைத்தனபறித்திடீரே.

இ-ம். ஏகமாம்பிரமம் அத்துவிதப்பிரம்மத்தை ஆகமப்பிரமாணத்தால் வேதமுடிவானமகாவாக்கியப்பிரமாணத்தினால் அறியென்றும் அறிவாயெனவும் வாக்குக்கெட்டாதென்றும் இவ்வேதவாக்கியத்துக் கெட்டமாட்டாதெனவும் சுயஞ்சோதி இச்சுயம்பிரகாசத்தை இதயத்தா லுணர்வாயென்றும் மனதிலறிவாயெனவும் சோகமாமனதிற்கு துன்பமானமனதிற்கு எட்டாதென்றும் அரிகற்கரியதெனவும் சொன்னீர் அருளினீர் மோகமாம்மயக்கமாகிய இரண்டுசங்கைகளுள்வாயின பறித்திடீர்-எ-று. பிரமவஸ்து மனோவாக்குகளுக் ககோசரமுங் ககோசாமுமாமென வேதங்கூறுவதை ஆசிரியர் கூறினதாகக்கொண்டு வினவினதென்க.

இ-ம். வெளிப்படை.

அ-ளக. முதற்சங்கைபிற் பிரமஞ்சுருதிக் ககோசரமாமென்றதற்குத்தரங்கூறல்.

மற்றைமுப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங்கூடாதே
யுற்றதோர்விடையம்பூத முபயமன்றுதலாலே
குற்றமாங்குணவிசேடங் கூடாமலிருக்கையாலே
யிட்டதுவாக்குக்கெட்டா தென்பதுமறிவாய்நீயே.

இ-ள். மற்றமுற்பிரமாணத்தால் ஏனையமூன்று பிரமங்களினாலும் வஸ்துநிர்ணயங்கூடாது ஸ்வரூப நிச்சயத்தையறிதற் கூடாவாய்உற்றதோர்விடையம் பிரத்தியக்ஷமெதிரிலேதோர் விஷயமாதலானும் பூதம் அனுமானங் காரியத்தைக்கொண்டறியப்படுங்காரணமாதலானும் உபயம் உபமானமும் முப்பேபவுபமானமென்னு மிரண்டாதலானும் அன்றுதலால் கூடாதலால் குற்றமாம் அவைகளாலறியலாமென்பதும் பிழையேயாம் குணவிசேடங்களானவை கூடாமலிருக்கையால் சேராதிருக்கின்றபடியால் இற்றது இத்தன்மையானவப்பிரமம்வாக்குக்கெட்டாதென்பதும் சத்தமாகிய வேதங்களுக்கதீதமென்பதும் அறிவாய்நீ தெரிந்துக்கொள்வாய்-எ-று.

இ-ம். பிரமம்அகோசரமென்பதை யுறுதிப்படுத்துநிமித்தமாக்கூறதவியநான்கு பிரமாணங்களினாலும் மறியக்கூடாதெனவறிவித்ததாம்

அ-கை அச்சங்கையிற் பிரமஞ்சுருதிக்குக்கோசரமா மென்றதற் குத்தரம்.

வாக்கியங்களைக்கெட்டாத வஸ்துவென்றுரைத்தவேதம்
வாக்கியவிருத்தியாலவ் வஸ்துவைகாட்டிற்றன்றோ
வாக்கியங்களிலேமான மாவதேதென்றாயாகில்
வாக்கியமிரண்டுமெய்யே மறைகள்பொய்யாநீகேளாய்.

இ-ள் வாக்கியத்தனுக்கு சத்தத்திற்கு எட்டாதவஸ்து வென்றுரைத்த எட்டாதபொருளென்று சொன்ன, வேதம் வேதமானது வாக்கியவிருத்தியால் மகாவாக்கியவிசாரத்தால் அவ்வஸ்துவை அப்பிரமப் பொருளைகாட்டிற்று காட்டியது வாக்கியங்களில்இவ்விரண்டுவாக்கியங்களில்மானமாவதேதென்றாயாகில் பிரமாணமாவதியாதென்றுகேட்பாயாகில் வாக்கியமிரண்டுமெய்யே இவ்விரண்டு வாக்கியமு முண்மையே மறைகள் வேதங்கள் பொய்யா அசத்திய முரையா நீ கேளாய் அதைநீகேட்பாய் எ-று.

அற்றேல்வென்பதனை-இ-ய்-வெளிப்படை அ

அ-கை பிரமஞ்சுருதி வாக்கியங்களுங் கோசரமும் கோசரமுமா மெனக்கூறுதல்.

தன்பதியல்லாப்பேர்க்க டமையல்லனல்லனென்று
மன்பனைக்கேட்டநேர மவள்வெட்கிமௌனமாவ
ளென்பதுபோலநீக்கி யிதன்றிதன்றெனச்சேடித்த
பின்பரப்பிரமந்தன்னைப் பேசாமற்பேசும்வேதம்.

இ-ள் தன்பதியல்லாப்பேர்கடமை தனதுநாயகனல்லாதவர்களை அல்லனல்லனென்றாள் இவனல்லனிவனல்லனெனக்கூறினாள் அன்பனைக்கேட்டநேரம் நாயகனைக்காட்டிக்கேட்டபோது, அவள் அத்தலைவியானவள் வெட்கிவெட்கமுற்று மௌனமானாளென்பதுபோலபேசாதிருந்தாளென்பதைப்போல இதன்றிதன்றென இதுவல்லவிதுவல்லவென்று நீக்கி தள்ளி பின்பின்புசேடித்த விஞ்சினபரபிரமந்தன்னைப ரப்பிரமவஸ்துவை வேதம்வேதமானது பேசாமற்பேசுஞ்சொல்லாமற் சொல்லும்-எ-று.

இ-ம் சுருதிசத்தரூபத்தாலறிவிக்காமல் அருத்தரூபத்தா லறிவிக்குமென்பதாம். ௬

அ-கை இரண்டாஞ்சங்கையிற் பிரமமனதிற் கெட்டுமெட்டா தென்பதற்குத்தரங்கூறுவான் றொடங்கிமனோ வுற்பத்தியின்காரணங் கூறுகின்றார்.

முந்தியசங்கைதீர மொழிந்ததையறிந்துகொள்வாய்
பிந்தியசங்கைதீரப் பேசுமுத்தரநீகேளாய்
யிந்தியங்களுக்குராசச னிதயமாமதியெண்ணெண்ணங்கள்
புந்தியுமனமுமென்றே புறத்தகத்துலாவியாடும்.

இ-ள் முந்தியசங்கைதீர முதற்சங்கைதீரும்படி மொழிந்ததை சொன்னதை அறிந்துகொள்வாய் தெரிந்துகொள்வாய் பிந்தியசங்கை தீர இரண்டாஞ்சங்கைதீரும்படி பேசுமுத்தரம்சொல்லுமுத்தரத்தை யும்நீகேளாய்நீகேட்பாய்இந்தியங்களுக்குமனமுதலியவிந்தியங்களுக்கு இராசன் தலைவனானது இதயமாம் ஞானமாம் அதியெண்ணெண்ணங்கள் அதனினைவுகள் புந்தியுமனமுமென்று புத்தியெனவும் மனமெனவும்பு றத்தகத்து புறம்பிலுமுள்ளிலும்உலாவியாடுமசஞ்சரிக்கும்-எ-று.

இ-ம் ஞானஸ்மரணமேமனமும்புத்தியுமாமென்பதாம். ௰

அ-கை-இ-து.

உன்முகம்போற்கண்ணாடிக்குள் ளொருமுகங்கண்டாற்போற்
சின்மயவடிவின்சாயை சித்துப்போற்புத்திதோன்று
நின்மலவிருத்தியந்த நிழல்வழியாயுலாவுந்
தன்மகன்மகனேயித்தைத் தானன்றேஞானமென்பார்.

இ-ள் உன்முகம்போல் உனதுவதனத்தைப்போல கண்ணாடிக்கு ள்ளிரிட்டகண்ணாடிக்குள்ளே ஒருமுகங்கண்டாற்போல் ஒர்வதனங் கண்டதுபோல சின்மயவடிவின்சாயை சைதன்யஸ்வரூபச்சாயையேசி த்துப்போல் அறிவைப்போல புத்திதோன்றும் புத்தியிற்பிரதிபலிக் கும் நின்மலவிருத்தி நின்மலவிருத்தியானது அந்தநிழல்வழியாய்அச் சாயையின் மார்க்கமாக உலாவும் சஞ்சரிக்கும் தன்மகன்மகனே தர்ம ரூபியான சற்புத்திரா இதைத்தானன்றே இவ்விருத்தியையன்றேஞா னமென்பார் அறிவென்றுசத்துருககள் சொல்லுவார்கள்-எ-று.

ப-ம் அந்தக்கரணப்ரதிபலனஞ் சிதபாசமென்பார் சித்துப்போற் புத்திதோன்றுமெனவும் புத்தியிற்றங்குஞ்சிற்சாயையேவிருத்தியென் பார் நின்மலவிருத்தியெனவும் அவ்விருத்திசிதாபாசனுக்கிடமாக விள ங்குமென்பார் அந்தநிழலவழியாயுலாவுமெனவும் லோகாந்தருக்கம் போலச்சிதாபாசாந்தவிருத்தியே ஞானமென்பார் இத்தைத்தானன் றே ஞானமென்பாரெனவுங்கூறினர்.

இ-ம் விருத்திஞானமுஞ் சிதாபாசனுமினைய வெனக்கூறினதாம்.

அ-ஙக இது.

உருக்கியதாமிர்நாறுவுருவங்களானற்போல
விருத்திகள்கடபடாதிவிடயமாய்ப்பரிணமிக்கு
பருப்பலவிடயமெல்லாமாபாசன்றேற்றுவிக்க
மிருட்டினில்விளங்குகண்ணுமில்லாமற்பொருள்காணுதே.

இ-ள். உருக்கியதாமிர் குகையில்வைத் துருக்கியதாமிரானது காதாவுருவங்களானற்போல பலவித வடிவங்களானதுபோல விருத்திகள் விருத்திகளானவை கடபடாதிவிடயமாய் பரிணமிக்கும் கடம்பட முதலிய வாகரங்களாகவேறுபடும் விடயமெல்லாம் விடயங்களனைத்தையும் அருப்பல் அரும்பல மெனணப்பட்ட ஆப. சன்றேற்றுவிக்கும்சிதாபாசன்றெரிவிக்கும் விளக்குங்கண்ணுமில்லாமல் தீபமும்விழியுமின்றி இருட்டினில்இருளிருக்கும்பொருள்காணுதுவஸ்துதெரியமாட்டாதுஎ-று சிற்சாபையேசகத்தாகத்தோற்றுதலின்விருத்தியேகடபடாதிவிடயமாய்ப்பரிணமிக்குமென்றார். ௫௨

அ-ஙஉ-இது.

எரிகின்றவிளக்கார்கண்ணுவிருட்பொருள்காணல்வேண்டும்
தெரிகின்றபரிதிகாணச்செலவிழிற்கண்ணேபோதும்
விரிகின்றசகத்தைக்காணவிருத்தியும்பலமும்வேண்டும்
புரிகின்றவிருத்தியொன்றேபோதுமெய்ப்பொருள்காண்போர்க்கே.

இ-ள் எரிகின்றவிளக்கால்பிரகாசிக்கின்றதீபத்தினாலும் கண்ணல்விழியினாலும் இருட்கும்பொருள்காணல் வேண்டும் இருட்டின்கணுள்ளவஸ்துவைபார்க்கவேண்டும தெரிகின்றபரிதிதெரியாகின்றசூரியனைகாணச்சென்றிடல் பார்க்கச்செல்லில் கண்ணேபோதும்நேத்திரமொன்றுமேபோதும் அவைபோல்விரிகின்றசகத்தைக்காணபரந்திருக்கின்றவுலகத்தைப்பார்க்க விருத்தியும்பலமும்வேண்டும் விருத்தியும்பலமும்வேண்டும் மெய்ப்பொருள் காண்போர்கு உண்மையானபிரமவஸ்துவைத் தரிசிப்பவர்களுக்கு புரிகின்ற முனசொல்லாநின்றவிருத்திமொன்றேபோதும் விருத்தியொன்றுமே போதும எ-று.

ப-ம் விஷயஞ்ஞானத்தைப் போக்குதற்குவிருத்திஞானமும் அதையறிதற்குப்பலரூபமான சிதாபசனும்வேண்டுமென்பார் சகத்தைக்காண விருத்தியும் பலமும்வேண்டுமெனவும் ஆத்மாவைத்தரிசித்தற்குவிசாரரூபமான விருத்திஞானம்வேணடு மென்பார் விருத்தியொன்றேபோது மெய்ப்பொருள்காண்போர்க்கெனவுங்கூறினர்.

இ-உ-க-ம் ஸ்லோகார்த்த குத்தம்போல வர்த்தாரமான விருத்திஞானமாமேதயமானசிதாபாசனுமாகியவிவ் விரண்டிலக்கணமுங்கூறியதாம்

அ-ரை-மனத்தினுருவங்கூறல்

விருத்தியும்பலமுங்கூடும்விகாரமேமனமென்பார்கள்
கருத்தெழும்விருத்திவேண்டும் கணத்தினன் மனத்திற்கெட்டும்
வருந்தியபலமாமிந்தமனத்திற்கெட்டாதுகண்டாய்
யருத்தமிப்படியெனவறிந்துநீதெளிந்திடாயே.

இ-ள் விருத்தியும்பலமுங்கூடும்விருத்தியும்பலமுஞ்சேர்ந்தவிகாரமேவிகாரரூபமேமனமென்பார்கள் மனமென்று சத்துக்கள் சொல்லுவார்கள் கருத்து பதார்த்தறியுநினைவில் எழும்விருத்தி உண்டாகும்விசாரஞானமானது வேண்டுங்கணக்கினால் சித்தையறிதற்கொருதலையாக வேண்டுதலின் மனத்திற்கு அவ்விருத்திரூபமானமனத்திற்கு எட்டும் சித்தெட்டும் வருந்தியவருந்துகின்ற பலமாம்விடயத்தை யறியும்பலரூபமான இந்தமனத்திற்கு இம்மனத்திற்கு எட்டாதுகண்டாய்சித்தெட்டாது அருத்தம் முன்சொல்லிய விரண்டிற்கும்பொருள் இப்படியென்று இவ்வண்ணமென்றறிந்து ஐயமகன்று சந்தேகநீங்கி நீதெளிந்திடாய் நீதெளிபகக்கடவாய்-எ-று.

சித்துசம்பந்தஞானம்விருத்தியுஞ் சடசம்பந்தஞானம்பலமுமெனக்கொள்க.

ப-ம் சிற்சடரூப மனமென்பார் விருத்தியும்பலமுங்கூடும் விகாரமேமனமெனவும் சித்தம்சமானவிருத்தியினாற்சித்தையறியல மென்பார்விருத்திவேண்டுங் கணக்கினானே மனத்திற்கெட்டுமெனவும் சடாம்சமானமனதினாற் சித்தையறியக் கூடாதென்பார்-பலமா மிந்தமனத்திற்கெட்டாதெனவுங்கூறினார்.

இ-ம் அகமுள்ளமனதிற்கறியப்படு மெனவும் பகிர்முகமுள்ளமனதிற்கறியப்படாதெனவுந் தெரிவித்ததாம்.

அ-ரை முற்கூறியகட்டாவிடைகளாற்கோசார கோசரமின்றிய சுத்தப்பிரமமான சுவானுபூதியே தானென்றறிந்ததிலுதிக்கு மனதையதிற்கனாக்கும்பொருட்டோர்சங்கைவினாதல்.

வஞ்சகமில்பரமார்த்தகுருவேசொன்னவழிகளறிந்தேனினியோ
ர்வசனங்கேளீர், சஞ்சலமற்றகண்டபூரணமாய்ச்சித்துசிதாகாரமாவதன்
றேருசமாதிபோக, பிஞ்சலையொத்தலைவதுதன்சுபாவமாகியெருந்தன்னைத்
திற்பலயுலகாயுதிக்குமிந்த, நெஞ்சகம்வஸ்துவிலனையா வொதெதிப்பிலை
யடையுமெப்படிபோநீர்சொல்வீரே.

இ-ள். வஞ்சகமில் வஞ்சனையின்றியபரமார்த்தகுருவேயதார்த்தமாகவிளங்கியவாசாரியரே சொன்னவழிகளறிந்தேன் தேவரீரனுக்கிரகித்தமார்க்கங்களைத் தெரிந்துகொண்டேன் இனியோர்வசனங்கேளீர் இன்னுமோர் விண்ணப்பங்கேட்கவேண்டும் சித்தம் மனமானது சஞ்சலமற்றுசலனமின்றி அகண்டபூரணமாய் அகண்டபரிபூரணஸ்வரூபமாய்த் தாகாரமாவதன்றோ தன்மயமாவதன்றோ சமாதியோகம்நிஷ்டையிலுதிக்குஞ் ஞானம் உஞ்சலையொத்து ஊசலைப்போல் அலைவது சஞ்சலப்படுவது தன்சுபாவமாகி தனதியல்பால் ஒருகணத்தில் ஒருக்ஷணத்தில்பலவுலகாயுதிக்கும நாநாவுலகமாய்த்தோன்றுகின்ற இந்தநெஞ்சகம்இம்மனது வஸ்துவில் பிரமத்தில் அசையாமசலனமின்றிய நிவாதீபகாற்றில்லாதவிளக்கைப்போல நிலைபடைவதெப்படிநிலைமையுட்பெறுவதெவ்வண்ணம் நீர்சொல்வீர் தேவரீரருள்செய்வீர்-எ-று.

இ-ம்-வெளிப்படை. ௫ரு

அ-கை. மனதின்முக்குணமு மவைகளாலுண்டாகும்பயனையுங்கூறல்.

கருதுமனத்துகுணமூன்றுமூன்றிலொன்றுகதித்தெழுந்தான்மற்றிரண்டுங்கரந்துநிற்குந்,தருமமிகுசத்துவமேலானபோது சன்மார்க்கமானதெய்வசம்பத்துண்டா, மருவுமிராசதமாகி லுலகதேவாதனையாஞ் சாத்திரவாதனையுமாகு மருமகனே தாமதமேவாதபோதி லசுரசம்பத்துண்டாகுமறிந்துகொள்ளே.

இ-ள். கருதுமனம் நினைக்கின்ற மனதிற்குகுணமூன்றும்திரிகுணகுணமாம்மூன்றில் அம்மூன்றுகுணங்களில்ஒன்றுகதித்தெழுந்தால் ஒன்றுமிகுந்தெழுமாயின மற்றிரண்டும்பின்னிரண்டுகுணங்களும்கரந்துநிற்கும் மறைந்திருக்கும் தருமமிகும்சற்கருமமுயர்ந்தசத்துவமசத்துவகுணமாவது மேலானபோது மிகுந்தபோதுசன்மார்க்கமான சன்மார்க்கமாகிய தெய்வசம்பத்துண்டாம் தேவச்செல்வமுண்டாகும் மருவுமிராசதமாகில் பொருந்தாநின்ற ரசோகுணமிகுமாயின் உலகலோகவாதனையும்தேக தேகவாதனையும் சாத்திரவாதனையும சாஸ்திரவாதனையும் ஆகும் உண்டாகும் அருமகனே அருமையாகியபுத்திராதாமதமேவாதபோதில் தமோகுணமிகுந்தபோதில்அசுரசம்பத்துண்டாகும அரசுசெல்வமுண்டாகும்அறிந்துகொள் தெரிந்துகொள்வாய் -எ-று.

அ-கை சித்தம்சமானசத்துவஞ் சேடிக்கின் மனஞ்சித்தி லசைவின்றி நிற்குமெனல்.

மனதுசத்துவசொரூபமற்றிரண்டும்வந்து கலந்தனவவற்றைமாற்றினற்போற்றனது சன்மார்க்கத்தை விடாதிருந்தபோதுமாதமுமிராச

தமுஞ்சமிக்கும்பின்னைக்கனபரிணமஞ்சலனமும்போம்போனக்காற் களங்கமற்றுநின்றவாகாயம்போலுநினதுளமப்படியாகப்பிரமத்தொன்றால் நிருவிகற்பசமாதியிலேநிற்குந்தானே.

இ-ள். மனது மனமானது சத்துவசொரூபம்சத்துவவடிவாய் மற்றிரண்டும் மற்றராசோதகுமோ குணங்களாகிய விரண்டும்வந்து கலந்தனவந்து சேர்ந்தனவைக்களாம் அவற்றை அவ்விரண்டுகுணங்களையும் மாற்றினாற்போம் நீக்கிடி நீங்கும் தனதுசன்மார்க்கத்தை தனதுசன்மார்க்கமானசத்துவகுணத்தைவிடாதிருந்தபோதுவிடாமலிருந்தபோது தாமதமுமிராசதமுஞ்சமிக்கும் தமோகுணமுமிரசோகுணமுநசிக்கும் பின்னைபின்பு கனபரிணமம் கனமானதிரிசியமாதலும் சலனம் அதிற்சலனமடைதலும் போம்நீங்கும் போனக்கால் அவை நீங்கினால் களங்கமற்றுநின்ற நிர்மலமாயிருந்த ஆகாயம்போலும் அம்பரத்தைப்போலும் நினதுளம் உன்மனமானது அப்படியாம் அவ்வண்ணமாம் அப்பிரமத்து அப்பிரமஸ்வரூபத்தில் ஒன்றாய் ஏகமாம் நிருவிகற்பசமாதியிலே நிலைபெற்றிருக்கும்-எ-று.

அ-ஸை௪-இ-து,

களங்கமற்றகண்ணாடிதன்முன்வேறோர்களங்கமற்றகண்ணாடி காட்டும்போதுவிளங்கியதன்மயமாகியபேதமாகிவிகற்பமின்றி நிருவிகற்பமானாற்போல வளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச்சித்தா யானந்தமாம்பிரமத்தைக்கியான வனந்தெளிந்த படியிருந்தா லுலகமெங்கேயுலவெங்கேயென்றுசங்கையொழிந்திடாயே.

இ-ள். களங்கமற்றகண்ணாடிதன்முன் நிர்மலமாகியகண்ணாடிமுன் வேறோரு மற்றொரு, களங்கமற்றகண்ணாடி நிர்மலமாகிய கண்ணாடியை காட்டும்போது காண்பிக்கும்போது விளங்கியதன்மயமாகிப்பிரகாசியாநின்ற தனதுஸ்வரூபமாய் அபேதமாகி பேதமிருந்ததாகிய விகற்பமின்றி வேறுபாடின்றி நிருவிகற்பமானாற்போல ஒன்றானதுபோல அளந்தறியப்படா அளவிட்டறியக்கூடாத விபுவாய்வியாபகமாகியும்சத்தாய்ச்சத்தாகியும் சித்தாய் சித்தாகியும் ஆனந்தமாம் ஆனந்தமாகியும் விளங்குநின்ற பிரமத்து பிரமஸ்வரூபத்தில் ஐக்கியமானவுளம் கரைந்தமனமானது தெளிந்தபடியிருந்தால் பிரமமாகத்தெளிந்தவண்ணம்விளங்கிநின்றால் உலகமெங்கே கிரீஸ்பமான சத்தின்றி உலவெங்கே யென்று அதைப்பற்றியசஞ்சலமின்றென்று சங்கையொழித்திடாய் சங்கையை நீக்குவாய்-எ-று.

இ-உ-க-ம். சித்தம்சமானமனச்சித்தாகவேவிளங்கின் சகமாதலு மதிற்சலனமடைதலு மதற்கின்றெனவறிவித்ததாம்.

அ-கை முற்கூறிய வுக்காகஇனுற் சித்தம்சமானமனுஞ் இச்சே யாயிற்றெனவறிந்து மேற்சொம்சமானமனமுமாகனெறிறிலு மெவ்வி தமாயினவெனப்படுவதை யறிவுபிக்கும் மனஞ்சித்திலிறக்கிற சீவன்முத்த ரெங்ஙனஞ்சஞ்சரிப்பரெனில்.

ஏகமாய்மனமிறந்தா சீவன்முத்த ரிருக்குமட்டும் பிராரத்வமெ திறுலுண்பார், போகமானது புசித்துத்தொலைப்பதன்றோ புசித்தாலு மனந்தானும்போனதன்றே, சோகமாமனமிறந்தாற் போகமில்லை தோன் றுமெனின்முத்தரென்று சொலக்கூடாதே, மோகமாமிதுதெளிக் குருவேநன்றுமொழிந்தருளவேண்டுமென்றான் முழுதுமானேன்.

இ-ள். ஏகமாய் பிரமஸ்வரூபமாகி மனமிறந்தால் மனதுநசிக்கின் சீவன்முத்தரிருக்குமட்டும் சீவன்முக்தர்களிருக்குமளவும் பிராரத்வர் பிராரத்வ கன்மங்களை எதிறுலுண்பார் யாதினு லனுபவிப்பார்கள் போகமானது போகங்களைபுசித்து தொலைப்பதன்றோ அனுபவித்து நீக்கவேண்டுமன்றோ புசித்தால் அனுபவிக்கின் மனந்தானும் போனத ன்றே மனமிறந்ததன்றே சோகமாமனமிறந்தால் துன்பமாகியமனமிற க்கின் போகமில்லை போகானுபவமில்லை தோன்றுமெனில் மனமுதிக் குமாயின் முத்தரென்று சீவன்முத்தரென்று சொலக்கூடாதே உரை த்தல்கூடாதே மோகமாமிது தெளிய மயக்கமாகிய இச்சங்கைதெளியமா று முழுதுமானேன் யாவுமானசீடனை குருவே ஆசிரியரே நன்று தெ ளிவாக மொழிந்தருளவேண்டுமென்றான் சொலவேண்டுமென்றுகே ட்டான்-எ-று.

இ-ம் வெளிப்படை. ௰௬

அ-கை அச்சங்கைக்குத்தரங்கூறுவான்றொடங்கிமனோநாசமிரு விதமாகக் கூறுகின்றார்

மனநாசஞ் சொரூபமென்று மரூபமென்றும் வகுத்துரைப்பாரிரு வகையாய்வருமிவற்றில்வினவாதசீவன்முத்தரிடத்திலொன்றும்விதே கமுத்தரிடத்திலொன்றுமேவுமைந்தா, தனதானசத்துவமாய் மனஞ் சேடித்துத்தாமதமிராசதசித்தல் சொரூபநாச, மனகாசத்துவந்தானு மிலிங்கதேகமடங்கும்போதடங்குவதேயரூபநாசம்.

இ-ள். மனநாசம் மனோநாசமானது சொரூபமென்றும் உருவநா சமெனவும் அரூபமென்றும் அருபநாசமெனவும் வகுத்துரைப்பார்வ குத்துச்சொல்லுவார்கள் இருவகைப்பாய்வருமிவற்றில்இரண்டுவிதமாய் வருகின்றவைகளில் வினவாத சங்கையறத்தெளிந்த சீவன்முத்தரி டத்தில் சீவன்முத்தர்களிடத்து ஒன்றும் உருவநாசமொன்றுமவிதே கமுத்தரிடத்தில் விதேகமுத்தர்களிடத்தில் ஒன்றும் அருவநாசமெ

ம

ன்றும் மைந்தா மாணாக்கனே மேவும் உண்டாகும் தனதானசத்துவமாய் தனதுசுபாவமானசத்துவகுணமாக மனஞ்சேடித்துமனம்விஞ்சி காமதமிராசதாசித்தல் தமோரசோகுணங்களிறத்தல் சொரூபநாசம் உருவநாசமாம் அங்ஙகா மாசற்றவனே சத்துவந்தானும் அச்சத்துவகுணமும் இலிங்கதேகமடங்கும்போது சூக்குமசரீரநசிக்கும்போது அடங்குவது நசிப்பதே அருபநாசம் அருபநாசமாம் அருபவநாசமாம்-எ-று.

இ-ம் மனமுருவநாசமாயின சீவன்முத்தியும் அருவநாசமாயின் விதேகமுத்தியுமாமெனக்கூறினதாம். உ௰

அ-கை உருவமின்றி யருவமாயுணருருவமான மனதினால்யாவுமனுபவிக்கலாமெனல்.

சுத்தமாஞ்சத்துவமே யுண்மையாகுந் துகளிருள்போனன்மனமென்சொல்லும்போம்போம், வர்த்தமானத்தில்வந்தவுணவையுண்பார்வருவதுபோவதுநினைந்து மகிழார்வாடார், கர்த்தராயசங்கை விட்டகர்த்தராகிக் கரணவிருத்திகளவைத்தகாண்பாராகி,முத்தராயிருக்கலுமாம்புசிப்புக்கூடு முட்டில்லையென்றறிந்துசங்கைமோசிப்பாயே.

இ-ள் சுத்தமாஞ்சத்துவமே களங்கமற்றசத்துவகுணமே உண்மையாகும் தத்துவமாம் துகளிருள்போனால ரசோதமோகுணங்கணீங்கினால் மனமெனச்சொல்லும் போம்போம் மனமென்றுரைப்பதுநீங்கும் வர்த்தமானத்தில் நிகழ்காலத்தில் வந்தவுணவையுண்பார்கிடைத்தவுண்டியைப்புசிப்பார்கள் வருவதும்எதிர்காலத்துவரும் பொருளையும் நினைந்துமகிழார் கருதிமகிழார்கள்போவதும்செல்காலத்திற்போன பொருளையும் நினைந்துகருதிவாளார் வாளாராகள்கர்த்தராயசங்கையை விட்டுயானெனவெனனும் சங்கையைநீக்கி அகர்த்தராகி கரணவிருத்திகள் அந்தக்கரணவிருத்திகளையும் அவத்தை அத்தராய அவஸ்தாத்ரயங்களையும் காண்பாராகி பார்ப்பவர்களாகி முத்தருமாயிருக்கலுமாம்சீவன்முத்தராயிருக்கலுமாம் புசிப்புக்கூடும் எல்லாவற்றையுமனுபவிக்கவுங்கூடும் முட்டில்லை யென்றறிந்து தடையில்லையென்றறிந்து சங்கைமோசிப்பாய் சங்கையைநீகுவாய்-எ-று.

இ-ம் சத்துவமான மனதினுலெல்லாவற்றைப் புசிக்கினு மவைகளால் வருஞ் சுகதுக்க மிவர்க்கில்லையென்பதாம்.

அ-கை மனஞ்சத்துவமாக விவகரிக்கின்சமாதி யெங்ஙனங் கூடுமென்றவினவிற்குத்தரம்.

விவகாரவேளையெல்லாஞ்சமாதியொன்றுவிகற்பமன்றேமனமலைந்துவிடாதே தாவிட்ட, லவமானமுழுவுமன்றே [illegible]ருயாகிலொற்கொருதிட்டாந்தங்கேளாசகொடி, நயமாகப்பாரபுருஷன்சினைக்கூடியநுசுகமனுபவித்தநாரிநெஞ்சம், தவமனையைனத்தொழில்கள் செய்யும்போது தழுவியனுபவித்தசுகந்தனைவிடாதே.

இ-ள். விவகாரவேளையெல்லாம் விவகரிக்குங்காலங்களனைத்தும் சமாதியென்றால் சமாதியென்று சொன்னால் விகற்பமன்றோ அவ்விவகாரங்கிரியைவேறுபாட்டைத் தோற்றுவிக்குமன்றோ மனமலைந்து விடாதோ அங்ஙனமாயின மனஞ்சஞ்சலத்தைவிடாதோ விட்டால் அங்ஙனஞ் சஞ்சலத்தையுடையுமாயின அவதானமழுவுமன்றோ ஞானமழுவுமன்றோ என்றாயாகில் என்றுகேட்பாயாகின் அதற்கு அத்தாட்டாந்தத்திற்கு ஒருதிஷ்டாந்தங்கேள் யாமொருதிட்டாந்தஞ் சொல்லுதுங் கேட்பாய் ஆசைகொண்டு காமமுற்று நவயர்க நூதனமாக பரபுருடன்றன்னைச் சோரபுருடனை கூடிகடந்து இன்புற்றுபுணர்ந்து சுகமனுபவித்தவிடயானந்தத்தை யனுபவித்த நாரிநெஞ்சம்வஞ்சியின்மனமானது தவமானதவத்துக்குரிய மனைத்தொழில்கள் இல்வாழ்க்கைக்குரியசெயல்களைசெய்யும்போதும்செய்யுங்காலத்தும் தழுவியனுபவித்தசுகந்தனைமுன்கூடியனுபவித்தவிடயானந்தத்தை விடாதுநீங்காது எ-று

ப-ம். நெஞ்சஞ்சுகந்தனைவிடாதென்பலைதச்சுகநெஞ்சந்தனைவிடாதெனப்பொருள்கொள்கமனைதவிழுங்குவது சுகமாதலின.

இ-ள். விவகாரங்களைச் சத்துவத்தினுதயமானசுகபோதம் விழுங்கிக்கோடலினவ்விவகாரஞ்சமாதியேயாமென்பதாம். ௨௨

அ-கை. விவகாரங்களில் காமபாவநீங்குதற்பொருட்டுச் சிற்சுகமானசிவன்முக்தரது சத்துவமானமனதிற் கக்கூடுமோவென்ற வினாவிற்குத்தரமாக விரதத்ரயங்கூறல்.

தேகத்தலைவனாகியகர்த்தனாகிச் சீவனின்றிப்பிரமமாய்த்தெளிந்த முத்தன், போகத்தையுண்பனென்றாற்கர்த்தாவாமே பூரணமாம்கர்த்தனுக்குப்போகமுண்டோ, சோகத்தையறுத்தருளுங் குருவேயிந்தத்துகளறுக்கவேண்டுமென்றுசொன்னையாகின், மாகர்த்தன்மாபோகிமாத்தியாகிவகைமூன்றாயவிருக்குமகிமைகேளாய்.

இ-ள். தேகத்தலைவனாகி உடலைநானென்பதல்லாதவனாய் அகர்த்தனாகி அகர்த்தாவாய் சீவனின்றி சீவஸ்வரத்துவமில்லாமல் பிரமமாய் கூடஸ்தாமமைக்கியமாகி தெளிந்தமுத்தன் தெளிந்தசீவன் முத்தனானவன் போகத்தை யுண்பனென்றால் விடயபோதங்களைப் புசிப்பானென்றால் கர்த்தாவாமேயென்பவனாமே பூரணமாம் கர்த்தனுக்கு பரிபூரணமானகர்த்தாவுக்குபோகமுண்டோ விடயபோதமுளவோ சோகத்தையறுத்து துன்பத்தைக்கெடுத்து அருளுங்குருவே இன்பத்தைக்கொடுக்கின்ற வாசாரியரே இந்தத்துகளறுக்க வேண்டுமென்று இக்குற்றத்தை நீக்கவேண்டுமென்று சொன்னையாகில் கேட்பாயாகில் மா

கர்த்தன் மாகர்த்தனும் மாபோகிமாபோகியுந்தியாகிமாத்தியாகியு மாகிய வகைமூன்றும் மூன்றுவிதமாக அவரிருக்குமகிமைகேளாய் அச்சிவன்முத்தர்களிருக்கின்ற பெருமையைக்கேட்பாய் எ-று.

இ-ள் கர்த்தத்துவ மின்றியகர்த்தத்துவமான சிவன் முத்தருக்குப் போகங்கூடுந்தன்மை யெங்ஙனமென்றவினாவிற்குத்தரங்கூறத்தொடங்கினதாம். உ௩

அ-வை மாகர்த்தனிலக்கணங்கூறல்.

செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குங்காந்தச் சிலைமேலுமுன்னி
ருப்புகள்சேட்டிக்குமாபோற், செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்கு
மென்முன் சடமானவுலகமெல்லாஞ்சேட்டைசெய்யு, மெய்கலந்தவிந்
திரியவிகாரரூபவிவகாரவிருத்திகளும்விருத்திதானு, மெய்கலந்தசமாதிக்
குஞ்சாக்ஷியேநானவெயில்போலென்றுரைத்தவனேவிபுமாகர்த்தன்.

இ-ள். செய்கையும் தொழில்செய்தலுஞ்செய்விக்கையுந்தொழில்செய்வித்தலும் அற்றிருக்கும் இல்லாதிருக்கின்றகாந்தச்சிலைமேலுமுன் காந்தக்கல்லின் சந்நிதானத்தில் இருப்புகள் அயங்கள் சேட்டிக்குமாபோல் அசையுமாபோல் செய்கையுஞ் செய்விக்கையும் பிரேரகப்பிரேரியங்கள் அற்றிருக்கும் இல்லாதிருக்கின்ற என்முன் எனதுசந்நிதியில்சடமானவுலகமெல்லாம சடமாயுள்ளசகங்களனைத்தும சேட்டைசெய்யும் அசைந்துகொண்டிருக்கும் மெய்கலந்த தேகத்திற்சேர்ந்த இந்திரியரூபஞானேந்திரியகன்மேந்திரிய விகாரரூப பேதரூபங்களான விவகாரவிருத்திக்கும் பிரேரகபிரேரியமானவிருத்திகளுக்கும் விருத்திதானும் அவ்விருத்திகளடங்கித்தன்மயமான மெய்கலந்தசமாதிக்கும் உண்மைகலந்திருக்கும் ஸ்வரூபசமாதிக்கும் வெயில்போலென்று சூரியகிரணத்தைப்போலச் சர்வசாக்ஷியேநானென்று உரைத்தவனே ஸ்திரமானவனே விபுசர்வவியாபகமாகிய மாகர்த்தன் மாகர்த்தனும் எ-று.

இ-ம அத்துவிதமானவெவ்வாறு சந்நிதியினடக்குந்தேகமுதலியவிகாரங்களுக்கு மிவைகளியந்து நின்றருளாசமாதிக்குஞ்சாட்சிதானே யென்றவைகளோடுங் கூடாமற் கூடியிருப்பவனே மாகர்த்தனென்பதாம். உ௪

அ-கை மாபோகிமாக்கினிலக்கணங்கூறல்.

அறுசுவையின்குணங்குற்றஞ்சுத்தஞ்சுத்த மசத்தியம்பத்தியமெ
னவூணைப்பிடாமற், பொருநையுடனெட்டினதைக்காட்டுத்தீப்போ
ற்போகங்கள்புசிப்பவன்மாபோகியாகுஞ், சிறிதுவலிதுகடன்றன்னிய
ங்கண்ணல்மதீமைகள் சேரினும்படிக்கச்செயல்போற்சிக்கும், வெறிதிருக்
குமனேமாத்தியாகியாவன் விரதமிம்மூன்றுள்ளவரே விறுள்ளோரே.

இ-ள். அறுசுவையில் நடுவிரதங்களின் குணங் குற்றம் குணகுணங்கள் அசுத்தஞ்சுத்தம் சுத்தாசுத்தங்கள் அபத்தியம் பத்தியமென பத்தியாபத்தியங்களென வூறுபடாமல்உணவையாராய்ந்து பாராமற் பொறுமையுடன் சாந்தத்தோடும் கிட்டினதை நேரிட்டதை காட்டுத்தீப்போல காடாக்கினிபோல போகங்கள்புசிப்பவன் போகங்களையனுபவிப்பவன் மாபோகியாகும் மாபோகியாம்சிறிதுவலிதுகள் அற்பமகத்துக்கள் தனதன்னியங்கள் அனனியானனியங்கள்நன்மை தீமைகள்நனகுதீங்குகளாகிய வினைகள்சேரினும் அடைந்தாலும்படிக்கச்செயல்போல்படிகத்தின்றன்மையைப்போல சித்தம்சித்தமானது வெறிதிருக்குமவனே பற்றின்றிநிற்பனே மாத்தியாகியாவான் மாத்தியாகியாவான்விரதம்மூன்று இம்மூன்றுவிரதங்களும் உள்ளவனே உடையவர்களேவீடுள்ளார் முத்தியையுடையசீவன்முத்தர்கள்-எ-று.

இ-ம். உணவின்ரசாரசங்களைப்பாராமற்றனது ரசமாகயாவையும் புசிப்பவனே மாபோகியெனவும் தன்னிடத்திற்றனக்கன்னியமானவைகளியாதுபற்றினுந்தான் பற்றின்றிச் சுயமாவிளங்குகின்றவனே மாத்தியாகியெனவுங்கூறினதாம்.

அ-கை சீவன்முத்தன்விவகரித்துக்கொண்டிருக்க வகுதின்றிக் கிருத்தியனென தெங்ஙனமெனவினுதல்.

மெய்யுங்கொண்டிபிராரத்வந் தருவிதிவழிநின்றிடவு
முய்யுங்கனமிசருக்கனுகுணமா வுறுதொழில்செய்திடவுஞ்
செய்யுஞ்செய்கைமுடிந்தவனென்றுரைசெப்புவதெப்படியோ
வையுந்துன்பமகற்றியகுருவே வலமாவருள்வீரே.

இ-ள். மெய்யுங்கொண்டு தேகத்தைத்தாங்கிக்கொண்டுபிராரத்வந்தரு பிராரத்வகன்மங்கொடுக்கின்ற விதிவழிநின்றிடவும் நியதிமார்க்கத்தினிற்கவும் உய்யுங்கனமிசருக்கு முமுட்சுகளுக்கு அனுகுணமா அனுகூலமாக உறுதொழில்செய்திடவும் பொருந்தியசிரவணாதிகளைச் செய்து கொண்டிருக்கவும் செய்யுஞ் செய்கை முடிந்தவனென்று கிருதகிருத்தியனென்று உரைசெப்புவதெப்படி சொல்லுவதெவ்வண்ணம் வையுந்துன்பம் வருந்துமபவத்துன்பத்தை அகற்றியகுருவே நீக்கிய வாசாரியரே நலமாவருள்வீர் நன்மையாகச்சொல்வீர்-எ-று.

இ-ம்- வெளிப்படை.

அ-கை. அவ்வினாவிற்குத்தரங்கூறல

ஆடவாசெய்தொழின்மூவகையாகு மவித்தைதவசத்துருவா
விடனைமனதடங்கலையுளார்க்கேயிகபரவிவகாரம
விடனுதுமெழுமிச்சையுளார்க்கேவித்தையடிப்படவெல்லாம்
டாடலெமிருந்தொழிலாற் பலனுண்டோபரிபூரணமானல.

இ-ள். ஆடவர்செய்தொழில் புருஷர்கள் செய்கின்றகிரியையான துழேவ்கையாகும் மூன்றுவிதமாம் அவித்தைவசத்துறுநாள் அஞ்ஞானவசமாய்ச்செல்கின்றகாலத்தில் ஈடணை ஈஷணத்திரியமும்மம்மைமம்மதையும் அகந்தை அகந்தையும் உளார்க்கே உள்ளவர்களுக்கே இகபரவிவகாரம்இகலோகபரலோகவிவகாரங்களுளவாம்வீடணுகுவமெனுமிச்சையுளார்க்குமுமுசட்சக்களுக்கு வித்தைபடிப்பவெலாம சட்சித்தைப்பகுத்தறியுஞ்சாஸ்திரங்களனைத்தையுமப்பியாசித்தலுளவாம்பரிபூரணமானல் பரிபூரணமானவர்களுக்குபாடமிருந்த தொழிலால்மிகுந்தசாஸ்திராப்பியாசத்திறைல் பயனுண்டோ பயனுளதோ-எ-று.

இ-ம. அஞ்ஞானத்திசையிலுலகவிவகாரங்களுமுமுட்சைதிசையிற்சிரவணுகிவிவகாரங்களுமுளவாம் மூக்திசையிற்பலவா யாப்தியின்றிவிர்த்தியாப்தியாக விவகாரங்களைச் செய்தலினவையுஞ் செய்துஞ்செய்திலரென்பதாம்.

அ-கை. சீவன்முத்தர்க் குலகவிவகாரங்களுளவாயினுஞ்சிரவணுதிவிவகாரங்கள் வேண்டாவோவெனவினுதல்.

குரவர்சிகாமணியேநீர்கேளீர் கூறினைவழியொக்கும்
பரமுடனிசமுமிழந்தவரன்றோ பழகுவா மெய்ஞ்ஞானம்
விரவுமுயற்சியின்மீண்டவாதையினி வேண்டுவரோவேண்டார்
சிரவணமன்னுதிகள்வேண்டாவோசித்தமுணர்ந்திடவே.

இ-ள். குரவர்சிகாமணியேதேசிகசிரோரத்னமேகேளீர் கேட்டருள்வீர் நீர்கூறினைவழியொக்கும் தேவரீரருளிச்செய்தமுறைசரியே பரமுடன்பரலோகவிச்சையோடும இகமும் இகலோகவிசசையையும் இழந்தவரன்றோநீங்கினமுமுட்சுக்களல்லவோ மெய்ஞ்ஞானம் உண்மைஞானத்தை பழகுவீர் அப்பாசிப்பவரல் விரவுமுயற்சியின் மீண்டவர்கலக்கின்ற முயற்சியினின்று நீங்கினவர்கள் அந்த அவ்விகலோகபரலோகவிச்சையை வேண்டுவரோவேண்டார் விரும்புவார்களோ விரும்பார் ஆயினும்சித்தமுணர்ந்திட மனநிலைபெறும்பொருட்டு சிரவணமன்னுதிகள் வேண்டாவோ சிரவணமனனமுதலியவைகளும் வேண்டாமோ-எ-று.

இ-ம்-வெளிப்படை.

அ-கை அவ்வினுவிற்குத்தரங்கூறல்

கிளர்மகனேகேள் தத்துவமறியார்கேட்டல்செயக்கடனே
ளர்வறுசிந்தித்தலினுமுயல்வார் சிலசந்தேகங்களுளீர்
தெளிதனிற்பார்விபரீதப்பேய் தீராவாதனையோர்
வெளியுருவாயறிவாய்நிறைவாயினர் வேண்டுதொன்றுண்டோ.

இ-ள். கிளர்மகனே விளங்காநின்ற புத்திரனே கேள் கேட்கக்கடவாய் தத்துவமறியார் உண்மைஞானத்தைத்தெரியாதவர்கள் கேட்டல் செயக்கடன் சிரவணஞ்செய்யவேண்டியது கடமையாய்ச்சிலர்சந்தேகங்களுளார் கேட்டவஸ்துநிச்சயத்திற்சந்தேகமுள்ளவர்களாகியசிலர் தளர்வறுசிந்தித்தலின்முடல்வார் தளர்வற்றிருக்கும்படி மனனஞ்செய்தலின் முயற்சிசெய்வார்கள் விபரீதப்பேய் ஒன்றையொன்றாகவறியும்பேய்த்தன்மையுள்ள தீராவாதனையோர் நீங்காத வாதனையையுடையவர்கள் தெளிதலினிற்பார் நிருத்தியாசனத்தைக்கொண்டு சமாதியிலிருப்பார்கள் வெளியுருவாய் பரமாகாசமாய் அறிவாய் அபரோட்சஞானமாய் நிறைவாயினர் பரிபூரணமானவர்கள் வேண்டுவதொன்றுண்டோ விரும்புவதொன்றுளதோ-எ-று.

இ-ம். கேட்டன்முதலியமூன்றுவிவகாரங்களுமஞ்ஞான முதலிய மூன்றுமுள்ளமட்டும் வேண்டுமேயன்றி மேல்வேண்டப்படுவனவல்ல வென்பதா.

அ-கை விவகாரநீங்கிற்சீவன் முத்தர்க்கெங்ஙனமகம்பாவமுண்டாதல்.

கூடுமெனவினுதல்,

ஐயாகேளீர்தத்துவஞானியுமஞ்ஞானிகள்போலச்
செய்யாநின்றேன்கண்டேனுண்டேன்சென்றேனெனலாமோ
பொய்யாம்விபரீதங்களவர்க்குமுத்திபோயினதென்றீரோ
மெய்யாம்பிரமவிசாரமிதன்றோவெளியாயுரைவீரே.

இ-ள். ஐயாகேளீர் எனதாசிரியரேகேட்டருள்வீர் தத்துவஞானியும்மெய்யுணர்வுடையசீவன்முத்தனும் அஞ்ஞானிகள்போல அஞ்ஞானிகளைப்போல செய்யாநின்றேன் இதைச்செய்கின்றேன் கண்டேன இதைப்பார்த்தேன் உண்டேன் இதைப்புசித்தேன் சென்றேன் இங்ஙனஞ்சென்றேன் எனலாமோ என்றுசொல்லலாமோ அவர்க்கு அச்சீவன்முத்தர்களுக்கு பொய்யாம் விபரீதங்கள் அசத்தியமானபேதபாவனைகள்போயினதென்றீரோ நீங்கினதென்றருளினீரே மெய்யாம்தத்துவமானபிரமவிசாரம் பிரமவிசாரமானது இதன்றே இதுவன்றே வெளியாயுரையீர் நன்றாகத்தெரியும்படிசொல்வீர்-எ-று,

இ-ம் சீவன்முத்தனுமஞ்ஞானிகளைப்போல விவகரிக்கின்றவர்களுக்கு விபரீதமெங்ஙனநீங்குமென்றென வினவினதாம்,

அ-கை-அவ்வினாவிற்குத்தரங்கூறல்,

துய்ந்தகனவிற்கண்ட பழங்கதையோனுவன்வாதனையா
லாய்ந்தறிவற்றனன்படி செபபுவனுபாசனுமாகான
மாய்ந்ததனிடலமளவும் விண்ணவன்வனிதனைப்படுவான்
வீய்ந்தசிதாபாசன்போமளவும் விவகாரந்தொடரும்.

இ-ள். ஓய்ந்த இந்திரியங்களொழிந்த கருவிற்கண்ட பழக்கதை சொற்பனத்திற்கண்ட பழங்கதையை வாசனையாலவாதனையினுல் ஒதுவன் சாக்கிரத்திற்சொல்லுவன் அதுபோல ஆய்ந்தறிவுற்றவன் வேதமுடிவானமகாவாக்கியார்த்தத்தையாராய்ந்து தன்னையறிந்தசீவன்முத்தன் அப்படிசெப்புவன் அததன்மையாகசொல்லுவன் ஆபரசனுமாகாண்சிதாபரசனுநானமாய்ந்ததனுடல்போமளவும் மரித்தம்தேகத்தனமாகும்பரிபக்தம் விண்ணவன்தேவனுயிருனன் மனிதனெனப்படுவான்புவிதனென்றுசொலலப்படுவான் அதுபோல வியந்தசிதாபாசன சித்தருவகாசித்தசிதாபாசன் போமளவும் விதேகமுத்தியையடையுமளவும் விவகாரந்தொடர்ந்துவரும்-எ-று.

இ-ம் சொற்பனத்திற்கண்டகற்பிதத்தைச்சாக்கிரத்திற் சொல்வதுபோல வஞ்ஞானதிசையிற்கற்பிதமாயுள்ள வுலகவிவகாரத்தை ஞானதிசையிற்சொல்வதேயன்றி யுண்மையனறெனினும் வைவிதேகமுத்திபரியந்தந் தொடருமென்பதாம். ௯௧

அ-கை சகலவிவகாரங்கச் சமாதிசெய்யினச்செயினுமோர்விவகாரமாதலிலவனெங்ஙன் நீர்விவகாரியாவனெனல.

ஆனலையாகுருவே காண்பதுசத்தியமென்றானு
நானவிவகாரங்கயரல வேல்ஞானசுகந்தருமோ
போனலன்றோநன்றுநிட்டை புரிந்திடல்வேண்டாவோ
தானநிட்டைபுரிந்தாற்செய்கை தவிர்ந்தவனெப்படியோ.

இ-ள் ஆனலேபாகுருவே அப்படியானலென்பிதாவாகியவாசிரியரே காண்பதுதிரிசியம் அசத்தியமெனறாலும் பொய்யாயினும்நானுவிவகாரம அதைப்பற்றியபலதொழில்கள் அயாலவோ துன்பத்தை தருபவைகளல்லவாஞானசுகந்தருமோசிதானந்தத்தைக்கொடுக்குமாபோனலன்றோ அத்தொழிநிங்கினலலலவா நன்றாம நன்மையாம நிட்டை அவைகநீங்கும்பொருட்டு சமாதிபுரிந்திடல் வேண்டாவோ செய்யவேண்டாமோ தானநிட்டைபுரிந்தால் தன்மையாகுஞ்சமாதி செய்தால் எப்படி எவ்விதம் செய்கைதவிர்ந்தவன் தொழில்விட்டவன்-எ-று,

இ-ம் வெளிப்படை அ-கை அவ்வினுவிற்குத்தரம்.

தெரிதருமகனேயாரம்பத்தொடுதிரும்விவகார
முரியசமாதில விவகாரங்களுமுள்ளத்தொழிலன்றோ
துரியபரம்பொருளானவர்வேறொருதொழிற்செய்வதுமுண்டோ
வரிபசமாதிகள்பழகுவேமனனேலலனுரு—னு மன்றே.

இ-ள் தெரிதருமகனே உண்மையாகிய யறிகின்றபுத்திரா உரிய உரியசமாதியும தனக்குரிநிட்டையும விவகாரங்களுமசத்தமொழில்களும் உள்ளத்தொழில யமனுவிவகாரங்களாதலால் விவகாரம் அத

தொழில்கள் ஆரம்பித்தொழிதிரும் சிரவணாதிகளாற்றும் துரியபரம் பொருளான துரியமான பிரமவஸ்துவானவர்கள் யேயொருதொழில் மற்றொருகிரியை செய்வதுமுண்டோ செய்வதுமுளதோ ஆரியமாதிகள் அருமையான ஞானநிஷ்டைகளை பழகுவனேல் அப்பியாசிப்பானாகில் அவன் அவ்வப்பியாசி ஆரூடனுமன்று அனுபவியல்லன்-எ-று. சகத விவகாரஞ் சமாதியினுஞ்சமாதிவிவகாரஞ் சாட்சாத்காரத்தினு மேகு மெனக்கொள்க. இ-ம்-சித்துவிகாரமான சமாதியுமப்பியாசிக்கே யன்றி யாரூடனுக்கின்றென்பதாம். ௩௩

அ-கை, ஆரூடர்களிலுஞ் சிலர் சமாதிமுதலியவற்றைச் செய்வதென்னென வினாதலுக்குத்தரம்.

உத்தமகுருவேயாரூட ருமா யொழிலற்றவருள்
சித்தமடக்குதியானாதிகள்சிலர் செய்குவதென்னென்று
இத்தலமருவும்பிராரத்தவப்பிரி வெப்படியப்படியே
முத்தரும்வெகுவித மாகுவரென்பது முன்னேசொன்னேனே

இ-ள். உத்தமகுருவே-நன்மையானதேசிகரே, ஆரூடருமாய்சுவானுபவமுள்ளவர்களுமாய் ஒருதொழிலற்றவருள்-ஒருகிரியையில்லாதவர்களுக்குள் சித்தமடங்கு-மனமடங்குகின்ற தியானாதிகள் - சமாதிமுதலியவைகளை சிலர்-சிலர்கள் செய்குவ தென்னென்று செய்வதென்னென்று கேட்பாயாகில் இத்தலமருவும் இப்பூமியிற்பொருந்தும் பிராரத்வப்பிரிவு பிராரத்தகன்மபகுப்பு-எப்படி-எவ்விதமோ- அப்படியே அவ்விதமேயாம் முத்தரும்-சீவன்முத்தரும் வெகுவிதமாகுவரென்பது நானாவிதமா யிருப்பார்களென்பதை முன்சொன்னேன்-முன்னமேசொன்னேன்-எ-று.

இ-ம். ஆரூடன்றொழில் பிராரத்வகன்மமெனவறிகவென்பதாம்.

ஆ-கை ௨-ஆ.

நல்லவனேகேளுலகுபகார ஞானிகள்விவகார
மல்லதுவேறொரு பெறுபேறும்மிலை யதனாற்பிணியுமிலை
வல்லசிருட்டி முதற்பலதொழிலால் வருபுண்ணியபாவ
மெல்லவருக்கு மனுக்கிரகஞ்செயு மீசனமைந்திலனே.

இ-ள். நல்லவனேகேள்-நன்மையான மாணாக்கனேகேட்பாய் ஞானிவிவகாரம்-ஞானவான்றொழில் உலகுபகாரமல்லது லோகோபகாரமேயன்றி வேறொரு-மற்றொரு பெறுபேறுமில்லை அடையக்கடவதாகிய வொன்றுமில்லை அதனால்-அக்கிரியையினால்-பிணியுமில்லை துன்பமுமில்லை அதேதென்னில் வல்லசிருட்டி-முதல

ல்லமையாணைசிருட்டியாதி டலதொழிலால் நாலுவிதகிருத்தியங்களினு வருபுண்ணிய பாவம்-வராநின்ற தருமாதருமம் எல்லாருக்கும்-யாவருக் கும் அனுக்கிரகஞ்செய்யும்-அளிக்கின்றஈசனையடைந்திலன் ஈசனையடைகி லன்-எ-று.

இ-ம். ஆருடன்செய்யுந்தொழி லீசனைப்போ லுலகோபகாரநிமி த்தமேயன்றி தனனிமித்தமன்றென்பதாம். ௩௫

அ-கை, வஞ்சகமில்லென்ற செய்யுண்முதலிதுகாறுஞ் சித்திலு த்தமனஞ்சலனமின்றிச் சித்தாகவிளங்குவ தென்பதை விளக்கி இனிச் சித்துவியாபகத்தை விளக்கும்பொருட் டம்மனமுள்ள ஞானவானினு க்கொப்பாவெனக் குறிப்பாகூற வெங்ஙனமொப்பாவனென்ற வினவு க்குத்தரம்.

ஈசனுமாயுருவாகி யெழுந்தருளுங்குருவே
யீசனுஞானியுமொப்பென்றீரே யெப்படியொப்பென்று
லீசனுஞானியு மமதையகந்தை யிகந்திடலொப்பா
மீசனுமாம்பலசீவருமாமுல கெல்லாமிவனுமே.

இ-ள். அருவாய் நிஷ்களமாய் ஈசனுமாய்-மும்மூர்த்தியுமாய் உரு வாய்-மானிடவடிவாய்எழுந்தருளுங்குருவே-யெழுந்தருளுவாசிரியரே ஈசனும் மாயாரகிதரான மும்மூர்த்திகளும் ஞானியும்-ஞானவானுமொ ப்பென்றீரே சமானமென்றீரேயெப்படியொப்பென்றால்-எவ்விதஞ்சமா னமாமென்று கேட்பாயாகில் ஈசனும் ஈஸ்வரனும் ஞானியுஞ்ஞானவா னும் மமதை-யகந்தை-மமதையு-மகந்தையும்- இச்சங்கதிறல் நீங்கி நி ற்றலால் ஒப்பாம்-சமானமானவர் இவன்--இந்த ஞானி-ஈசனுமாம்-மும் மூர்த்தியுமாவன் பலசீவமாம்-அந்தசீவர்களுமாவன் உலகெல்லாம்-சக ங்களனைத்தும் ஆம்-ஆவான் எ-று.

இ-ள். அறிஞனீசனுக்கொப்பாவ னென்பதற்கேதுகூறி மற்றுஞ் சிவேஸ்வரசந்தாவும் விளங்குவானெனக் கூறினதாம். ௩௬

அ-கை, அறிஞனெங்ஙனஞ் சீவர்களாகவிளங்குவானெனவினவல்,

எல்லாஞ்சீவரு மிவனுமென்றீ ரிவன்றான்முத்தியடைந்
தெல்லாஞ்சீவரு முத்திபெறாம லிருப்பானேனையா
வெல்லாஞ்சீவரும் வெவ்வேறானு மிவனெல்லாமவனே
யெல்லாபொருளு முணர்த்தருள் குருவேயிதைநீர்மொழியீரே

இ-ள்-எல்லாச்சீவரும் சகலசீவர்களும் இவனுமென்றீர் -இந்தஞா னியாவனென்றுசொன்னீர் இவன்றான் இந்தஞானி முத்தியடைந்து வீட்டடைய எல்லாசீவரும்-சகலசீவர்களும் முத்திபெறாமல் வீட்டடை யாமல் இருப்பானேன்-இருப்பதென்னையா - ஆசிரியரே எல்லாச்சீவ

ரும்-சகலசிவர்களும்-இவ்வேறுஞல் தனித்தனியா யிருப்பாராயின்-இவன் இந்தஞானி-எல்லாமவனே- அனைத்துமாகானே-எல்லாப்பொருளும் சாவார்த்தங்களையும் உரைத்தருள்குருவே. அருளுகின்ற தேசிகனே, இதைதரீமொழியீர்-இச்சங்கைக்குத்தாரந்தேவரீரருள்செய்வீர்-எ-று-முத்தியடையவென்பது-அடைந்தெனத்திரிந்துநின்றது. கூஎ

இ-ம், ஞானவானுகியவொருவன் பெற்றபேற்றினை யுயிர்கள்பெருமையாலிவனெல்லாமாவதென்பதெங்ஙனங்கூடுமென வினவினதாம்.

அகமெனுமான்மா பூரணமேக மநேகவிதஞ்சிவ
னகமெனுமந்தக் கரணவுபாதிக ளளவிலையார்தலினுற்
சகமுழுதுங்குளிர் சந்திரனேகஞ் சலசந்திராபலவாஞ்
சகமதிலேரி குளஞ்சிறுகுழிகால் சட்டிகுடம்பலவால்

இ-ள். அகமெனுமான்மா-நானென்னுமாத்மாவானது பூரணமேகம் பரிபூரணமானவொன்றும் அகமெனும்-நானென்கிற அந்தக்கரணவுபாதிகள் மனேபாதிகள் அளவிலை-மட்டில்லை-ஆதலினுல்-ஆதலால் சிவன்சிதாபாசன்-அனேகம்விதம் நானுவிதங்களாம் சகமுழுதும் உலகமனைத்தும்-குளிர்-குளிர்ச்சிசெய்கின்ற- சந்திரனேகம்-மதி யொன்றி-சகமதில் உலகத்தின்கண்-ஏரி-ஏரிகளும் குளம்-தடாகங்களும்- சிறுகுழி சிறியபள்ளங்களும் சால் சால்களும்-சட்டி - சட்டிகளும்-குடம்-குடங்களும்-பலவால்-பலவாதலால் சலசந்திரர்பல சலப்பிரதிபிம்பரான சந்திரர்களு மனந்தமாம்-எ-று. கூஅ

ஆகை-இ-து.

சட்டிகுடங்களி னென்றுநசித்திட வதனுட்சலசந்த்ர
னெட்டுமுதற்சந் திரனேடுகூடு மொழிந்தவைகூடாவே
கட்டுமுபாதி நசித்திடுசீவன் காரணவான்மாவிற்
கிட்டுமையிக்கிய முபாதிகெடாதவர் கேவலமாகாரே

இ-ள்-சட்டிகுடங்களில்-சட்டிகுட முதலியவைகளின் ஒன்றுநசித்திட-ஒன்றுகெட்ட-அதனுட்சலசந்திரன்-அதற்குட்டோன்றிய பிரதிபிம்பசந்திரன்-ஒட்டும்பொருந்திய முதற்சந்திரனேடுகூடும் -பிரமசந்திரனேடுசேரும்-ஒழிந்தவைகளையகூடாவே-கூடாவா மவைபோலகட்டுமுபாதி-பந்தித்திருக்குமுபாதியான்ம நசித்திடுசீவன்-மரித்தசீவனுனவன் காரணவான்மாவில்-ஆதாரமான வாத்மஸ்வரூபத்தில் கிட்டுமையிக்கியந் ஐக்கியமுண்டாம் உபாதிகெடாதவர்-அவித்தை - நீங்காதவர்கள் கேவலமாகார்-கைவல்லியத்தை யடையமாட்டார்கள்,

இ-ள்-க-ம், ஓர்கட்சல நசிக்கினதிற் பிரதிபிம்பிக்க சந்திரன் பிம்பசந்திரனனவனன்றி யேனைப்பிரதிபிம்பசந்திரர்களாகார்போல ஓர்வித்தை நசுக்கினதின்றோன்றிய சிவன் சிவமாவனேயன்றி யேனையசிவர்களாரென்பதாம். ௩௯

அ-கை, முன்பறிஞானனீசனுக் கொப்பென்றீரங்கனமாயினவன மகிமையிலனுக்கே னின்றெனவினாதல்.

இவனயன்மால்சிவ னாகியவீசரோ டெப்படியொப்பாருஞ்
சிவன்முதன்மூவரு மகிலசிருட்டித் திதிநாசங்கள்செய்வா
ரவர்பிறர்மதிகளு முக்காலங்களு மறிவார்விபுவாவார்
தவமிகுகுருவே யிவனுக்கவைபோற் சற்றுங்காணேனே

இ-ள்-இவன்-இந்த ஞானி-அயன்மால்சிவனாகிய பிர்மா விஷ்ணுருத்திராகிய-ஈசரோடு-மும்மூர்த்திகளுடன் எப்படியொப்பாகும் எவ்விதஞ் சமானமாவன் சிவன் முதன்மூவரும் ருத்திரன் முதலிய மும்மூர்த்திகளும்-அகிலம்-சகத்தை-சிருட்டி-உண்டாக்குதலும்-திதி- இரட்சித்தலும் நாசங்கள் அழித்தலும் செய்வா-செய்வார்கள்-அவர் - அவ்விருவர் பிறமா திகளும்பிறரறிவையும் முக்காலங்களும் திரிகாலங்களிலும் அறிவார்-தெளிவார் விபுவாவார்-வியாபகமாவார்கள் தவமிகுகுருவே தவத்தின்மிகுந்த ஆசிரியரே இவனுக்கு இந்தஞானிக்கு அவைபோல் அவற்றைப்போல சற்றுகாணேன்-எவ்வளவும் பாத்திரனல்லன்-எ-று

இ-ம்-வெளிப்படை. ௪௰

அ-கை, அவ்வினாவிற்குத்தரம்.

தடத்துநீர்நிலாத் திரியெரிபயமுந் தழுவுமூர்த்தனைக்காக்குங்
குடத்துநீர்விளக் கினிலொளியிரண்டுமோர் குடும்பமாத்திரங்கா
மடுத்தமைந்தனேஞானியுமீசனுமறிவினாற்பிரிவில்லைக் (க்குமல்
கெடுத்தமாயையின்குணங்களான்மேலென் றுங்கீழென் றும்பிரிவா

இ-ள்-தடத்துநீர்-தடாகத்துசலமும் நிலாத்திரியெரி-பகல்வர்த்திபுமாகிய உபயமும் இரண்டும் தழுவுமூர்தனைக் காக்கும் பொருந்தியவூர்தனைரட்சிக்கும்-குடநீர்-குடத்துசலமும விளக்கினிலொளி தீடப்பிரகாசமுமாகிய இரண்டும்-உபயமும்-ஓர் குடும்பமாத்திரங்காக்கும் ஒரு குடும்பத்தை மாத்திரமிரட்சிக்கும் அடுத்தமைந்தனே சத்துக்களையடைந்த புத்திரா ஞானியும் ஞானவானும் ஈசனும்-ஈஸ்வரனும் அறிவினாற்பிரிவில்லை ஞானத்தினாலேவேறுபாடில்லை கெடுத்த பிரபஞ்சத்தைச்செய்தமாயையின்குணங்களால்மாயையின்றன்மைகளால் மேலென்றும் கீழென்றும் தாழ்வென்றும் உயர்வென்றும் பிரிவாம்-வேறுகும்-எ-று

இ-ம்-னரிநீரோரையுங் கடநீரில்லத்தையும் காக்குமிடத்திற் சிறிது பெரிதென்னும் தொழிற்பேதமேயன்றிக்காசாருந் தன்மையொன்றாது போதகாசனுக்கும் ஞானிக்கும் மாயையகித்தைகள்கற் றாரதம்மியமி ருக்கினு மறிவின்றன்மையி லொப்பாவரென்பதாம் ௪௧

அ-கை-இ-து

நரரின்மன்னனைச்சித்தரைப்போலவேநாரணன்முதலான
சுரர்கணமாயைவல் லவரணிமாதிக ளொக்கமாதவமிக்கோர்
தரணிமானுடர்க்கவைக ளில்லாமையாற் றாழ்வுளரானாலும்
பிரமபாவனையா லிவரவரெனும்பேதமொன்றிலபாராய

இ-ள், நரரில்-மானிடரில்மன்னனை அரசனைப்போலவும் சித்தரைப் போல சித்தர்களைப்போலவும் நாரணன் முதலான-திருமால் முதலிய சுரர்கள் தேவர்கள்-மாயைவல்லவர்-மாயையில் வல்லமை யுடையவர் களாதலால் அணிமாதிகளொக்க அணிமாமுதலிய வட்டசித்திக ளொக்க மாதவமிக்கோர் மாதவத்தின்மிகுந்தவர்களாவர் தரணிமானிட ர்க்கு பூமியிலுள்ள மனிதர்களுக்கு அவைகளில்லாமையால் அவைக ளில்லாமையால் தாழ்வுளரானாலும் தாழ்வுடையவர்களானாலும் பிரம பாவனையால் பரமதிருஷ்டியினால்லிவர் இவர்கள்மானிடரெனவும் அவ ர் அவர்கள்தேவர்களெனவும் பேதமொன்றிலபாராய்-வேறுபடொன்றி ல்லெனக்காண்பாய்-எ-று.

இ-ம், மானிடரிற் சித்தருக்குள்ள மகிமைகண் மற்றவர்களுக்கின் றாயினும் மானிடத்தன்மையிலொப்பாவதுபோலச் சித்துருவயான திரி மூர்த்திகளுஞ் சீவன்முத்தர்களுந் தேவத்தன்மை மானிடத்தன்மை களால்வேற்றுமையுள்ளோராயினுஞ் சித்துத்தன்மையி லொப்பாவா ரென்பதாம் ௪௨

அ-கை, அணிமாதிகளீசன்தாயினருளுக்கொங்கண முண்டாயிற் றெனி லவரை நோக்கி யுபாசனைசெய்ததிறலா மெனக்கூறல்

முத்திநல்கிய சற்குருவேபல முனிகளுக்கணிமாதி
சித்திபூமியிற்கண்டிருக்கவு மந்தச்செல்வமீசனதென்றீர்
புத்தியொத்திடவுரைத்தருளென் றிடிற்புகழுமீசனைவேண்டிப்
பத்திசெய்திடுந்தவத்தினால்யோகத்தாற்பலித்ததென்றறிவாயே

இ-ள் முத்திநல்கி யெல்வாருளிச்செய்த சற்குருவே ஞானதேசிக ரே பலமுனிவர்களுக்கு அனந்தமிருடிகளுக்கு அணிமாதிசித்தி அணி மாமுதலிய வஷ்டசித்திகளுண்டாயிருப்பதை பூமியிற்கண்டிருக்கவும் இவ்வுலகத்திற்பார்த்திருக்கவும் அந்தச்செல்வம் அச்செல்வமானது ஈசனதென்றீர் ஈஸ்வரனதென்றுசொன்னீர் புத்தியொத்திட அறிவி

லொவ்வும்படிக்கு உரைத்தருள்சொல்லவேண்டும் என்றிடில் என்று கேட்பீரயாகின் புகழுமீசனைவேண்டி துதியானின்ற வீஸ்வரனைவிரும்பி பத்திசெய்திடுந்தவத்தினல் புத்திசெய்திடுந் தவத்தினலும் பலித்ததென்றறிவாய் இடைத்ததென்றறிந்துகொள்ளாய்-எ-று, சஉ

இ-ம்-வெளிப்படை

அ-கை-முன்புள்ளஞானிகளைப்போல இவர்களுக்கணிமாதிகளேனில்லையென வினவுதல்

சிவசொரூபமானதேசிகமூர்த்தியே சித்திமுத்திகளிரண்டுந்
தவமுடையோரடைகுவரெனியிவர்கள்போற் சகலருமடைவார
வவர்கள்பூருவஞ்சித்தியுஞானமுமடைந்ததுங்கண்டோமே (ரோ
யிவர்கண்ஞானிகளென்றிடிற்சித்திக ளிவர்க்கிலாவகையேதோ

இ-ள்-சிவசொரூபமாம்-சிவாகாரமாகிய தேசிகமூர்த்தியேகுருமூர்த்தியே சித்திமுத்திகள் அணிமாதிசித்தியு மோட்சமுமாகிய இரண்டுமஉபயத்தையும் தவமுளோர் தவத்தையுடையவர்கள் அடைகுவரெனில்அடைவார்களென்றால் அவர்கள்போல் அத்தவத்தரைப்போல் சகலருமடைவாரோ அனைவருமடைவார்களா அவர்கள் அத்தகமுடையவர்கள் பூருவம் முன்புள்ள சித்தியும் அணிமாதிசித்தியுஞானமும் முத்தியும் அடைந்ததும்கண்டோம்பெற்றதுமாகப்பிரமாணத்தாற்பார்த்தோம் இவர்கள் ஞானிகளென்றிடில் இவர்களை ஞானவான்களென்றுசொன்னல் சித்திகள்=அணிமாதிசித்திகள் இவர்க்கிலாவகையேது இவர்களுக்கில்லாதவித மியாதினல்-எ-து.

இ-ம்வெளிப்படை சசு

அ-கை-அவ்வினவிற்குத்தரம்

காமியத்தவங்காமியமொன்றையுங்கருதிடாத்தவமென்றும்
பூமியிற்றவருமிருவகைசித்தியும்போதமுந்தருமைந்தா
வாமிவற்றிலொன்றியற்றினலொன்றையேயடைகுவரிதுதீர்வை
யாமுரைத்தவவிரண்டையுமியற்றினரன்றுளபெரியோரே

இ-ள்-காமியத்வம்-காமியத்வமெனவும்காமிய மொன்றையுங் கருதிடாத்தவமென்றும் நிஷ்காமியதபமெனவும் பூமியில்உலகத்தில்தவமிருவகை தவமிரண்டுவிதமாம் சித்தியும் காமியதபஞ்சித்தியும்போதம் நிஷ்காமியபதமுத்தியையும் தரும்-கொடுக்கும் மைந்தாமாணக்கா ஆமிவற்றில் ஆகாரின்றவிவ்விரண்டில் ஒன்றியற்றினர் ஒன்றைப்பியாசஞ்செய்தவர்கள் ஒன்றையேயடைகுவ ரவ்வொன்றினையேயடை குவார்கள் இதுதீர்வை இதுநிச்சயமாம் அன்றுளபெரியோர் அப்போதுளர்

மகான்கள்யாமுரைத்த நாம்சொன்னஅவ்விரண்டையுமியற்றினர் அக்காமியத்தவ நிஷ்காமியதவமென்னு மிரண்டிலுமுயற்சி செய்தார்கள்.

இ-ள்-முன்னுள்ளஞானவான்களிற் சிலரிரண்டுதவத்தையு மனுசரித்ததனாற் சித்திமுத்திகளிரண்டையும்பெற்றார்களென்பதாம் சரு

அ-கை-ரு-து

அனகனமர்ந்தனேமுத்திஞானத்தையேயடைந்தனமல்லாமற்
சனகன்மாபலிபகீரதன் முதலியனோர் சித்திகள்படித்தாரா
யினியசித்தியைவிரும்பினர் சிலர்சிலரிரண்டையுமுயன்றாகண்
முனிவர்சித்திகள் விநோதமாத்திரந்தரு முத்தியைத்தாராவே

இ-ள் அனகனமர்ந்தனே களங்கமற்றவனேசனகன்சனகராசன்மாபலி-மகாபலிச்சக்கிரவர்த்திபகீரதன் பகீரதராசன் முதலினோர் ஆகியவைர்கள் ஞானத்தை-ஞானத்தையப்பியாசித்து முத்தி- மோட்சத்தை அடைந்தனரல்லாமல் பெற்றார்களேயன்றி சித்திகள்படித்தாரா அணிமாதிசித்தியையப்பியாசஞ்செய்தார்களா சிலர்சிலமுனிவர்கள் இனிய சித்தியைவிரும்பினர் இனிமையானவணிமாதிசித்திரைமாத்தியமவிரும்பினோர்கள் சிலர்-சிலமுனிவர்கள் இரண்டையுமுயன்றார்கள் சித்திமுத்திகளிரண்டையுமப்பியாசித்தார்கள் முனிவாசித்திகள் முனிவரப்பியாசித்தவணிமாதிசித்திகளானவைவிநோதமாத்திரந்தரும் காலம்போக்குவிளையாடலே மாத்திரங்கொடுக்கும்முத்தியைத்தாரா மோட்சத்தைக்கொடுக்கமாட்டாது-எ று

இ-ம்-யோகத்தினாலணிமாதிகளைப்பெற்றுமவைகளாற்பயன் படாமற்பின்னாற்ஞானப்பேற்றினால் முதியைப்பெற்றார்களாதலால் சித்திகளை ஞானிகள் விரும்பவில்லையென்பதாம்,

அ-கை சித்திகளாற்பயனின்றென்பது தெரிந்துஞ்சிலஞானிகளேன் அதைவிரும்புகிறார்களென வினுதலுக்குத்தரம்

யோகஞானமேமுத்தியைத்தருமெனினொழிதங்கசித்திகள்வேண்டி
மோகமாயுள்ளவருந்தினர்சிலசில முத்தர்களேனென்றாற்
போகமாய்வரும்பிராரத்வகன்மங்கள் புசித்தன்றாநசிதேகு
மாகையாலந்தச்சித்திகள்பிராரத்வ மாகுமென்றறிவாயே

இ ள் யோகஞானமே ஐக்கியமானவத்துவிதஞானமேமுத்தியைத்தருமெனின் மோட்சத்தைக்கொடுக்குமாயின் ஒழிந்தசித்திகள் அது நீங்கியவணிமாதிசித்திகளை வேண்டி-விரும்பி-மோகமாய் ஆசையுற்று சிலசிலமுத்தர்கள் சிலசீவன் முத்தர்கள் உடல்வருந்தினற்றேகம்வருத்தமுற்றார்கள்-ஏனென்றால் அவ்வாறுவருந்தியதியாதினாலென்னில்போகமாய்வரும் அனுபோகமாய்வருகின்ற பிராரத்வகன்மங்கள்பிராரத்வ

ண்மங்களானவைபுசித்தன்றோபுசித்தல்லவா விட்டேகும்கெட்டுப்போ
ம்ஆகையால் ஆதலால் அந்தச்சித்திகள் அவர்கள்பெற்றவணிமாதிசித்
திகள்பிராரத்வமாகுமெனறுஇச்சாபிராரத்வமாகுமென்று அறிவாய் அ
றிந்துகொள்வாய்-எ-று

இ-ம் சித்திகளைவிரும்புவது பிராரத்வகன்மமென்பதாம் சூ
அ-கை ஐயந்தெளிவித்தவாசிரியன்பின்வியந்துதுதித்தல்

இலக்கமாயிரஞ்சுருதியாலூகத்தாலெண்மனமசையாமற்
றிலக்கவேண்டுமென்றருட்குருவேயகப்பிராந்திபோய்த்தெளிவா
னிலக்கமானகண்ணாடியையடிக்கடி துலக்கினாற்பழுதன்றே
யலக்கண்மாறியதேவரீரெனக்குரைய முதங்கடெவிட்டாவே

இ-ள் இலக்கமாயிரஞ்சுருதியால்-அளவற்ற வேதங்களினாலும்ஊ
கத்தால்யுத்தியினாலும் என்மனம் என்மனமானது அசையாமற்றிரிக்க
வேண்டுமென்றுசலனமின்றிஸ்திரமாயிருக்கவேண்டுமென்று அருட்கு
ருவே அநுக்கிரகஞ்செய்யுந்தேசிகரே அகப்பிராந்திபோய்மனதின்க
ணுள்ளமயக்கமநீங்கிதெளிவானேன்தெளிவையடைந்தேன் இலக்கமா
னகண்ணாடியை விளக்கமான கண்ணாடியை அடிக்கடி துலக்கினால் திரு
ம்பத்திரும்பவிளக்கினால் பழுதன்றே-குற்றமல்லவே அலக்கண் மாறி
யபவத்துன்பநீக்கியதேவரீர்சுவாமிகள் எனக்குரை அடியேனுக் கரு
ளியஅமுதங்கள்உபதேசமுதங்கள் தெவிட்டாபுசிக்கப்புசிக்கத் தெவி
ட்டாவாம் எ-று

இ-ம் வெளிப்படை

அ-கை பிரமசிருட்டியான சீவேஸ்வரசகத்விவகாரக ஞானஞ்
பிராரத்வவென்றறிந்த சிடனுக்குவித்தாகவுபத்தி சிருஷ்டி யினால
மைந்துகிடக்கின்றசஞ்சிதத்தைக்கெடுக்கும்பொருட்டஃது நசிக்குமெ
ன்றவிரண்டுவகையில்யாதுண்மையெனவினவுதல்

கைதவங்களைச்சாத்திரஞ்சொல்லுமோ கருணையாலெனையாளு
மையனேகுருவேயெவராகிலுமனுபவித்தாலன்றிச்
செய்தகன்மங்கள்விடாதென்றவசனமுந்தெரிசிக்கசித்தமேவத்
துய்யஞானத்தீசுடுமென்றவசனமுந்துணிவதெப்படிநானே

இ-ள் கைதவங்களை அசத்தியங்களை சாத்திரஞ்சொல்லுமோ நூல்க
ளுரைக்குமோ கருணையால் கிருபையினால் எனையாளும் அடியேனை
யாளாகின்ற ஐயனே குருவே என்னுடையவாசாரியரே எவரா
கிலும்யாவராகிலும் செய்தகன்மங்கள் செய்தசெந்தபிசமாகியசஞ்சித
வினைகளை அனுபவித்தாலன்றிபுசித்தாலல்லது விடாதென்றவசனமும்
நீங்காதென்றவாக்கியமும்வேவ அந்தவாறேபடி துய்யஞானத்தி பரி-

சுத்தமான ஞானாக்கினியானது சுடுமென்றவசனமும் - எரிக்குமென்ற வாக்கியமுமாகிய விரண்டையுநான் அறியேன் துணிவதெப்படியெனிவதெவ்விடம்-எ-று.

இ-ம் சஞ்சிதகன்மமனுபவித்தாற்றீரும் ஞானத்தாற் றீருமென்ற வசனத்தில் யாதுறுதியென வினாவியதாம் ௪௯

அ-ஙக அவ்வினாவிற்குத்தரம்

சிவபேதங்களள்விலைமைந்தனே செய்கையுமளவில்லை
யாவராமவரவரதிகாரங்களறிந்து பக்குவநோக்கிப்
பூவலர்ந்து பின்பலன்கள்காட்டுவனபோற் பூருவஞ்சித்தாந்தங்
காவல்வேதங்களிரண்டையும்வசனிக்குங் காண்டமூவகையாலே.

இ-ள் மைந்தனே - மாணாக்கனே சிவபேதங்கள் - சீவர்களுடைய வேறுபாடுகள் அளவில்லை-மட்டில்லை செய்கையுமளவில்லை-அவர்செயலு மட்டில்லை ஆவராம்-அவரவர்களுக்கவன் வருமாதலால் அவரவரதிகாரங்களறிந்து - அவரவர்களின திகாரந்தெரிந்து பக்குவநோக்கி பருவம்பார்த்து பூமலரானது அலர்ந்து-விகசித்துபின்-பின்புபலன்கள் காட்டுவனபோல்-பயனைக்கொடுப்பதுபோல் காவல்வேதங்கள் - நம்மைக் காக்கின்றசுருதிகள் காண்டமூவகையால்-கர்மகாண்டம்பத்திகாண்டம் ஞானகாண்டமென்னு மூன்றுபகுப்பினால் பூருவம்-பூருவபட்சவாக்கியமும் சித்தாந்தம்-சித்தாந்தவாக்கியமுமாகிய இரண்டையும்வசனிக்கும் இரண்டுவகையையுஞ்சொல்லும்-எ-று.

இ-ள் சீடனது பக்குவத்திற்கேற்கப் பூருவபக்ஷஞ்சித்தாந்தமென விரண்டாக வேதங்கூறுமென்பதாம். ௫௰

அ-ஙக இ-து

ஆனபாவிகளடைவானரக மவசியமானலுந்
தானமந்திரவிரதயோகங்களாற் றவிருமென்பதுபொய்யோ
வீனமாம்பவசன்மசஞ்சிதவினை யெத்தனையானலு
ஞானமாங்கனல்சுடுமென்றமறைமொழிநம்பினால்வீடுண்டே

இ-ள்- ஆனபாவிகள்-கொடியபாவிகள் அடைவானரகங்கள்-நரகங்களையடைவது அவசியமானலும்-உண்மையானலும் தானம்- தானங்களினாலும் மந்திரம்-மந்திரங்களினாலும் விரதம்-நோன்புகளினாலும் யோகங்களால்-யாகங்களினாலும் தவிருமென்பது-ஒழியுமென்பது பொய்யோ-அசத்தியமானமையோ-இழிவாகிய பவசன்மம்- அனந்தசனனத்தைக்கொடுக்கும் சஞ்சிதவினை-சஞ்சிதகன்மம் எத்தனையானலும்- எவ்வளவுசேர்ந்திருக்கினும், ஞானமாங்கனல்-ஞானாக்கினியானது சுடுமென்ற- எரிக்குமென்றமறைமொழி-வேதவாக்கியத்தை நம்பினால்-நம்புவானால் வீடு-முத்தியுண்டாம்-எ-று ௫௧

அ-கை சஞ்சிதத்தைக் கெடுக்குஞானமிருக்கக் கன்மத்தைவிரும்புவதென்னெனவினுதல்.

என்மருந்திருக்கோயிலாத்தினங்குடியிருந்தருள்மூர்த்தி
சென்மசஞ்சிதவினையைவேரறுத்திடுந் தேவரீர்மெய்ஞ்ஞானந்
தன்மயந்தருமகிமையைவிபுதர் சகத்துளோரறியாமற்
கன்மமாங்குழியினில்விழுந்தழிகின்றகாரணமுரையீரே.

இ-ள் என்மன்னம் - அடியேனிதயாம்பரமே திருக்கோயில்-சிறந்த கோயிலாகதினம்-எப்போதும குடியிருந்தருள் குடிகொண்டிராநின்ற குருமூர்த்தி-தேசிகமூர்த்தியேசென்மசஞ்சித வினையைபலவிருட்சமான சஞ்சிதகன்மத்தை வேரறுத்திடும்-மூலத்தோடுகெடுக்கின்ற தேவரீர் மெய்ஞ்ஞானம்-சுவாமிகள்போக்கு முண்மை ஞானமானது தன்மயந்தரும்-தனதுஸ்வரூபத்தைக்கொடுக்கும் மகிமையை-பெருமையை விபுதர்-வானவரும்சகத்துளோர் உலகத்தாரும் அறியாமல்-தெரியாமல்கன்பமாம்-கிரியையாகிய குழியினில்-படுகுழியில்விழுந்தழிகின்ற- வீழ்ந்துகெடுகின்றகாரணமுரையீர்-காரணத்தைச்சொல்வீர்-எ-று.

இ-ம் வெளிப்படை

அ.கை இ-து அவ்வினுவிற்குத்தரம்

அழிவிலாததற்பதந்தனைமைந்தனே யகமுகத்தவர்சேர்வார்
வழிநடப்பவர்பராமுகமாயினுன் மலர்ந்தகண்ணிருந்தாலுங்
குழியில்வீழ்வர்கணப்படிவெளிமுகங் கொண்டுகாமிகளானோர்
பழிதரும்பிறவிக்கடலிலுழலுவார் பரகதியடையாரே.

இ-ள். அழிவிலாத-கெடாத தற்பதந்தனை -பிரமபதத்தை மைந்தனே-புத்திரா அகமுகத்தவர்சேர்வார் - அந்தர்முகத்தையுடையவர்களடைவார்கள்வழிநடப்பவர்மார்க்கத்தில்செல்பவர்கள் பராமுகமானனேல்-பராமுகமாய்நடந்தால் மலர்ந்தகண்ணிருந்தாலும் - விச்சிதமாகினேத்திரமிருக்கினும் குழியில்வீழ்வர்காண்-பள்ளத்தில் விழுவார்கள் அப்படி - அவ்வண்ணம் வெளிமுகங்கொண்டு-பகிர்முகத்தினைல் காமிகளானோர் இச்சையையுடையவர்கள்பழிதரும்-பழியைக்கொடுக்கின்றபிறவிக்கடலிலுழலுவார் - பலசமுத்திரத்திற் சுழலுவாகள்பரகதி - முத்தியை அடையார்-பெறமாட்டார்கள்-எ-று

இ-ம் அகமுகமின்றிப் பகிர்முகமாகச் செல்லுதலே கன்மங்களிற் செல்லுதற்கேதுவென்பதாம் ருஉ

அ-கை சிவச்செயலிவைசிவச்செயலிலவெனத் தெளிபனித்தஞ்சீவன் பகிர்முகமாதலி னீசன்செய்விக்குஞ் செயலேயன்றிச் சீவர்தெளென்செய்வார்களென்ற வினுவிற்குத்தரம்

சிறந்தநன்மையுந்தீமையுமீசனார் செய்விக்குஞ்செயலன்றோ
பிறந்தசீவர்களென்செய்வாரவர்கள்மேற்பிழைசொல்லும்வகையேதோ
துறந்ததேசிகமூர்த்தியேயென்றிடிற்சுருதிநூற்பொருண்மார்க்க
மறந்தமூடர்கள் வசனிக்கும்பிராந்திகாண்மைந்தனேயதுகேளாய்

இ-ள் சிறந்தநன்மையும்சிறப்பானநன்றும் தீமையும் தீங்கும் ஈசனாவர் செய்விக்குஞ்செயலன்றோ செய்விக்குஞ் செய்கையல்லவா பிறந்தசீவர்கள் சனித்தசீவர்கள் என்செய்வார்- என்னசெய்வார்கள் அவர்கள்மேல்அச்சீவர்கள்மேல் பிழைசொல்லும் குற்றஞ்சொல்கின்ற வகையேதோ-வகையென்ன துறந்ததேசிகமூர்த்தியேயென்றிடில் சகபற்றுக்களையும்விடுத்தவாசிரியரேயென்று கேட்பாயாகில் சுருதிநூற்பொருண்மார்க்கம்-வேதசாஸ்திரார்த்தவழியைமறந்தமூடர்கள் மறந்தவஞ்ஞானிகள்வசனிக்கும் பிராந்திகாண் சொல்கின்றமயக்கமாம் மைந்தனே புத்திரனே அதுகேளாய்-அதைகேட்பாய்-எ-று

அ-லகக-இ-து

நிகழ்ந்தவீசனார் சிருட்டியுஞ்சிவனார்சிருட்டியும்வெவ்வேறே
சகத்தனிற்பொதுவீசனார்சிருட்டிகள்சராசரப்பொருளெல்லா
மகந்தையாமபிமானங்கள்கோபங்களாசைகளிவையெல்லா
நிகழ்ந்தசிவனார் சிருட்டிகளாகுங்கா ணிமலனார்செயலன்றே

இ-ள் நிகழ்ந்தவீசனாசிருட்டியும் விளங்கியவீஸ்வரசிருட்டியும் சிவனார்சிருட்டியும்-சீவசிருட்டியும் வெவ்வேறு வேறுவேறாய் சகத்தனில்உலகத்தில் பொதுபொதுவாகிய சராசரம்பொருளெல்லாம் சராசரப்பிரபஞ்சங்களனைத்தும் ஈசனார்சிருட்டிகள் ஈஸ்வரசிருட்டிகளாம் அகந்தையாம் அகந்தையாகிய அபிமானங்கள் அபிமானங்களுங்கோபங்களும் துவேஷங்களும் ஆசைகள் இராகங்களுமாகிய இவையெல்லாம் இவைகளனைத்தும் நிகழ்ந்த விளங்கிய சிவனார் சிருட்டிகளாகுங்காண்-சிவசிருட்டிகளாம் நிமலனார்செயலென்று நின்மலமான வீஸ்வர சிருட்டிகளல்ல-எ-று

இ-ம் ஈஸ்வரசிருட்டி சீவசிருட்டிகளிவையெனப்பகுத்துக்கூறினதாம்

அ கை-இ-து.

மூவராம்பரன்சிருட்டிகளுயிர்க்கெலாமுத்திசாதனமாகும்
சீவனாரதுசிருட்டிகடங்களைச் செனிப்பிக்கும்பிணியாகுஞ்
சாவராதிகண்சித்திடிலொருவர்க்குஞ் சனனங்கணசியாவாங்
கோலமாதிகணசித்திடிற்பங்கமுறுங்கொடும்பிறவிகள்பெருகுமே

இ-ள் மூலாரம்பரதன் சிருட்டிகள் மும்மூர்த்திகளான விஸ்வாசிருட்டிகளானவை உயிர்க்கெல்லாம்சீவர்களனைவர்க்கும்முத்தி -வீட்டைய தற்குச்சாதனமாகும்-சாதனமாம் சிவஞானசிருட்டிகள்சிவசிருட்டிகளானவைதங்களைச்சென்னிப்பிக்கும் பிணியாகும் சீவர்களைப் பிறப்பிக்கின்றசஞ்சிதரோகமாம் தாவராதிகண்சித்திடில்ஈஸ்வரசிருட்டியாகிய தருமமுதலிய பஞ்சபூதபௌதிகவடிவங்கணசிக்கின் ஒருவர்க்குட் ஒருவர்க்காவதுசனனங்கணசியாவாம்பவங்கணீங்காவாம் சோபமாதிகனசித்திடில்-சிவசிருட்டியானதுவேஷமுதலிய விகற்பமிறக்கின்றபந்தமானகொடும்பிறவிகள்-கொடியசனனங்கள் போம்-நசிக்கும்-எ-று

இ-ம் ஈஸ்வரசிருட்டியானபஞ்சபூத பௌதிகமுதலிய தத்துவங்கண்முத்திக்குச் சாதனமுஞ்சிவசிருட்டியானசாமக்குரோதாதிகள்பவத்திற்கேதுவுமாமென்பதற்பகுத்துக்கூறினதாம் ௫௯

அ-கை-இ-து

ஈசர்காரியம்பிரளயத்தொழியவுமெவர்பலமொழிந்தார்க
டேசகாலதேகாதிகளிருக்கவுஞ் சிவகாரியமோக
நாசமாகியவ்விவேகத்தினுயிரொடு ஞானமுத்தர்களானோர்
பாசமோகங்கள் பசுக்களின்செயலன்றிப் பசுபதிசெயலன்றே

இ-ள் ஈசர்காரியம் ஈஸ்வரசிருட்டியானபஞ்ச பூதபௌதிகங்கள் பிரளயத்தொழியவும் கற்பத்திற்கெடவும் எவர்பலமொழிந்தார்கள்-யாவர்பிறவியையொழிந்தவர்கள் தேசகாலதேகதிகள் தேயமுங்காலமும் தேகமுமுதலிய வீஸ்வரசிருட்டிகள் இருக்கவும் இருக்கும்போதேசிவகாரியமோகம்சிவசிருட்டியானகாமமுதலியவைகள் நாசமாகி நசித்து அவ்விவேகத்தின் அவ்விவேகத்தினால் உயிரொடுஞான முத்தர்களானோர்சீவன்முத்தர்களானோர்களாதலால் பாசமோகங்கள்-காமம்வெகுளிமயக்கங்கள் பசுக்களின் செயலன்றி சிவச்செயலன்றி பசுபதிசெயலன்றோஈஸ்வரன்செயலல்ல-எ-று

இ-ம் ஈஸ்வரசிருட்டியிருக்கச் சிவசிருட்டிநசிக்கினப்போதே வீட்டைதலாற்காமமாதிகள்சிவச்செயலேயன்றிச் சிவச்செயலன்றென்ப,

அ-கை-இ-து

அச்சுவத்தமென்மெருருமரமதிலிரண்டருப்பறவைகள்வாழு
நச்சுங்கொருபறவையாம்மரக்கனிநன்றுநன்றெனத்தின்னு
மெச்சுமங்கொருபறவைதின்று வியங்கிப்பொருளாக்"
வைச்சுமரமதைசிவனையீனே வருந்தவாற்றியாயே

இ-ள் அச்சுவத்தமென்னொருமரம் - அரசென்றுபேருள்ளவொருவிருட்சம் அதில-அத்தருவில்இரண்டரியும்பறவைகள் இரண்டரியப்பட்சிகள் வாழும்-வாழ்ந்துகொண்டிருக்கும் அங்கு-அவ்விடத்து நச்சுப்புவிருப்புகின்ற ஒருபறவை-ஒருபட்சியானது அம்மரக்கனி- அத்தருவின்பலத்தைநன்றுநன்றெனத்தின்னும் நல்லது நல்லதென்று புசிக்கும் அன்றும்-அதன்கண்மெச்சும்மெச்சப்பட்டஒருபறவை-ஒருபட்சியானது தின்றுதெனபுசியாதென்று வியங்கியப் பொருளாகவைச்சு-குறிப்புப்பொருளாகவைத்து சிவனை-சிவனையும் ஈசன்-ஈசனையும் வகுத்தவாறு பகுத்தவண்ணம் அறிவாய்தெறிவாய்-எ-று.

அச்சுவத்தமென்பது-தலைகீழான மாயவிருட்சமெனக்கொள்க

இ-ம் மாயையில்வாழுகின்றசீவேஸ்வரர்களிற்றூர மிருதெனப்பகுத்துக்கூறினதாம் ௫௮

அ-கை-இ-து

இந்தச்சிவனால்வருமறுபகையெலா மிவன்செயலல்லாம்
லந்தத்தேவனால்வருமென்றமூடர்க ளகோரகதியடைவார்க
ளிந்தச்சிவனால்வருமறுபகையெலா மிவன்செயலல்லாம்
லந்தத்தேவனாலன்றெனுட்வேகியே யமலவீடடைவாரே

இ-ள் இந்தச்சிவனால் இச்சிவனால் வரும்-உண்டான அறுபகையெலாம் காமமுதலியபகைகளாறும் இவன்செயலல்லாமல் -இவன்சிருட்டியேயன்றி அந்தத்தேவனால-அவ்வீசனால் வருமென்ற-உண்டாமென்றமூடர்கள்-அறிவினர்கள் அகோரகதியடைவார்கள்-நரகத்தையடைவார்கள் இந்தச்சிவனால்-இச்சிவனால் வரும்உண்டாகும் அறுபகையெலாம்-சட்புணககண் முதலியவனைத்தும் இவன்செயலல்லாமல்-இச்சிவசிருட்டியேயன்றி அந்தத்தேவனால் அன்றெனும் வந்ததென்றென்னும் விவேகியேவிவேகிகளே அமலவீடடைவார்-நின்மலமான மோட்சத்தையடைவார்கள்-எ-று.

இ-ம் காமமாதிகளைஈஸ்வரசிருட்டி யெனக்கருதாமற்சிவசிருட்டியெனக்கொண்டவற்றை விசாரத்தாற்கெடுக்கின்முத்தியுண்டாமென்பதாம்

அ-க்கை முன்னீஸ்வரசிருட்டிபொதுவென்றமையால் வரும்போது பந்தமின்மையன்னமாயிற்சீவர்களிடத்திற்பட்சபாதம்வருவதேனென்றசீனுவிற்குத்தரம்

நலமெய்யனேயெல்லவர்க்குந்தெய்வநாயகன்பொதுவானாற்
சிலரைவாழ்வித்துஞ்சிலரொடுங்கோபித்துஞ்செய்வதேனென்றுயேற்
குலவுமைந்தரைத்தந்தை போற்சிற்சிட்டரைக் குளிர்ந்துதுட்டரைக்
கலைகளலவழிவரச்செயுந்தண்டமுங்கருணையென்றறிவாயே

இ-ள் நலமெய்யனேஉண்மையான நல்லவாசிரியரே எல்லவர்க்கும்-அனைவர்க்கும் தெய்வநாயகன்-ஈஸ்வரன் பொதுவானால்- பொதுமையானால்சிலரைவாழ்வித்தும்- சிலரைவாழ்வுறசிலரொடுகோபித்தும் சிலரைத்துன்புறவும் செய்வதேனென்றுயேல்-செய்வதென்னவென்று கேட்பாயாகின்குலவுமைந்தரை-குலவாநின்றபுத்திரர்களை தந்தைபோல்பிதாவைப்போல் சிட்டரைக்குளிர்ந்து- சற்சனருக்கின்பஞ்செய்துதுட்டரைக்காய்வன-துற்சனருக்குத்துன்பம் செய்வன்கலைகள்சாஸ்திரங்கள்சொல்லுமநல்வழிவர-சன்மார்க்கத்தையடையசெய்யுந்தண்டமும்பிவர்களைச்செய்யுஞ்சிட்சையும் கருணையென்றறிவாய்கிருபையென்றுணர்வாய் எ-று

இ-ம் சீவர்கள்சுகப்படும்பொருட்டு வருந்தினத்தும்கருணையேயன்றிப்பட்சபாதமென்றென்பதாம் கூடு

அ-கை அங்ஙனமாயினீசன்யாவரையுமேனிரட்சிக்கவில்லையென வருஞ்சங்கைக்குத்தரம்

மனைவிலங்கருமைந்தனேகற்பக மரங்கனல்புனன்மூன்றுந்
தனையடைந்தவர்வறுமையுஞ்சீதமுந் தவிர்த்தாளு
மனையவீசனுமடைந்தவர்க்கருளசெய்வாரான்கவர்க்கருள்செய்யா
ரினையகுற்றங்களெவர்குற்றமாகுமென்றெண்ணிநீயறிவாயே

இ-ள் மனைவிலங்கறும்-சம்சாரங்களநீக்கியமைந்தனே- புத்திராகற்பகமரம்-கற்பகவிருட்சமும்கனல் அக்கினியும்புனல்சலமும் மூன்றுஇவைமூன்றும்தனையடைந்தவர்- தம்மைச்சேர்ந்தவரதுவறுமையும்தரித்திரத்தையும்சீதமுமகுளிரையும்தாகமும் தாகத்தையும்தவிர்த்தாளும்நீக்கிஇரட்சிக்கும் அனைய-அத்தன்மையனவாகியஈசனும்- ஈஸ்வரனும்அடைந்தவர்க்கு-தம்மையடைந்தவர்க்கு அருள்செய்வார்கிருபைசெய்செய்வார் அகன்றவர்க்கு-அடையாதவர்களுக்குஅருள்செய்யார்கிருபைசெய்யார் இனையகுற்றங்கள்-இத்தன்மையானகுற்றங்கள்எவர்குற்றமாகுமென்-யாவர்குற்றமாமென்று எண்ணிஆலோசித்துநீயறிவாய்நீதெரிந்துகொள்வாய் எ-று

இ-ம் கற்பகவிருட்சமுதலியவற்றைச் சார்ந்தவர்க்குத்துன்பநீக்கிஇன்பமுண்டாவது போலவீசனைச்சார்ந்தவர்களுக்குப்பவத்துன்பநீங்கிவீட்டின்பமுண்டாவதுண்மையெனவறிந்தவனைச் சாரமுயற்சிசெய்யாதசிவன் குற்றமேயென வறிகவென்பதாம் கூக

ஆ-கை ஞானமுண்டாகச்சிவன்முயற்சிக்குமறைபுகூறல்

ஒன்றுகேண்மகனேபுமான்முயற்சியாலுரைத்துமானிடர்க்கீச
னன்றுசெய்யவேகாட்டியநூல்வழி நடந்துநல்லவர்பின்னே [ளி
சென்றுதுட்டவாதனைவிட்டுவிவேகியாசசெனித்தமாயையைத்த
நின்றுஞானத்தையடைந்தவர்போநிச்சயமிதுதானே [ன்

இ-ள் மகனே-புத்திரா ஒன்றுகேள்-ஒருவசனங்கேட்பாய் புமான்முயற்சியால்புருஷப்பிரயத்தினத்தினால் ஈசன் ஈஸ்வரன் மானிடர்க்குமனிதர்க்கு நன்றுசெய்ய நன்மையைச்செய்யஉரைத்து சொல்லிகாட்டியகாண்பித்தநூல்வழிநடந்துசுருதிமார்க்கத்திறபோய்நல்லவர்பின்சென்றுசத்துக்கள்வாக்கியப்படி யவர்பின்சென்றுதுட்டவாசனை விட்டுஅசுத்தவாஸனையைநீக்கி விவேகியாய்-சிற்சடங்களைப்பகுத்தறியும்விவேகத்தையுடையவனாய் செனித்தமாயையைத்தள்ளி கற்பனையாகவுதித்தசபமானமாயையைநீக்கி நின்றுஇலட்சணமானகூடஸ்தனாயிருந்துஞானத்தைபிரமசைதன்னியத்தை அடைந்தவர் பெற்றவர்களுடைய பவங்கள்போம்பிறவிகணீங்கும் இதுதான் இதுவேநிச்சயம்சத்தியமாம் எ-று

இ-ம் சிவன்றனதுமுயற்சியினாலீஸ்வரனுக்கிரகம்பெற்று அவர்வாக்கியமானவேதாந்தமுடிவைக்குருமுகமாகவிசாரித்தகனால் விவேகமுண்டாயுஞ்ஞானநீங்கிஞானமுதயமாகிப்பவநீங்குமென்பதாம் கூஉ

ஆ-கை எதினாலிந்தஞானமுதிக்குமென்றவினாவிற்குத்தரம்

இந்தஞானந்தான்வருவதெப்படியெனிலிடைவிடாவிசாரத்தால்
வந்தடைந்திடும்விசாரந்தானேதெனின் மனுதியாஞ்சரீரத்தால்
இந்தநானெனவனசித்தது சடமேது யிரண்டுமொன்றுக்கூடும்
பந்தமேதுவீடேதெனவு சாவுதல்விசாரமென்றறிவாயே

இ-ள் இந்தஞானந்தான்-இப்பிரமஞானமானதுவருவதெப்படியெனில்-உதிப்பதெவ்வண்ணமென்று கேட்பாயாகில் இடைவிடாவிசாரத்தால்-இடையறாவாத்மவிசாரணையால் வந்தடைந்திடும் வருவிசாரந்தான்விசாரணையாவது ஏதெனில்யாதெனில் மனுதியாஞ்சரீரத்தில் மனுமுதலிய தேகத்திலிருக்கின்ற இந்தநானெனவன் இந்தநான்யாவன்சித்தெது சித்தென்பதியாது சடமேது சடமென்பதியாது இரண்டுமொன்றாய்க்கூடிய-சித்துசடமாகியவிரண்டுமொன்றாகக்கூட்டப்பெற்றபந்தமேது-பந்தம்யாது வீடேது அதனைவிடப்பெற்றமுத்தியாதென உசாவுதல்-விசாரித்தல் விசாரமென்றறிவாய்விசாரணையென்றறிந்துகொள்வாய் என்றவாறு

இ-ம் சிற்சடவிலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமே ஞானமுதிப்பதற்கு ஏதுவென்பதாம் கூங

அ-கை கன்மமோக்ஷமென்றுங்கொள்கைநீங்கும்பொருட்டுஞான முதிப்பதற்குச்சத்கருமமிருக்கவிசாரமியாதுக்கென்றவினாவிற்குத்தரம்

போனசன்மங்கடமிலனுஷ்டித்தனாற் புண்ணியபரிபாக
ஞானமாகுமேவிசாரமேனென்றிடி லுரைத்திடக்கேளா
யானபுண்ணியமீசுரார்ப்பணஞ்செயி னசுசியோஞ்சுசியாரு
மானதம்பினைவிசாரித்து ஞானத்தை மருவுமென்றறியாயே.

இ-ள் போனசன்மங்கடமில்-முன்சனனங்களில் அனுஷ்டித்த அப்பியாசஞ்செய்தசற்புண்ணியபரிபாகம் சத்கருமபாகத்தால்ஞானமாகுமேஞானமுதிக்குமே விசாரமேனென்றிடில்-விசாரணை யாதுக்கென்றாயாகில்நானுரைத்திடக்கேளாய்யான்சொல்லுவதைக்கேட்பாய் ஆனபுண்ணியம்- அத்தன்மையானசற்கருமத்தைஈசுரார்ப்பணஞ்செயின் -ஈஸ்வரப்பிரீதிசெய்யில்-அசுசியோய் -அசுத்தநீங்கும்சுசியாகும்-சித்தசுத்திவரும்மானதம்-மனதுபினை-பின்பு விசாரித்து சிற்சடவிசாரஞ்செய்து ஞானத்தைமருவுமென்று-சைதன்னியத்தையடையுமென்று - அறிவாய் தெரிவாய்-எ-று

இ-ம் நிஷ்காமமாகச்செய்யுஞ்சற்கருமஞ்சித்தசுத்தியையும்விசாரம்ஞானத்தையுங்கொடுக்குமாதலால்விசாரமேவேண்டுமென்பதாம்.

அ-கை பலபேற்றையுந் தரத்தக்கவலியுள்ளகன்மஞானத்தைத்தராதோ விசாரம் யாதுக்கென வினுதல்.

பத்தியும்வைராக்கியமும்பரா லோகமுமணிமாதி
சித்தியுந்தவநிட்டையும்யோகமுந் தியானமுஞ்சாரூப
முத்தியுந்தரும்விசித்திரகருமங்கண் மோசமாத்திரந்தன்னும்
புத்தியுந்தரலருமையோவிசாரமேன் புண்ணியகுருமூர்த்தி

இ-ள் பத்தியும் ஈஸ்வரபத்தியையும்வைராக்கியமும்-நிராசையையும்பரலோகமும்சுவர்க்காதிலோகங்களையும் அணிமாதிசித்தியும் அணிமாமுதலியவஷ்டசித்திகளையுந்தவநிஷ்டையும்-தவமுள்ளசமாதியையும்யோகமும்-இயமாதியஷ்டாங்க யோகங்களையுந்தியானமும்- மூர்த்தியாதியதியானங்களையும் சாரூபமுத்தியையும்தரும்-கொடுக்கின்ற விசித்திரகருமங்கள்-பலசத்தியுள்ள கன்மங்களானவை மோசமாத்திரந் தன்னும்-அஞ்ஞானத்தைக்கெடுக்கின்றபுத்தியுந்தரல் - அறிவையுங்கொடுப்பது அருமையோ அரியதோ விசாரமே-விசாரணையாதுக்கு புண்ணியகுருமூர்த்தி தருமஸ்வரூபமானவாசிரியரே-எ-று.

இ-ம் வெளிப்படை.

அ-கை-அவ்வினாவிற்குத்தரங்கூறுவான்றொடங்கித் திட்டாந்தங்கூறல்

வேடமாறியபேர்களையறியவே வேண்டினான்மகனேகேள்
கூடமாமவர்சுபாவங்கள்சீலங்கள் குறிகளாய்ந்தறியாம
லோடியுங்குதித்துந்தலைகீழ்நின்று முயர்ந்தகம்பத்தேறி
யாடியும்பலகன்மங்கள்செய்யினு மவருண்மைதெரியாதே

இ-ள்-வேடமாறியபேர்களை மாறுவேடங்கொண்டவர்களை அறிய வேண்டினால் அவர்யதார்த்தவடிவத்தை யறியவிரும்பினால் மகனேகேள்-மாணாக்கனேகேட்பாய் கூடமாம்-இரகசியமான அவர்சுபாவங்கள் அவர்களுடையகுணங்களையும் சீலங்கள் நடைகளையும் குறிகள் அடையாளங்களையும் ஆய்ந்தறியாமல் ஆராய்ந்தறியாமல்ஓடியும்-ஓடியும்குதித்தும்-குதித்தும்-தலைகீழ்நின்றும் தலைகீழாகநின்றும் உயர்ந்தகம்பத்தேறி-உன்னதமான ஸ்தம்பத்திலேறி ஆடியும்-ஆடியும்-பலகன்மங்கள்செய்யினும் இவ்வாறானபலகன்மங்கள்செய்தாலும் அவருண்மைதெரியாது-அவர்களது யதார்த்தவடிவந் தெரியமாட்டாது-எ-று. கூசு

அ-கை, தாஷ்டாந்தங் கூறல்.

இன்னவாறந்தப் பிரமத்தையறிவிக்கு மிலக்கணத்தால்வேதஞ்
சொன்னஞானமும் விசாரத்தால்வருமன்றிசுருதிநூல்படித்தாலு
மன்னதானங்கடவங்கண்மந்திரங்களாசாரங்கள்யாகங்க
ளென்னசெய்யினுந்தன்னைத் தானறிகின்றதிவைகளால்வாராதே

இ-ள்-இன்னவாறு-இத்தன்மையைப்போல பிரமத்தை யறிவிக்கும்-பிரமஸ்வரூபத்தைதெரிவிக்கும் இலக்கணத்தால் லட்சணத்தால் வேதஞ்சொன்ன-சுருதிசொல்லியஞானமும்- பிரமஞானமும் விசாரத்தால்-விசாரணையினால்-வருமன்றி - வருமேயல்லாமல்-சுருதிநூல் வேதசாஸ்திரங்களை-படித்தாலும் வாசித்தாலும்-அன்ன தானங்கள் அன்னதானங்களும் தவங்கள்-தவங்களும் மந்திரிகள்·மந்திரிகளும் - ஆசாரங்கள்-ஆசாரங்களும் யாகங்கள் வேள்விகளுமாகிய வினைகளில் என்ன செய்யினும் எக்கருமங்களைச்செய்தாலும் தன்னைத்தானறிகின்றது ஆத்மாவாகிய தன்னைத்தெரிந்துக்கொள்வது இவைகளால்-இக்கன்மங்களால்-வாராது-வரமாட்டாது-எ-று.

இ-ள்-க-ம் ஒருவனுண்மையைத்தெரிவிக்குஞ்சத்தி யுணர்வுக்கேயன்றித் தொழிற்கின்மைபோல ஞானத்தையறிவிக்குஞ் சத்திவிசாரத்திற்கேயன்றிக் கன்மத்திற்கின்றென்பதாம். கூஎ

அ-கை, ஞானமுதிப்பதற்கு நீங்கவேண்டிய வஞ்ஞானங்கருமத்தாலன்றி விசாரத்தாலெங்ஙனநீங்குமெனல்.

துளங்குதர்ப்பணமழுக்கறக்கைக்கொண்டுதுலங்கிறுற்போமன்றி
விளங்குபுத்தியாலுலகிலார் துலக்கிறுர்விமலதேசிகமூர்த்தி
களங்கமாகுமஞ்ஞானமுமப்படி கருமத்தாற்கழுவாம
துளங்குறிந்தஞானத்திறுலெப்படி யொழியுமீதருள்வீரே.

இ-ள்-துலங்குதர்ப்பணம்-விளங்காநின்றசெப்புக்கண்ணுடியினுள்ள-அழுக்கற, களங்கமற-கைக்கொண்டு-கரங்கொண்டு - துலக்கிறுற்போமன்றி விளக்கிறுற்போமேயல்லாமல்-விளங்கும்-புத்தியால் -விளங்காநின்ற வறிவிஞல் உலகில்-சகத்தின்கண்-ஆர் துலக்கிறுர், எவர்விளக்கிறுர்கள் விமலதேசிகமூர்த்தி நின்மலமான-குரு மூர்த்தியே-களங்கமாகும்-களங்கமாகிய-அஞ்ஞானமும்-அஞ்ஞாத்தையும்-அப்படி-அவ்வண்ணம்-கருமத்தால்-கன்மத்திஞல்-கழுவாமல்-சுத்தி பண்ணுமல்-உளங்குறித்த-மனதிற்-குறிக்கப்பட்ட-ஞானத்திஞல்-அறிவிஞல் - எப்படியொழியும்-எங்கனநீங்கும் ஈதருள்வீர்-இதைச்சொல்லுவீர் எ-று.

அ-கை. ஞானமுதிப்பதற் கஞ்ஞானத்தைநீக்குதல் விசாரத்தாலன்றிக் கன்மத்தாற்கூடாவெனல்.

தர்ப்பணத்திற் களிம்புவாஸ்தவமலஞ்சகசமாதலின் மைந்தா
கற்பளிங்கினிற் கருநிறஞ்சாசமர்க்கறுத்ததன்றுரோபங்
தர்ப்பணத்தினிலழுக்கறவேண்டிஞற்சாதனத்தொழில்வேண்டுங்
கற்பளிங்கிலா ரோபமேகறுப்பெனக் கண்டிடமனம்போதும்

இ-ள்-தர்ப்பணத்தினில்-செம்புக்கண்ணுடியில்-களிம்பு களிம்பாகிய வாஸ்தவமலம்-உள்ளவழுக்கானது சகசமாதலின்-சுபாவ மாதலால்-மைந்தா-மகனே-கற்பளிங்கினில்-படிக்கல்லிற் ருேற்றிய-கருநிறம்-கருமைநிறமானது சகசமாக்கறுத்ததன்று-சுபாவமாகக் கறுத்ததன்று ஆரோபம்-கற்பிதமாம்-தற்பணத்தினில்-செம்புக்கண்ணுடியில்- அழுக்கறவேண்டிஞல் களங்கமறும்படிவிரும்பிஞல் சாதனத் தொழில்வேண்டும்-கருவிகளாற்செய்யுஞ் செயல்வேண்டும்-கற் பளிங்கினில்-படிக்கல்லிற்ருேன்றிய-கறுப்பு-கறுநிறம்-ஆரோபமேயெனக் கற்பிதமேயென்று கண்டிட-பார்த்திட-மனம்போது-மனமேபோதும்-எ-று. ௬௬

அ-கை-அதற்குபாயங்கூறல்.

இங்குமப்படி சச்சிதானந்தத்தி லிடர்சடம்பொய்மூன்றுந்
தங்குமாயையின் கற்பிதமன்றியே சகஸவாஸ்தவமன்றே
யங்கமாகுமஞ் ஞானத்தைக்கருமங்கள் பகைசெயாதுறவாக்குந்
துங்கஞானமே கருமம்ஞானத்தைச சுடுகின்றநெருப்பாமே

இ-ள்-இங்கும்-இத்திர்ஷ்டாந்தத்திலும் அப்படி அத்திர்ஷ்டாந்தத்தைப்போல சச்சிதாநந்தத்தில் அஸ்திபாதிப்பிரியத்தில் இடர்கடம்போம்-அனுர்தசட- துக்கமாகிய மூன்றும்-மூன்றும்- தங்கும்-தங்காநின்ற-மாயையின்கற்பிதமன்றியே மாயாகற்பிதமேயல்லாமல்- சகவாஸ்தமன்று-சுபாவமாயுள்ளதன்று-பங்கமாகுமஞ்ஞானத்தை - பழுதானவஞ்ஞானத்தைகருமங்கள்-கன்மங்களானவை பகைசெய்து-பகைபண்ணுமல்-உறவாக்கும்-நட்பாக்கும்-ஆங்கஞானமேமேலானஞானமேகருமவஞ்ஞானத்தை கருமரூபமாகிய வஞ்ஞானத்தை சுடுகின்றநெருப்பாமெரிகின்றவக்கினியாம்-எ-று.

இ உ-க-ம. செம்பிற்களிம்புபோல வாத்மாவுக்கஞ்ஞானஞ் சகசமாகாமற் பளிங்கிற் பஞ்சவர்ன்னம்போலப் பிராந்தியாதலா லங்ஙனந்தோற்றுங் கன்மசம்பந்த மான வஞ்ஞானத்தைக்கெடுப்பது விசாரரூபமான ஞானமேயாமென்பதாம். எய

அ-கை, முற்கூறியதை வற்புறுத்தல்

மனைக்குள்வைத்தபண்டங்களை மறந்தவன்வருடநூறமுதாலு
நினைத்துணர்ந்தபின் கிட்டுமெப்படியிந்த நிருமலவான்மாவு
மனர்த்தமானதன்மறதியைக்கெடுக்குந் தன்னறிவினாற்காணுமற்
கனத்தகன்மங்களாறுகஞ்செய்யிலுங்காணுமோகாணுதே

இ-ள்-மனைக்குள் வீட்டிற்குள்-வைத்தபண்டங்களை- வைத்தவஸ்துக்களை-மறந்தவன்- மறந்துவிட்டவன்-வருட நூறமுதாலும்-நூராண்டிற்றினும் நினைத்து-முன்வைத்தவிடத்தை கியாபகஞ்செய்து உணர்ந்துபின்கிட்டும்-அறிந்தபின்கிடைக்கும்-அப்படி அதைப்போலஇந்தநிருமலவான்மாவும்-இந்தநிருமலமானவாத்மஞானமும் அனர்த்தமானபிரயோசனமில்லாத தன்மறதியைக்கெடுக்கும் தனதறியாமையைப் போக்கும்-தன்னறிவினாற்காணுமல் தனதறிவினாறற்சிக்கப்படாமல் யுகஞ்செய்தாலும்-காணுமோகாணப்படுமோ-காணுது-காணப்படாது-எ-று

இ-ள்-ஞாபகத்தால்மறதிநீங்கின முன்வைத்தபொருள் வெளிப்படுமல்லது தொழிலால் வெளிப்படாததுபோல விசாரஞானத்தாலஞ்ஞானநீங்கி முன்னுள்ள பிரமப்பொருள் வெளிப்படுமல்லதுகன்மத்தால்வெளிப்படாதென்பதாம். எக

அ-கை. பிரமசுகத்தை விசாரஞானங் கொடுக்குமென்ற வேதமந்திரத்தைக் கன்மமுங்கொடுக்குமென்ப தியாதெனவினுதல்.

நன்மையாங்குருவே சுகந்தருவது ஞானமேயெனும்வேத
தன்மபாவமிச்சிரங்களாற்றேவர்கட்ருவிதங்குகண்மாந்தர்
சென்மமாகுவசாதியாசாரமே செய்தவஞ்சுகமன்று
கன்மகாண்டத்தில் விதிப்பதேன்விதித்துளகாரணமுரையீரே

இ-ள் நன்மையாங்குருவே நன்மையாகியவாசிரியரே சுகந்தருவது பிரமானந்தத்தைக்கொடுப்பது-ஞானமேயென்னும் அறிவேயென்கிற வேதம்-சுருதியானது தன்மம்-புண்ணிய கன்மங்களால் தேவர்கள் தேவர்களும் பாவம் பாவகன்மங்களால் தருவிலங்குகள் விருட்ச மு தன்மிருகமீறாகியவைத்தோற்றமும் மிச்சிரங்களால் மிஸ்ர கன்மங்களால் மாந்தர் மனிதர்களுமாகிய சென்மமாகுவ சென்மமாவனவென்றும் சுருதியாசாரமே-வன்னாச்சிரமதருமப்படி செய்தவஞ்சுகமென்றும் செய்கிறதவமே சுகமெனவும் கன்மகாண்டத்தில் கிரியா காண்டத்தில் விதிப்பதேன்விதித்ததென்ன விதித்துள அங்கனம்விதியாநின்றகாரணமுரையீர்-காரணத்தைச்சொல்வீர்-எ-று

இ-ம்-வெளிப்படை

அ-கை-அங்கனம்விதித்தவேதத்தினபிப்பிராயம்வேறெனக்கூறல்

தினமுண்ணுகாபிள்ளைநோய்க்கிரங்கியேதீம்பண்டமெதிர்காட்டிக்
கன்மருந்துகளொளித்துவைத்தழைக்கிணையாந்தாய்போல
மனையறங்கள்செய்மகங்கள்செய்நன்றன்றுமலர்ந்தவாசகஞ்சொல்லு
நினைவேறுகாண்சுவர்க்ககாமிகளந்தநிர்ணயந்தெரியாரே

இ-ள் தினமுண்ணுகர் நாடோறுமண்ணைப்புசிக்கின்றபிள்ளைநோய்க்கு குழந்தையின்வியாதிக்கு இரங்கி இரக்கமுற்று கன்மருந்துகளொளித்துவைத்து கைப்பானஔஷதங்களைமறைத்துவைத்து தீம்பண்டமெதிர்காட்டி தித்திப்புள்ளவஸ்துக்களையெதிரேகாண்பித்து அழைக்கிற அக்குழந்தையைக்கூப்பிடுகின்ற கருணையாந்தாய்போல் கிருபையுள்ள மாதாவைப்போல மனையறங்கள்செய் இல்லறகருமங்களைச்செய் மகங்கள்செய் யாகங்கள்செய் நன்றென்று அஃதுண்மையென்று மலர்ந்த வாசகம்-விகசிதமானவேதவாக்கியம் சொல்லு நினைவு வேறுகாண் சொல்லுகின்றகருத்துவேறாகும் சுவர்க்ககாமிகள் சுவர்க்கவிருப்பமுள்ளவர்கள் அந்தநிரணயந்தெரியார் அக்கருத்தினிர்ணயத்தையறியார்

ப-ம்-மண்ணுகர்பிள்ளையென்பதனால் விடயத்தைநுகருமறிவிலி யென்பதும் நோயென்பதனாற்பிறவித்துன்பமென்பதும் இரங்கியென்பதனாலருளுற்றென்பதும் தீம்பண்டங்காட்டி என்பதனால்சுவர்க்காதி

பதங்களைக்காட்டுமென்பதும் மருந்துகளொளித்துவைத் தென்றதனுல்ஞானாமுதத்தை யொளித்துவைத்தெனவும் அழைக்கின்றதாயென்றதனால் அவ்வமுதத்தைக்கொடுக்க வேதன்விளக்குமென்பதுங் கொக்கிடந்தன.

இ-ம்-வேதன் இகவின்பத்தை நீக்குவான் பரவின்பத்தைக் கூறியஃதுநீக்கியபின் னிச்சையுநீக்கிப் பரமசுகமாகும்பொருட் டங்கனங் கூறினனென்பதாம். ௭௨

அ-கை-வேதம் போகபோக்கியங்களை யனுபவிக்க விதியாதென்பதற்குவமைகூறல்.

போகமாருயிர்கண்டதையுண்பதும் புணர்வதுமியல்பேகா
ணுகமங்களுஞ்சுபாவத்தைவிதிக்குமோ வத்தனைதெரியாதோ
காகமேகறுத்திடுநெருப்பேசுடு கசந்திடுவேம்பேநீ
வேகவாயுவேயசையெனவொருவரும் விதித்திடல்வேண்டாவே.

இ-ள்-போகமாருயிர் போகத்தைப்புசிக்கின்ற சீவர்களுக்கு- கண்டதைப்பார்த்ததை, உண்பதும்-அருந்தலும், புணர்வதும்- பொருந்தலும் இயல்பேகாண்-சுபாவமேயாம், ஆகமங்களும்-வேதங்களும் சுபாவத்தைவிதிக்குமோ சுபாவத்தைநியமிக்குமோ அத்தனைதெரியாதோ- அவ்வளவுதெரியாதா, காகமேகறுத்திடு-காக்கையே நீகறுத்திடுவாய்நெருப்பேசுடு-அக்கினியேநீசுடுவாய், வேம்பே-நிம்பமே, நீகசந்திடு- நீகசப்பாய் வேகவாயுவே-அதிகவேகமுள்ளகாற்றே அசையென - நீசலிப்பாயென்று ஒருவரும்-ஒருவரும், விதித்திடல் வேண்டாவே-நியமிக்கவேண்டுவதில்லை-எ-று.

விலக்குமெனப்பாடமன்று விதிக்குமென்பதேபாட மெனக்கொள்க.

ப-ம். அறிவின்மையானுயிர்கட்சியல்பான அருந்தல்பொருந்தலென்னும் வாசனையைவேதம் விலக்குமேயன்றி விதிக்குமோவென்பார் போகமாருயிர்கண்டதையுண்பதும் புணர்வதுமியல்பேகாணுகமங்களுஞ் சுபாவத்தைவிதிக்குமோ வெனக் கூறினர்.

இ-ம்-வேதம் போகபோக்கியமே பயனாகன்மத்தை விலக்கினதேயன்றி விதித்தென்றென்பதாம். ௭௪

அ-கை, கன்மகாண்டவாக்கியம் பூருவபட்சமென்பதற்குறுதிகூறல்.

கள்ளுண்ணுநீவிரும்பினன் மகங்கள் காமத்தின்மனதானற்
கொள்ளும்பெண்டொடுகலவிசெய்யெனிலிவன்குறையெலாந்தொ
டாநின்றேதள்ளும்வேதத்தின்சம்மதஞ் சகலமுந்தவிர்வதேகருத்தா
தும்,பின்னுமிவ்விதியென்னெனிற்பூருவநியமமாம்விதியன்றே.

ன்று சுழுத்தியிற்கண்டாயே யெனவும்சமாதியி லுதயமானவிவ்வறிவி னாலஞ்ஞானநசிக்குமென்பார் சொரூபஞானத்தின் மருவுமஞ்ஞானத் தைச்சுடும்விருத்தியின் ஞானமெனவுங்கூறினார்

இ-ம் ஆகமசங்கற்பமானவறிவிற்குண்டானவறியாமையவ்வறிவி லுதயமான வனுபூதியினாற்கெடுமென்பதாம் ௭௮

அ-கை காரணத்தாற்கெடாதவஞ்ஞானங் காரியத்தாலெங்ஙன் கெடுமென்றவினாவிற்குத்தரம்

துருத்திமாயையைச்சுழுத்தியிற் சுடாததுசொரூபஞானந்தானே
விருத்திஞானமாய்ச் சுட்டதெப்படியெனில் வெய்யிலா லுஷ்ணிகரும்
பரித்தசூரியசூரியகாந்தத்திற் பற்றியக்கினியாகி
எரித்தவாறும்போற்சமாதியில்விருத்தியாலெரிக்குமென்றறிவாயே

இ-ள் துருக்கிமாயையை-சடமாகிய வஞ்ஞானத்தைசுழுத்தியில் சுழுத்தியவத்தையில் சுடாதது கெடுக்காததானசொரூபஞானந் தானே சொரூபஞானமே விருத்திஞானமாய்- விருத்திஞானரூபமாய்சுட்டதெங்கும் சகத்திலெவ்விடத்தும் பரித்த-வியாபித்த வெய்யிலால்-உஷ்ண கிரணத்தினாலெரிக்காமல் சூரியகாந்தத்திற்பற்றியசூரியகாந்தக்கல்லிற் பற்றி அக்கினியாகி-வன்னிஸ்ரூபமாய்எரித்தவாறும்போல் சகலவஸ்துக்களையுந்தகினியகித்தன்மையைப்போல்சமாதியின்நிலையின்கணுதிக்கும் விருத்தியால் பூரணவிருத்தி ஞானத்தினால் எரிக்குமென்றறிவாய் திரிசியரூபமானவஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றுணர்வாய்-எ-று

இ-ம் காரணமானகிரணத்தாற்கெடாதபொருள் காரியமானவக்கினியாற்கெடுவதுபோலசொரூபஞானத்தாற்கெடாதவஞ்ஞான மதிலுதயமானபூரணவிருத்திஞானத்தாற்கெடுமென்பதாம் ௭௯

அ-கை விருத்திஞான மந்தக்காரணகாரியமாதலி னதைக்கரும மெனப்படாதோவெனனுவிதல்

அருளுண்மையனே திரிவிதகரணத்தாலாகியதொழிலெல்லாங்
கருமமல்லவோ விருத்திஞானமுமந்தக்கரணகாரியமன்கரு
வுரிபகன்மமஞ்ஞானத்தைக்கெடுக்குமென்றோதினலாகாதே
பெரியஞானமென்ற தற்கோருபேரிட்டபெருமையையுரையீரே

இ-ள் அருளுண்மையனே-அனுக்கிரகஞ்செய்யாநின்ற வெனதாசிரியரே திரிவிதகரணத்தால்-மனம்வாக்குகாயமென்கிற முக்கரணங்களாலாகியதொழிலெல்லாம் உண்டானகிரியைகளனைத்துங்கருமமல்லவே கன்ம மல்லவா விருத்தி ஞானமும்-பூரண விருத்தி ஞானமும் அந்தக் கரண காரிய மன்றோ அந்தக் கரணத்தின் காரியமன்

௫ உரியகன்மம்-உரியாமைக்குரியகன்மமானது அஞ்ஞானத்தைக்கெடுக்குமென்று-அஞ்ஞானத்தை நசிப்பிக்குமென்றோதினுலாகாதோ- உளாக்கினுலாகாதா பெரியஞானமென்று -கன்மஞானமென்று அதற்கு- அக்கன்மத்திற்கு ஒருபேரிட்ட-ஒருநாமந்தரித்த பெருமையையுணாயீர் மகிமையைச்சொல்வீர்-எ-று. அ௰

இ-ம் வெளிப்படை.

அ-கை அவ்வினாவிற்குத்தரம்

விருத்திஞானமந்தக்கரணத்தொடு விருத்தியாகிலுமைந்தா
வொருத்திமக்களே தங்களிற்பகைக்கின்ற துலகெங்குங்கண்டோர்
கருத்தராகியபுருடதந்திரங்களாங் கருமங்களவைபோல [மே
விருத்தஞானமே புருடதந்திரமன்று வஸ்துதந்திரமாமே.

இ-ள் விருத்திஞானம்-விருத்திஞானமானது அந்தக்கரணத்தோடு-மனத்தினுடையவிருத்தியாகிலும்-விருத்தியானாலும்மைந்தா-மாணுக்கனே ஒருத்திமக்களே தங்களில்-ஒருமாதாவின்புத்திரர்கள் தங்களுக்குள்ளே பகைக்கின்றது-கொலைசெய்கின்றது உலகெங்குங்கண்டோம்-சகமெங்கும்பார்த்தோம் கருமங்கள்-கன்மங்களானவை கருத்தராகிய--அகம்பாவமுள்ள புருடதந்திரங்களாம்-புருடதந்திரங்களேயாம் அவைபோல-அவற்றைப்போலவிருத்தஞானம்-அகமகிழ்ச்சியுள்ளஞானமானது புருடதந்திரமன்று புருடதந்திரமன்றாம் வஸ்துதந்திரமாம்-வஸ்துவினது தந்திரமாம்-எ-று.

இ-ம் விருத்திஞானமுங்கன்மமுமந்தக்கரணகாரியமாயினும்புருடதந்திரத்தான் மனதிலுதிக்குங்கன்மத்தைவஸ்துதந்திரத்தான்மனதிலுதிக்கும் பூரணவிருத்திஞானங் கெடுக்குமாதலினவ்விருத்தி ஞானங் கன்மமாகவியலாதாம். அக

அ-கை போனசன்மங்களின்னசெய்யுண்முதலிதுகாறுங்கன்மமானதுஞானமுதிப்பதற்கேதுவென்றேன வதைவிசார ஞானத்தானீக்கி மேலைவிசாரஞானத்தையுநீக்குவான்றொடங்கி யீதையோகஞானமும் விவேகஞானமுமென விருத்தினுகக்கூறுகின்றார்

வருத்தகன்மங்கள்செய்யவுந்தவிரவு மற்றொன்றாக்கவுங்கூடு
மிருத்தஞானமப்படியன்று தியானமும்விவேகஞானமும்வேறு
தொகத்திலொன்றையொன்றாவிவன்பாவிக்குந்தியானக்கற்பிதமே
முகல்தமாய்க்கண்டஞானமேவர்க்குஞ்சுவ யோகமாய்மயங்கிற்றே

இ-ள் வகுத்தகன்மங்கள் புருடர்களால் வகுப்பட்ட கன்மங்களா னவைசெய்யவும-செய்தற்கும், தவிரவும்-ஒழிதற்கும் மற்றொன்றாகவு ம்-மற்றொருவிதமாகச்செய்தற்குங்கூடும் ஆம்மிகுத்தஞானப்பூரணஞா னமானது அப்படியன்று-அத்தன்மையுடையதன்றாதியானமுந்தியா னமும்விவேகஞானமும்-விவேகஞானமும்வேறு-வேறாகும்செகத்தில்உ லகத்தின்கண் ஒன்றையொன்றாகவொருவஸ்துவைமற்றொருவஸ்துவாகவி வன்பாவிக்கும்இப்புருடன்பாவிக்கின்றகற்பிதயோகம்-கற்பனாயோகமா னதுதியானம்-தியானமாம்முகஸ்தமாய்க்கண்டஞானமே -பிரத்தியட்ச மாகத்தரிசித்தஞானமேவாஸ்தவம் -உண்மையான விவேகஞானமாம் மோகமாமயங்காது-மோகமாகாது-எ-று.

இம் யோகஞானங்கற்பிதம்மானபரோட்சமும் விவேகஞானமுண் மையான வபரோட்சமுமாமென்பதாம் ௮௨.

அ-கை இ-து

கண்டறிந்தஞானங்கேட்டதுதனைக் கருதுபாவனையோகங்
கண்டபேர்சொலக் கேட்டதுமறந்துபோய்கண்டதுமறவாதே
கண்டவஸ்துமெய்தியானவஸ்துக்கள்பொய்கறுவியஞ்ஞானத்தைக்
கண்டவக்கணங்கொல்வதுஞானமேகருமமன்றறிவாயே.

இ-ள் கண்டறிந்ததுஞானம் - அநுபவமாகப் பார்த்துணர்ந்தது ஞானமாம் கேட்டதுதனை-கேட்டதை கருதுபாவனை - தியானிக்கின்ற பாவனையானது யோகம்-யோகமாம் கண்டபேர்சொல் - பார்த்தவர்கள் சொல்ல கேட்டதுகேட்டபொருள் மறந்துபோம்-மறதியாம் கண்டது மறவாது-பார்த்ததுமறக்காது கண்டவஸ்து-பார்த்தபொருளானதுமெ ய்உண்மையாம்தியானவஸ்துக்கள் - பாவிக்கின்ற பொருள்களானவை பொய்-மித்தையாம் கறுவி-கோபித்து அஞ்ஞானத்தை-அறியாமையை க்கண்டவக்கணம்-பார்த்துவந்தக்ஷணத்தில் கொல்லுவதுஞானம்-கெடு ப்பதுஞானமேயன்றி கருமமன்று-கன்மமன்று அறிவாய்-இதனையு ணர்வாய் எ-று.

இ-ம் தியானயோகங்கேட்டவண்ணம் பாவித்தலும்விவேகஞான ம்பாவித்தவண்ணம் கண்டாலுமாதலால்விவேகமே யுண்மையெனபதாம்.

அ-கை தியானயோகஞ்சற்பிரமேனின்னகத்திலுதிக்குமுத்திரும் கற்பிதமன்றோவென்னும் வினாவிற்குத்தரம்

சருவமுத்தியைத்தருகின்றதியானமூஞ் சத்தியமன்றென்றால்
சருவமுத்தியுஞ்சத்தியமன்றென்று சங்கியாதேநீதே
ளுருவங்கேட்டவனறியானிக்கும்பொழுதிலவ்வுருவம்வாஸ்தவமன்றே
யுருவமாகுமப்பொழுதுகண்ணாற்கண்ட வுருவம்வாஸ்தவமாமே

இ-ள் சருவமுத்தியை-சம்பிரமமயமென்னும் வீட்டை;தருகின்ற தியானமும்-கொடுக்கின்றதியானத்தையும் சத்தியமன்றென்றால் உண்மையன்றென்றுசொன்னால்சருவமுத்தியும்அத்தியானத்தினால்வரும்பூரணானுபவமும்சத்தியமன்றென்று உண்மையன்றென்று சங்கியாதே-சங்கைசெய்யாதே நீகேள்-நீகேட்பாய்உருவம்பிரமஸ்வரூபத்தைகேட்டவன்-கேள்வியற்றவன் தியானிக்கும்பொழுதில்-சிந்திக்கும்பொழுதில் அவ்வுருவம்-அத்தியானரூபமாகியஸ்வரூபம் வாஸ்தவமன்று உண்மையன்றுஉருவமாகுமப்பொழுதுதானந்த ஸ்வரூபமாகும்போது கண்ணாற்கண்டவுருவம்-ஞானதிருஷ்டியினாற் பார்த்தஸ்வரூபமானது வாஸ்தவமாம்-உண்மையாம் எ-று.

இ-ம் பாவனைகற்பிதமும்அதினின்றதைக் கனாத் தெழாநின்றபடி விப்பவ னுண்மையுமாதலா லப்பாவனையித்தையேயதனுனிதயமாகுமுத்திசத்தியமே யாமென்பகாம் அசு

அ-கை பொய்க்கு மெய்யையுதிப்பிக்குஞ் சத்தியேதென்ற வினவிற்குத்தரம்.

சடமதாகியதியானமெய்யாகியசர்வமுத்தியைநல்குந்
திடமதானதெப்படியெனிலவரவர் தியானமேபிறப்பாகு
முடலமாசையாற்றியானிக்கிற்றியானித்தவடல்களாகுவர்மைந்தா
தொடர்பவங்கெடச்சொரூபமேதியானிக்கிற்சொரூபமாகுவர்மெய்யே

இ-ள்-சடமதாகியதியானம்-மித்தையாகியதியானமானது மெய்யாகிய-சத்தியமாகியசர்வமுத்தியை-பரிபூரணமான கைவல்யத்தை நல்கும்-கொடுக்கின்ற திடமதானதெப்படியெனில்-வலிமையையுடைத்தாதெங்ஙனமென்றுகேட்கில் அவரவர்-அவரவர்களுடையதியானமேபிறப்பாகும்-தியானமேசனனமாய்உடலமாசையாற்றியானிக்க -தேகவிச்சையினாற்சிந்திக்கதியானித்தவுடலமாகுவர்- சிந்தித்தவடிவமாவார்கள் மைந்தர்-மாணாக்கர் தொடர்பவங்கெட-தொன்றுதொட்டுவருகின்ற டவங்கெடும்பொருட்டுசொரூபமேதியானிக்க-ஆத்மஸ்வரூபத்தைச்சிந்திக்கசொரூபமாகுவர் அச்சொரூபமேயாவார்கள்மெய்யேஉண்மை:௩௰௭.

ப-ம்-தியானஞ் சிற்சுடவுருவமாகுமென்பர் தியானித்தவுடல்களாகுவரெனவும் சொரூபமாகுவரெனவுங்கூறினர்

இ-ம்-தியானத்திற்குக்காரணவுருவஞ்சத்துங் காரியவுருவஞ்சத்துமாதலினதற்கச் சத்தையறிவிக்கும் வல்லமையுண்டா யிற்றெனபதாம

அ-கை-தியானத்திற்குச் சத்தியிருக்க விசாரஞானமியாதுக்கென்றவினாவிற்குத்தரம்

பிரமரூபத்தைத்தியானித்தபேர்களும்பிரமமாகுவரென்ற
னரசரீரமாங்குரவனேவிசாரமெனஞானமேனென்றதே
பரமபாவனைபரோட்சமாம் பின்பங்கப்பரோட்சமேயபரோட்சந்
திரவிசாரமாஞானமேமுத்தியாந்தீர்வையீதறிவாயே.

இ-ள்-பிரமரூபத்தை-பிரமஸ்வரூபத்தை தியானித்த பேர்களும் சிந்தித்தவர்களும்பிரமமாகுவாரென்றால்-அப்பிரமமே யாவர்களென்றுசொன்னால்நரசரீரமாங்குரவனே-மானிடவடிவங்கொண்ட வெனதாசிரியரேவிசாரமேன்-விசாரமியாதினுக்குஞானமேன் -ஞானமியாதினுக்குஎன்றதேஎன்றுகேளாதேபரமபாவனை-பிரமத்தியானமானதுபரோட்சமாம் பரோட்சஞானமாம்பின்பு பின் அந்தப்பரோட்சமே-அப்பரோட்சஞானமேஅபரோட்சம்- அபரோட்சஞானமாதலால்திரவிசாரமாம் திடமானவிசாரத்தினாலிருப்பதாம்ஞானமே -அந்தவபரோட்ச ஞானமேமுத்தியாம்-மோட்சமாமது- இதுவேதீர்வையென்றறிவாய் - தீர்ப்பென்றுணருவாய்-எ-று

இ-ம்-தியானத்தின்காரியம்போகமுங்காரணம் விசாரஞானமுமதலாலவ்விசாரஞானமே வீட்டைத்தற்குவேண்டுமென்பதாம் அரூ

அ-கை முன்புத்தியானயோகத்தைநீக்கி மேல்விசாரஞானத்தை நீக்குவான் விருத்திஞானமிருக்கிற் சுபாநுபவமெங்ஙனங் கூடுமென்ற வினாவிற்குத்தரம்

வீடதாம்பரிபூரணசொரூபத்தில் விருத்திஞானமுங்கூடிச்
சேடமாகினல்கண்டமாமனுபவசித்தியெப்படியென்றாற்
சாடிநீர்மண்ணைப்பிறித்ததேற்றும் பொடிதானுமண்ணொடுமாயு
மூடிஞானமுதறிவிலாமையைக்கெடுத்தொக்கவேகெடுந்தானே

இ-ள்-வீடதாம்-முத்தியாகிய பரிபூரணசொருபத்தில்பூரணமாகியபிரமஸ்வரூபத்தில்விருத்திஞானமுங்கூடி -விருத்திஞானமுஞ்சேர்ந்து சேடமாகினல் - மிஞ்சு பாறுல் அகண்டமாமனுபவசித்தி - அகண்

டாசாரவனுபவஞ் சிந்திப்பது எப்படியென்றால் எங்ஙனமென்னின்சா டீரீயவண்ணே-தாழியிலிருக்குஞ் சலத்திலுள்ளசேற்றைப் பிறித்தேற் றாம்பொடி-தானும் - வேறுசெய்த தேற்றாங்கொட்டைத்தூளும்மண் ணொடுமாயும்-அச்சேற்றோடுங்கெடும் ஊடி-பசைத்து ஞானமும்-விரு த்திஞானமும் அறிவிலாமையைக்கெடுத்து அஞ்ஞானத்தைக் கெடுத் து-ஒக்கவேகெடும்-தானுங்கூடவேநசிக்கும் எ-று.

இ-ம் விசாரஞான மறிவுதயமாம்பொருட்டறிவின்மையைக்கெடு வனோடுங் கெடுவதேயன்றிச் சேடிக்கமாட்டாதென்பதாம்.

ஆ-கை கைதவங்களென்ற செய்யுண்முதலிதுகாறுமுகபச்சிருட் டியாலுண்டான சஞ்சிதம் பரஞானத்தாற் கெடுமெனவுமதனாலுண் டாணமனுசாரியமான கன்மத்தையதன்காரணமான விசாரஞானங் கெ டுத்தஃதுமிதனோடுங்கெடுமெனவுங்கூறியிச்செய்யுளின் அவ்வனுபவமு ள்ளசீவன் முத்தரிலக்கணங்கூறல்.

இந்நிச்சயமுத்தருளனுபவமிருப்பதெப்படியென்றாற்
சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ்சிசுவும்போற்சுகமாவார்
பந்தமுத்திகண்மறந்துபோமுண்டென்றுபலர்சொலினகையாவ
ரந்தரத்தையுண்டுமிழ்ந்ததோர்கொசுகெனுமவர்களைநகையாரோ

இ-ள் இந்நிச்சயம்-இந்நிச்சயமானது முத்தருள்-சீவன் முத்தரு க்குள்ளே அனுபவம்-அனுபவமாக இருப்பதெப்படியென்றால்-இருக்கி ன்றசெவ்வண்ணமென்றால் சிந்தையற்ற-பகைவருளரெனனுஞ் சிந்தை யின்றிப் பூமண்டலவிராசனும் பூவுலகமுழுதுமாளுகின்ற சக்கரவர்த் தியையும் சிசுவும்போல-பாலகரையும்போல சுகமாவார்-சுகஸ்வரூபரா யிருப்பார்கள் பந்தம்-பந்தமானது மறிந்துபோம் கெட்டுப்போம் முத் தி-வீடானது உண்டென்று-இப்போதுளதாமென்று பலச்சொல்லில்- அநேகருரைக்கில் நகையாவார்-சிரிப்பார் ஓர்கொசுகு-ஒருமசகமானது அந்தரத்தை-ஆகாயத்தை உண்டுமிழ்ந்ததெனும்-விழுங்கிக் கக்கிற்றெ ன்றும்அவர்களைநகையாரோ-அவர்களையார்தானகையார்கள்-எ-று.

ப-ம் சுவானுபூதியெப்போது மொருதன்மையாக விளங்குகின்றத னக்கு அறியாமையாற் பந்தமு மதனிவிர்த்தியான வீடு மிப்போதுண் டாயிற்றென்பாற் பந்தமுத்திகண்மறந்துபோ முண்டென்று பலர் சொலினகையாவரெனக்கூறினர்.

இ-ம் அறிவறியாமையின்றி முன்னுள்ளசத்தமாத்திரமாகவிளங்கிச்சுகித்திருப்பவனே சிவன் முத்தனென்பதாம். ௮௮

அ-கை மத்தியில்வாந்தரமாகத் தோன்றுங்கற்பனையின் மயங்காமைக்கோர்கதைகூறல்.

மலடிமைந்தனுந்தானுவிற்புருடனும்வான்மலர்முடிசூடி
யிலகுசந்தர்ப்பநகரிலேசுத்தியிரசதம்விலைபேசிக்
கலகமாயினாரிடையினிற்கயிற்றராக்கடித்திருவரும்மாண்டா
ரலகையாயினாரெனும்விவகாரத்தையறிந்தவன்மயங்கானே.

இ-ள் மலடிமைந்தனும் வாந்திய புத்திரனும் தானுவிற்புருடனும்-குந்தியின்மகனும் வான்மலர் ஆகாயதாமரைப்பூவை முடிசூடி-சிரசிற்தரித்து இலகுகந்தர்ப்பநகரில் விளங்காநின்ற கந்தர்வநகரத்தில்சுத்திசையிரசதம்-கிளிஞ்சில்வெள்ளியை விலைபேசி-கிரயம்பேசி கலகமாயினார்-பிணக்கடைந்தார்கள் இடையினில்-நடுவினில் கயிற்றராக்கடித்துகச்சுசர்ப்பந்தீண்டி இருவரும்-முன்சொன்னவிரண்டுபேர்களும் மாண்டார்-இறந்து அலகையாயினார்-பேயானார்கள் எனும்விவகாரத்தை-என்கிறகதையினது நியாயத்தை அறிந்தவன் மயங்கான்-தெரிந்தவன் மயங்கமாட்டான்-எ-று.

இ-ம் கற்பனையின் மூலந்தெரிந்தவனதனிடத்தின் மயங்கானென்பதாம்.

அ-கை இதுகாறுங் காரியோபாதியான வவித்தையினாலுண்டானமயக்கத்தைநீக்கி மேற்காரணோபாதியான மாயையினாலுண்டாகு மயக்கத்தைக் களைதற்பொருட்டக்குமித்தையாதலினதனால்வரும் பலப்பிராப்திகளு மித்தையென்றகற்றி நீ சுவானுபூதியாக விளங்குவாயெனக்கூறல்.

மாயையென்பதுபொய்யெனிலது பெற்றவகையெலாம்பொய்யாமே
தாயையன்றிமக்களுக்கொருபிறவியுஞ்சாதியும்வேறுண்டோ
சேயசொர்க்கமுநரகமுநன்மையுந்தீமையும்பாருமற்
றாயசத்துச்சித்தானந்த பூரணசொரூபமாயிருப்பாயே

இ-ள். மாயையென்பது- மாயையென்று சொல்லப்படுவது பொய்யெனில் மித்தையென்றால் அதுபெற்றவகையெலாம் அதனாலுண்டானபொருளனைத்தும் பொய்யாம்- மித்தையேயாம்-தாயையன்றி-மாதாவைத்தவிர-மக்களுக்கு-புத்திரருக்கு ஒருபிறவியும் ஓர்பிறப்பும் சாதியு

ம்குலமும்-வேறுண்டோ-வேறுளதோ ஆதலால்-சேய சொர்க்கமும் செவ்விதானசுவர்க்கமும் நரகமும் நரகமும நன்மையும் நன்மையும் தீமையும்-தீங்கையும்-பாராமல்-பார்க்காமல்-தூய-பரிசுத்தமான- சத்துச்சித்தானந்த-சச்சிதானந்தமாகிய பூரணசொரூபம் யிருப்பாய் பரி பூரணஸ்வரூபமாகவிருப்பாய்- எ-று.

இ-ம். மாயைமித்தையாதலினதன் காரியங்களனைத்து மித்தையேயாமென்பதாம்.

அ-கை மாயாகாரியமித்தையான் பிரமன்முதலியவனைத்துமித்தையாமே அங்ஙனங்கூறிற் குற்றம்வாராவோ வெனவினுதல்

பங்கையாசனன்முதற்பல தேவரும்பாருளபெரியோருங்
கங்கையாதியாந்தீர்த்தமுந் தேசமுங்காலமுமறைநாலு
மங்கமாறுமந்திரங்களுந்தவங்களும் சத்தியமெனச்சொன்ன
லெங்களையகனேயதனுற்குற்றங்களில்லையோமொழியீரே.

இ-ள், பங்கயாசனன்முதல்-பிரமதேவனுதியான் பலதேவரும்சமஸ்ததேவர்களும் பாருளபெரியோரும் பூமியின்காணுள்ளமகான்களும்கங்கையாதியாம்-பாகீரதிமுதலிய தீர்த்தமும்தீர்த்தங்களும்தேசமும்நாடுகளும் காலமும்-திரிகாலங்களும் மறைநாலும்-வேதங்களுன்கும் அங்கமாறும் சாத்திரங்களாறும்-மந்திறங்களும் பிரணவாதி மகாமந்திரங்களும்-தவங்களும்-தபசுகளும் அசத்தியமெனச்சொன்னல்- மித்தையென்றுரைக்கில் எங்களையகனே எம்முடையவாண்டவனே அதனல்அங்ஙனம்சொல்லுவதனல் குற்றங்களில்லையே பிழைகளில்லையோமொழியீர்-சொல்வீர்-எ-று.

இ-ம் வெளிப்படை. ௬௧

அ-கை? அவ்வினவிற்குத்தரம்.

சொற்பனந்தனிற்கண்டதைப் பொய்யென்றுசொல்வதுபிழையாமு, மற்பமாமடையிற் றோன்றியசகங்களைச்சத்தெனல்பிழையாமே,சொற்பனந்தனிற்கண்டதைப் பொய்யென்றுசொல்லலா மெனின் மைந்தாவற்பமாமையிற்றோன்றிய சகமெலாசத்தியமெனலாமே.

இ-ள். சொற்பனந்தனில் கனவில்கண்டதை-பார்த்ததை - பொய்யென்று மித்தையென்று சொல்வதுபிழையானல் சொல்லுவது குற்றமாயின அற்பமாமையில்-சிறுமையானமாயையினிடத்தில் தோன்றிய

உண்டான-சகமெலாம்-உலகங்களனைத்தும் அசத்தெனில்- மித்தையெ ன்றால்-பிழைபாம்-குற்றமாம்-சொற்பனந்தனில்-கனவில் -கண்டதைபா ர்த்ததை பொய்யென்றுமித்தையென்று சொல்லலாமெனில் உரைக்க லாமெனின்-மைந்தர்-புத்திரர்-அற்பமாயையில் சிறுமையானமாகமாயயி னிடத்தில் தோன்றியசகங்களை உண்டானவுலகமனைத்தையும் அசத் தியமெனலாம்-மித்தையென்றுரைக்கலாம்-எ-று.

இ-ம். சொற்பனம்போல மாயாகாரியமான சகசீவபரங்களென்று மித்தையாதலினவைகளினியல்படக் கூறுதலாற் குற்றமில்லையெனப தாம். ௬௯௨

அ-கை. சத்தசத்தினுண்மை சித்தெனக்கூறல்.

பொய்யைமெய்யென்றமூடர் புண்ணியரென்று புராணங்கூப்பிடு மானுன்,மெய்யைமெய்யென்றஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திர முண்டோ,பொய்யதேதெனினும்ரூபங்களாம் பூதமாகியமாயை,மெய் யதேதெனிற் சச்சிதானந்தமாய் வியாபிக்குமான்மாவே

இ-ள். பொய்யைமெய்யென்ற மித்தையைச் சத்தியமென்றமூடர் அறிவிலாரை புண்ணியரென்று-தருமவான்களென்று புராணங்கூப்பி டுமானல் அஷ்டாதசபுராணங்களு முறையிடுமாயின் மெய்யை மெய் யென்ற உண்மையையுண்மையென்ற ஞானிக்கு-ஞானவான்களுக்கு-கு ற்றங்கள் விதித்த குற்றங்களைநியமித்த சாத்திரமுண்டோ நூல்களுமு ளவோ பொய்யதேதெனில் மித்தையாவதேதெனில் நாமரூபங்களாம் நாமரூபமாக.வியாபிக்கும்-வியாபித்திருக்கும்,ஆன்மாவே - ஆத்மஸ்வரூ பமேயாம்—எ-று.

இ-ம். ஆத்மானாத்மாவினிலக்கணங்கூறினதாம்.

அ-கை, மாயையின்றன்மை யிச்சதெனத்தோன்ற வறுவகையாகவி தனுதல்,

மாயையென்பதேதுண்டயாரேப்படி வந்தது வருவரெனல்,மாயை யென்பதே பிரமத்தின்வேறெனின் வஸ்துவுமிரண்டாமே,மாயையென் பதும்பிரமமெ மொன்றெனின்வஸ்துவும் பொய்யாமே; மாயை யென்ப மேகங்களுக்கொரு சண்டமாருக்குருமூர்த்தி.

இ-ள். மாயையென்ற மேகங்களுக்கு - மாயையென்றமுகில்களுக்கு, ஒருசண்டமாருதகுருமூர்த்தி ஒப்பற்ற பெருங்காற்றாகிய தேசிகமூர்த்தியே மாயையென்பதேது - மாயையென்றுசொல்லுவதியாது, உடையவரார் - அதனையுடையவரியாவர், எப்படி வந்தது - எவ்விதமுதயமாயிற்று, வருவானேன் - உண்டானகாரணமென்ன, மாயையென்பது - மாயையென்று சொல்லுவது, பிரமத்தின்வேறெனில் - பிரமத்துக்குவேறானதென்றுரைக்கின், வஸ்துவிரண்டாமே - வஸ்துவுந்துவிதமாமே, மாயையென்பதுவும் - மாயையென்றுரைக்கப்படுவதும், பிரமமும் - பிரமமென்றுரைக்கப்படுவதும், ஒன்றெனில் - ஏகமென்றால், வஸ்துவும் பொய்யாமே மாயாவஸ்துவைப்போலப் பிரமவஸ்துவு மசத்தியமாமே இதனையருள்வீர் - எ - று,

இ-ம் மாயையினுருவமும் அத்துடையவர்களையும் அதனுற்பத்தியும் அதுதித்தற்குக்காரணமும் அதுபிரமத்திற்குப் பின்னமாயின் வஸ்து துவிதமாமேயெனவும அபின்னமாயின் வஸ்துமித்தையாமேயெனவும் அதனுண்மையைத்தெரிய வினவினதாம். கூச

அ-கை, அவைகளின் முதனான்கு வினாவிற்குத்தாங்கூறல்.

அதனையின்னதென்றுரைத்திடப்படாமையாலவாச்சியவடிவாகு
மிதுதனக்குளதுபலியானுலகுமெய்யெனுமருடையோர்கள்
கதையிலாதபொய்வந்ததிப்படியென்றுகண்டபேரிலைமைந்தா
விதனமாயையென்வந்ததென்றாற்புத்திவிசாரமற்றதனாலே

இ-ள் அதனை - அம்மாயையை - இன்னதென்று - இத்தன்மையுள்ளதென்று, உரைத்திடப்படாமையால் - சொல்லக்கூடாமையால் அவாச்சியவடிவாகும் - அவாச்சியவுருவமாம் இதுதனக்குளது - இத்தனக்குள்ளது உபலியான் - இத்தேகந்தான் உலகுமெய் இச்சகஞ்சத்தியம் எனுமருடையோர்கள் - என்கின்றவர்களே யதனையுடையவர்கள் கதையிலாதபொய் காரணமில்லாத மித்தையானமாயைவந்ததிப்படியென்று உதித்ததிவ்விதமென்றுகண்டபேரிலை - பார்த்தவர்களில்லை, மைந்தா - மகனே, விதனமாயை - துன்பமயமானமாயையானது என்வந்ததென்றால் என்றோன்றிற்றெனில் - புத்திவிசாரமற்றதனால் ஆத்மஞானவிசாரஞ் செய்யாததினால்வந்தது - எ - று.

ப-ம். உருவமருவமுருவாருவமென மாயையைப்பகுத்துச்சொல்லக்கூடாததென்பார்; அவாச்சியவடிவெனவும் தேகாதி பிரபஞ்சத்தை யுண்மையென்றுகொள்பவரே அம்மாயையுடையவரென்பார் உடலினாலதுமெய்யெனு மருடையோர்களெனவும் மித்தையாகத் தோற்றினமாத்திரமேயன்றி யுற்பத்தியில்லையென்பார் பொய்வந்ததிப்படியென்றுகண்டபேரிலையெனவும் அதனைத்தோன்றுதல்யாதினாலென விசாரிக்கும் விசாரமின்மையே அதனுற்பத்திக்குக் காரணமென்பார் மாயையென்வந்ததென்றாற் புத்தி விசாரமற்றதனாலேயெனவுங் கூறினார்.

புத்திமைந்தனே சத்தியவாகுகியபூரணவான்மாவின்
வஸ்துநிர்ணயஞ்சொன்னதிருஷ்டாந்தத்தின்வழிகண்டுதெளிவாயே.

இ-ள். சத்தி - சத்தியானது, சத்தனைத்தவிர வேறன்றுகாண்-வேறன்றும், சத்தனும்-சத்தனுகிய, மாயாவி-வித்தைசெய்வான், வித்தைகாட்டிய-வித்தையைக்காண்பிக்க, இந்திரசாலம்போய்-இந்திரசாலமீங்கி வித்துவானும்போல-வித்துவானுமாறுபோல, புத்திமைந்தனே அறிவுள்ளமகனே, சத்திமானுகிய சத்தனுகிய பூரணவான்மாவின் பரிபூரணவாத்மாவின் வஸ்துநிர்ணயம் ஸ்வரூபநிச்சயத்தைத சொன்னதிர்ஷ்டாந்தத்திற் சொல்லிய திருஷ்டாந்தத்தினுடைய வழிகண்டு மார்க்கத்தைப்பார்த்து, தெளிவாய்-தெளிந்துகொள்வாய்-எ-று.

இ ம். சத்தனைத்தவிரச் சத்தியென்றோர்வஸ்து வேறின்மையானும் அச்சத்தியில்லாவிடத்துஞ் சத்தனிருக்கையானும் அச்சத்தனுஞ் சத்தியுமெங்ஙனமொன்றும், அங்ஙனமொன்றுகாமையானச்சத்தியைப்போலவிச்சத்தன் சத்தாகானென்பதாம். ௯௮

அ-கை. பிரதிவிம்பமான மாயாசத்தியைநீக்கி விம்பமான சிற்சத்தியை வெளிபடுத்துவான் அசத்தமான மாயாசத்தியுளதென்ப தெங்ஙனமென்ற வினுவிற்குத்தரம்.

இல்லையாகியசத்தியையுண்டென்பதெப்படியெனக்கேட்கிற்
புல்லையாதியாமசேதனப்பொருளெல்லாம்பூத்துக்காய்ப்பனபாராய்
நல்லையாமகனேயதிலதிற்சிற்சத்திநடந்திடாதிருந்தக்காற்
றொல்லையாய்வருஞ்சராசரவுயிர்க்கெலாஞ்சுபாவங்கள்வேறுமே.

இ ள் இல்லையாகியசத்தியை மித்தையாகியமாயாசத்தியையுண்டென்பது-உளதென்பது எப்படியெனக்கேட்கில் எங்ஙனமென்று கேட்பாயாகில், புல்லையாதியாம் புன்முதலியனவாகிய அசேதனப்பொருளெல்லாம் சடவஸ்துக்களனைத்தும் பூத்துக்காய்ப்பன புஷ்பித்துக்காய்ப்பனவற்றை, பாராய்-பார்த்திடாய், நல்லையாமகனே - நன்மையான புத்திரனே, அதிலதிற்சிற்சத்தி அவ்வவற்றிற் சிற்சத்தியானது நடந்திடாதிருந்தக்கால்-செல்லாதிருக்குமாயின், தொல்லையாய்வரும்-தொன்றுதொட்டு வருகின்ற சராசரவுயிர்க்கெல்லாம் தாபரசங்கமாகியஉயிர்களனைத்திற்கும் சுபாவங்கள்வேறும்-குணங்கள்மாறும் எ-று. ௯௯

அ-கை-இ-து.

கருப்பைமுட்டையுட்பறவைகள்பலநிறங்கலந்தசித்திரம்பாரா
யருப்பமாஞ்சத்தியமில்லைவிடிலாசிலாநகர்போலாம்
நெருப்புநீர்காரக்சப்புமேமதுமாநீசனுமறையோதும்
பொருப்புமேகமங்கடலெலாமண்களாம்புவனமிப்படிபோமே.

இ-ள். கருப்பை-கருப்பையிலிருக்கும் முட்டையுள் அண்டத்தினுள்ளிருக்குங்கருவில், பறவைகள் பட்சிகள், பலநிறங்கலந்த அநேகவர்ன்னமான, சித்திரம்பாராய்-சித்திரத்தைப்பார், அருப்பமாஞ்சத்தி-

அருமையானசிற்சத்தியின்நியமமில்லாவிடில் -நியமமில்லாமற்போனால் அரசிலாநகர்போலாம்-அரசனில்லாத பட்டணத்தைப்போலாகும், நெருப்பு-அக்கினியானது, நீர்களாம்-சலமாகும், கசப்பும்-கைப்பும், மதுரமாம்-தித்திப்பாகும், நீசனும்-சண்டாளனும், மறையோதும்-வேதாகதியானஞ்செய்வான், பொருப்பு-மலைகளும், மேகமாம் - முகில்களாம், கடலெலாம்-சமுத்திரங்களனைத்தும்,மண்களாம்-புழுதிகளாம், புவனம் சகத்தானது, இப்படிபோம்,இவ்வண்ணமாகும் எ-று.

இ-ள். சூரியகிரணமே பகிர்முகத்தின் மித்தையான சலமாகவும் அந்தர்முகத்தினுண்மையான கானலாகவுந் தோற்றுவனபோல, பிரமப்பிரகாசமே பகிர்முகத்தின் மித்தையான மாயாசத்தியாகவும் அந்தர்முகத்தினுண்மையானசிற்சத்தியாகவுந் தோன்றிய விச்சத்தியையனைத்திற்கு முள்ளீடாயிருந்து நடாத்துதலினிக்கின்றன்மையையநன்மேல்வைத்துக் கூறினதேயன்றி யதற்கின்றென்பதாம். ௱

அ-கை. இச்சகத்தினீங்கலுஞ் சகதனைத்துவிதமின்றித் தரிசித்தலும் முத்தியையடைதலுமெங்ஙனமென்று மூன்றுவகையாக வினுதல்.

ஆர்க்குங்காணவுமறியவும் படாதென்றுமவாச்சியவடிவென்றுஞ்
சேர்க்குநாமரூபப் பயிர்வித்தென்றுஞ் செப்பிய சிற்சத்திபோக்குமா
றெங்ஙன் பிறித்திடப்படாதெனிற் பிரமபாவனையொன்றாய்ப் பார்க்கு
மாறெங்ஙன முத்தியாகுவ தெங்ஙன் பரமசற்குருமூர்த்தியே.

இ-ள். ஆர்க்கும்-யாவருக்கும், காணவும்-பார்க்கவும், அறியவும்-உணரவும், படாதென்றும்-கூடாதெனவும், அவாச்சிய வடிவென்றும்-நிர்வசனரூபமெனவும், சேர்க்கும்-கற்பனையாகச்சேர்க்கின்ற, நாமரூபப்பயிர்-நாமரூபப்பிரபஞ்சமாகிய பயிருக்கு, வித்தென்றும்-விதையேயெனவும், செப்பியசிற்சத்தியை-சொல்லியசிற்சத்தியை, போக்குமாறெங்ஙன்-நீக்கும்வாறெப்படி, பிறித்திடப்படாதெனில்-வேறுபடுத்தக்கூடாதென்றால்,பரமசற்குருமூர்த்தி-மேலானதேசிகரே,பிரமபாவனை-ஸ்வரூபசமாதியில், ஒன்றா அத்துவிதமாக பார்க்குமாறெங்ஙன்- தரிசிக்குமாறெப்படி, முத்தியாகுவதெங்ஙன்-வீடுண்டாவதெப்படி-எ-று.

இம், வெளிப்படை. ௱௧

அ-கை. முதலிரண்டுவினாவிற்குத்தரங்கூறல்.

வாயுஸ்தம்பனஞ்சலஸ்தம்பனமணி மந்திரமருந்தாலே
தேயுஸ்தம்பனஞ்செய்திடிலதிலதிற்சிறந்தசத்திகளெங்கே
நீயச்சச்சிதானந்தமாய்வேறொன்று நினைத்திடா திருப்பாயேன்
மாயச்சத்திபோமீதன்றி மந்திரமறைகளிற்காணேமே.

இ-ள். மணிமந்திரமிருந்தால்-மணிமந்திரௌஷதங்களினால், வாயுஸ்தம்பனம்-வாயுஸ்தம்பனமும் சலஸ்தம்பனம்-சலஸ்தம்பனமும் தேயுஸ்தம்பனம்-அக்கினிஸ்தம்பனமும், செய்திடில்-செய்தால், அதிலதில் அவ்வவற்றில், சிறந்தசத்திகளெங்கே-சிறந்திருக்குஞ் நிச்சலனயுஷ்ணமாகிய மூன்றுசத்திகளு மெங்கேயிருக்கின்றன, நியதிச்சச்சிதானந்த

மாய்-நீயந்தச்சிதானந்தவடிவமாகி, வேறொன்றும் மற்றொன்றையும், நினைந்திடாதிருப்பாயேல்- நினையாதிருப்பாயாகில் மாசியச்சத்திபோம் மாயாசத்திநீங்கும், ஈதன்றி-இதைத்தவிர மந்திரம்- உபாயமானது-மறைகளிற்காணோம் வேதங்களிற்பார்த்திலேம்-எ-று.

இ-ம் குருவாக்கியப்படி யுண்மையான சச்சிதானந்தஸ்வரூபமே தானாகச் சிந்திக்கின் தன்மயமாதலுமில்லாததான் மாயாசத்தியில்லா ததாகவே நீக்குதலுமாமென்பதாம் ௱௨

அ-கை மூன்றாம்வினாவிற்குத்தரங்கூறல்

மேவுமண்ணிலவ்வியத்தமேவியத்தமாம்விவகரித்திடவேண்டி
ல்நாவினுன்மண்ணைக்குடமென்பரக்குடநசிப்பதுநாவாலே
பரவுநாமரூபங்களைமறந்துமண்பார்ப்பதேபரமார்த்தந்
சீவபேதகற்பிதங்களைமறந்துநீசின்மயமாவாயே

இ-ள். மேவும்-பொருந்தாநின்ற மண்ணில்-மிருத்துவில் அவ்வியத்தம்-மறைபட்டிருந்தச் சத்திவியத்தமாம் வெளிப்பட்டும்விவகரித்திட வேண்டில்-விவகரிக்குநிமித்தம் நாவினுல் நாக்கினால் மண்ணை அம்மிருத்துவை குடமென்பர் கடமென்றுசொல்லுவார்கள் அக்குடம் அக்கடநாமம், நசிப்பதும்-மண்ணாகவிறப்பதும் நாவாலே-நாக்கினாலே யாம்-யாவும் கற்பனையாகவழங்குகின்ற நாமரூபங்களைமறந்து நாமரூபவடிவங்களை நினையாது, மண்பார்ப்பதே மிருத்துவாகப்பார்ப்பதே, பரமார்த்தம் உண்மையாம், அங்ஙனம் சீவபேத கற்பிதங்களைமறந்து சீவேஸ்வர சகத்தென்னும் வேறுபாடுகளைநீக்கி நீசின்மயமாவாய் நீசின்மாத்திரமாவாய்-எ-று.

இ-ம் கடத்தைமண்ணென்றறியின் கடமென்பது நசித்து அதுமண்ணாக விளங்குவதுபோல சிற்சத்தியைச் சித்தெனக்காணின் அச்சத்தி நீங்கியது சித்தாகிவிளங்குவதே மாயாநிவிர்த்தியாகிய முத்தியென்பதாம்,

இது மேற்கூறு மஷ்டவிதானந்தத்தி ஞென்றானவத்துவிதானந்தமெனக்கொள்க

அ-கை. அச்சத்திநீங்கினவிடத்து மதன் காரியமானதிரிசியம் நீங்காமையான் நீங்குமுபாயமனுக்கிரகிக்கவேண்டுமென்ற வினாவிற்குத்தரம்

பூரிக்குங்கனசச்சிதானந்தத்திற்பொய்கடந்துயர்மூன்றுந்
தூரத்தாயினுந்தோன்றுபாழ்விபரீதந்துடைப்பதெப்படியென்று
னீரிற்றோன்றுந்தன்னிழலைக்கீழதாய் நின்றலையினுநேராய்ப்
பாரிற்றோன்றியதன்னைநோக்கிடலந்தப்பாழ்நிழல்பொய்யாமே

இ-ள் பூரிக்கும்-பூரணமாயிருக்கின்ற கனசச்சிதானந்தத்தில் ரகிதமான சச்சிதானந்தஸ்வரூபத்தில் பொய்கடந்துயர் அனர்த்தசட துக்கமானது மூன்றும் திரிவிதமும் தூரத்தாயினும்இலவாயினும்தோன்றும் பாழ்விபரீதம்தோற்றுகின்றபாழாகியவிபரீதத்தை துடைப்பதெப்படியென்றால் கெடுப்பதெவ்விதமென்னில் நீரிற்றோன்றுந்தன்னிழல்

சலத்திற் பிரதிபலித்துத் தோன்றுகின்ற தனது சாயையானது, தலைகீழாய்நின்று-தலைகீழாயிருந்து அலையினும்-சலிக்கினும் நேராய் செவ்விதாய் பாரிற்றோன்றிய பூமியிற்றோன்றிய தன்னைநோக்கிடில் தனது ருவத்தைப்பார்க்கில் ஆங்கப்பாழ்நிழல் அப்பாழான சாயையானது பொய்யாம் மித்தையாம்-என-று

இ-ம் தன்னைத்தரிசிக்கிற்றனது சாயையான திரிசியந் தானாகவே நீங்குமென்பதாம

அ-கை-இ-து

ஞானங்காரணவறிவுகாண் காரியநாமரூபப்பேர்க
ளானதெப்படியழிந்ததெப்படியெனவாய்குதல்பலனன்றே
மானமைந்தனேதீர்க்கசொர்ப்பன சகம்வந்ததும்பாராமற்
போனதுநினையாமலுன்போதமாய்பூரணமாயிருப்பாயே

இ-ள் காரணம் காரணமானது ஞானமறிகாண் ஞானத்தையறியுமறிவாம் காரியம் காரியமானது நாமரூபப்பேர்கள் நாமரூபமானசீவேஸ்வரசகங்களாம் ஆனதெப்படி யழிந்ததெப்படியென இவையுற்பத்திநாசமெவ்வண்ணமென்று ஆய்குதல் விசாரித்தல் பலனன்றுபயனன்றும் மானமைந்தனே பெருமையுள்ளபுத்திரா தீர்க்கசொர்ப்பன சகம் நீண்டகனவாகிய உலகங்கள் வந்தும்பாராமல் உதித்ததையும் விசாரியாமல்போனது நினையாமல் நசித்ததையும்விசாரியாமல் உன்போதமாய்-உனதுஞானமாயும பூரணமாயிருப்பாம் பரிபூரணஸ்வரூபமாயுமிருப்பாம்-எ-று

இ-ம காரணமான சின்மாத்திரமாகத்தான்விளங்கின் காரியமானயாவுமத்தாகவே விளங்குமென்பதாம் ௱௫

அ-கை சித்திக்குமுறை மதிலுக்குமத்துவிதானந்தமுங்கூறல்

அசத்திலெம்மட்டெண்டம்மட்டும்பாராமுகமாகியும்மட்டு
நிசத்திலுள்விழிபார்வையாயிப்படிநிரந்தரப்பழக்கத்தால்
வசத்திலுன்மனநின்றுசின்மாத்திரவடிவமாகிடின்மைந்தா
கசத்தமேகத்திலிருக்கினு மானந்தக்கடல்வடிவாவாயே

இ-ள் அசத்தியில் திரிசியமானமித்தையில் எம்மட்டெண்டு எவ்வளவுகாலமிருந்தனையே அம்மட்டும் அவ்வளவாக நிசத்தில் திருக்காசைத்தில் உள்விழிப்பார்வையாய் அந்தர்முகதிஷ்டியாய்இப்படி இவ்விதம் நிரந்தரப்பழக்கத்தில் இடைவிடாத வப்பியாசத்திஞல் உன்மனம்-உன்மனமானது உன்வசத்திநின்று உன்வசமாகவிருந்து சின்மாத்திரவடிவமாகிடின் சைதன்யஸ்வரூபமானல் மைந்தா மகனே கசத்தமேகத்தில் வெறுக்கப்பட்டசரீரத்தில் இருக்கினும் நீயிருந்தாலும் ஆனந்தக்கடல்வடிவாவாய்-பிரமானந்தஸ்வரூபமாவாய்-எ-று

இ-ம். இங்ஙனம்நிந்துத்துச்சித்தித்துருவமாவானுயினவ்வுருவம்மனவனந்தஸ்வரூபமே தானுக விளங்குமென்பதாம். ௱௬

ஆ-கை மாயையவித்தைமுதலிய சபயாவதீங்கிச் சிற்சத்தியாகிய சிற்பாவமாத்மாவிற் கரைந்தக்கானபின் அவ்வாத்மாசச்சிதானந்தவ்வ ரூபமென்றுணர்த்தின வாசிரியரை நோக்கியங்ஙனமாயின் சத்தையுஞ் சித்தையும்போல வானந்தமேனத்தனிடத்திற் காணப்படவில்லையென விஞதல்.

தானன்றிவேறொன்றுமில்லாத பூரணச்சச்சிதானந்தகுணமா
யூனின்றவுயிர்தோறுமொன்றாகுமென்றாலதொக்கின்றபடிகண்டிலே
னின்றசீவன்கள் சத்தானவகையொக்குஞானங்கள் வெளிகண்டதா
மானந்தமிவைபோலவெளியாகவுந்தியானவடைவேதுகுருநாதனே.

இ-ள். குருநாதனே-தேசிகனே-தானன்றி-தன்னைத்தவிர, வேறொன்றுமில்லாத-இதரவஸ்துக்களில்லாத, பூரண-பரிபூரணமாகிய, சச்சிதானந்தகுணமாய்-சச்சிதானந்தசுபாவமாய, ஊனின்ற-தேகத்தினகண்ணிருந்த, உயிர்தோறும் சீவர்கடோறும், ஒன்றாகுமென்றால் ஏகமாயிருக்குமென்னில், அது- அச்சச்சிதானந்தமானது, ஒக்கின்றபடி கண்டிலேன்-ஒத்திருக்குந்தன்மையைப்பார்த்திலன், நின்றசீவன்கள் அகம்பாவமுள்ளசீவர்கள், சத்தானவகையொக்கும்-சத்தெனவின்றவாறுபோலக்கும், ஞானங்கள்-சித்தும்வெளிகண்டது-விளங்குகின்றது, இவைபோல-இவற்றைப்போல, ஆனந்தம-ஆனந்தமானது, வெளியாகவுந்தியாத வெளியாகத்தோன்றாத அடைவேது-கிரமமேது.

ஆ-கை அவ்விஞவிற் குத்தரங்கூறல்.

உருவங்களிரதங்கள்பரிசங்களொருபூவிலொன்றாகுமென்றாலுமே
கரணங்களோரொன்றிலோரொன்றுதெரியுங்கணக்கன்றிவாராதுகா
ணருமந்தச்சச்சிதானந்தச்சுபாவங்களான்மாவின்வடிவாகினும்
பிரபஞ்சமயமாம்விருத்திபேதத்தினாற்பேதங்களாமைந்தனே

இ-ள். உருவங்கள்-வடிவங்களும், இரதங்கள்-சுவைகளும், பரிசங்கள்-பரிசங்களும், ஒருபூவில்-ஒருமலரில், ஒன்றாகுமென்றாலும்-ஒன்றாயிருக்குமெனினும், கரணங்களோரொன்றில்-இந்திரியமோவ்வொன்றிற்கும் ஓரொன்றுதெரியுங்கணக்கன்றி- ஒவ்வொருவிஷயந்தெரியுங்கணக்கேயல்லாமல், வாராதுகாண்-தெரியமாட்டாது அதுபோல - அருமருந்தென-அருமருந்தென, சச்சிதானந்தசுபாவங்கள்-சச்சிதானந்தவியல்புகள்-ஆன்மாவின்வடிவாகினும்-ஆத்மஸ்வரூபமானாலும், பிரபஞ்சமயமாம சகத்துருவமான விருத்திபேதத்தினால்-விருத்தியினவேற்றுமையினால், மைந்தனே-மகனே, பேதங்களாம்-வேற்றுமைகளாம்-எ-று. ௱அ

அ-கை இ-து.

தமமிராசதஞ்சாத்துவிக முக்குணத்தால்வருவிருத்திமூன்றே
நாமவைகண்ட மூன்றுங்கோரமூடஞ்சாந்தப்பிரமாமை குமரனே

யேழுறவிருக்கின்றசச்சிதானந்தங்களென்றென்றுமொன்றாகினு
நாமுறைக்கும்விருத்திப்பிரிவினாற்சொரூபஞானநிபிறிவாகுமே.

இ-ள். தாமதம்-தமசும், இராசதம்-இரசசதம்- சாத்துவிதம்-சத்து வமுமாகிய, முக்குணத்தால்-திரிகுணங்களால்வரும்விருத்தி - மூன்றும்-உண்டானவிருத்திகளிரிவிதமாம், ஆம்-ஆகின்ற, அவைகள்- அம்மூன்று மூடமும், மூடவிருத்தியெனவும்-கோரமும்-கோரவிருத்தியெனவும், சாந்தமும்-சாந்தவிருத்தியெனவும், அபிதானமாகும்-பெயரைப் பெறுவனவாம், மகனே-மைந்தா, ஏழுறவிருக்கின்ற-இன்புறவிருக்கின்ற, சச்சிதானந்தங்கள் சச்சிதானந்தமானவைகள், என்றென்றும் - எப்போதும்-ஒன்றாகிலும்-ஏகமானாலும், நாமுறைக்கும்-யாஞ்சொல்லும்விருத்திப்பிரிவினால்-விருத்திபேதத்தினால், சொரூப ஞானநிதி-சித்துமுதலியசத்தானந்தஸ்பரூபங்கள் பிறிவாகும்-பேதங்களாய-எ-று.

அ-கை-இ-து.

சடமானமூடத்தருக்கல்லுமண்களிற்சத்தொன்றேதோன்றுமால்
விடமானகாமாதிகோரத்திலானந்தமவிளையாதுமற்றவைகளாந்
திடமானவொழிவாதிசாந்தத்திலேசச்சிதானந்தமூன்றும்வெளியா
மடமானமூடங்கள்கோரங்கள்விடுசாந்தமனமாகிலானந்தமே.

இ-ள். சடமான-சடமாகிய, மூடத்தருக்கல்லுமண்களில்மரஞ்சிலை மண்களின்மூடவிருத்தியில், சத்தொன்றுமே தோன்றும்-சத்துமாத்திரந்தோற்றும், விடமான-விடரூபமான, காமாதிகோரத்தில்-காமமுதலியகோரவிருத்தியில், ஆனந்தம்விளையாது-ஆனந்தமுதியாது, மற்றவைகளாம்-சத்துஞ்சித்துந்தோன்றும்; திடமான-உறுதியான, ஒழிவாதிசாந்தத்தில்-ஒழிவுமுதலியசாந்தவிருத்தியில், சச்சிதானந்தமூன்றும்வெளியாம-சச்சிதானந்தமூன்றும்வெளிப்படும; மடமான-அறிவின்மையாகிய மூடங்கள்-மூடவிருத்திகளையும்கோரங்கள்-கோரவிருத்திகளையும், விடு-விடாநின்ம, மனம்-மானம, சாந்தமாகில்-சாந்தவிருத்தியைப்பெறில், ஆனந்தம்-ஆனந்தம்வெளியாம்-எ-று.

இ ச-க-ம். ஆத்மசுபாவமான சச்சிதானந்தம் விருத்திபேதங்களினால்மறைபட்டதும வெளிப்பட்டதுப்போலத் தோன்றினதேயன்றியவைகளதனிடத்தில்லாததன்றென்பதாம். ௱௰

அ-கை. அச்சச்சிதானந்தவிலக்கணமியாதென்றவினாவிற்குத்தரம்.

இகமானகுருநாதனேசச்சிதானந்தமெனுமிலக்கணமறிகிலே
னகலாதசத்தாவதேதுசித்தாவதேதானந்தமேதென்றிடின்
மிகுகாலமூன்றுங்கெடாதிருப்பதுசத்துவேறுபாடறிதல்சித்தா
மகிழ்காமநுகர்போதுசுகமாகுமனுபூதிவாழ்வென்பதானந்தமே

இ-ள். இகமான-இம்மானிடவடிவமாக வெழுந்தருளிய, குருநாதனே - குருசாமியே, சச்சிதானந்தமெனும் - சச்சிதானந்தமென்கின்ற, இலக்கணமறிகிலேன் - இலக்கணத்தைத் தெரிந்திலேன், அகலா

லவா கன்மானுபவம்-இப்போதுசெய்தகன்மமனுபவிந்தற்குத்தக்காக ர்சொர்க்கமெனில்-இனிநாக சொர்க்கங்களையடையவென்றால்வருகின் றகாலத்தும்-யெதிர்காலத்தினும் இவனுண்டலோ-இவனிருப்பானல்ல வா உன்மாதயாதனுவுடல் -உன்மத்தமாகியாதனுசரீரமும் கடவுளுட ல்-தேவசரீரமும்மனுடவுடல்-மானிடசரீரமுமாகமாறிமாறியும் மா றிமாறிநசிக்கும் தன்மாயவுடல்கெடினும்- தனதுமித்தையாகிய தேகந சிக்கினும் இவனிருப்பதுகொண்டு-இத்தேகிகெடாமலிருப்பதினால்மக னே-மைந்தாசத்தெனதொக்கும்இவனேசத்தென்னுமனுபவமொக்கும்

இ-ம்-தேகமுதலியவைகண்சிக்கினுந்தானசியாமல் மூன்றுகாலங் களினு மிருத்தலினால்மாவேசத்தென்பதாம். ௱௰௩

ஆ-கை ஆத்மாசித்தென்பதற்குமானந்தமென்பதற்குமனுபவங்கூறல்.

இருளாகமூடுஞ்சுழித்தியிலிராத்திரியிலிரவிசுடரற்றபொழுது மருளாமலிருளையும்பொருளையுந் தெரிகின்றவகைகொண்டுசித்தா பெருவாழ்வுமிக்கதானே தன்னிடத்தினிற் பேராதபிரியமதனகு லருகாதபிரியஞ்சுகத்தில்வருமாதலானந்தமாமைந்தனே. [மே

இ-ள்-இருளாகமூடுஞ்சுழித்தியில்-அந்தகாரமாக மூடிக்கொள்ளு ஞ்சுழுந்திபவத்தையிலும் இராத்திரியில்-இரவிலும் - இரவிசுடரற்ற பொழுதும் சூரியப்பிரகாசமில்லாதபோதும்மருளாமல்-மயங்காமல்இ ருளையும் இருட்டையும்பொருளையும்-வஸ்துக்களையும்தெரிகின்றவகை கொண்டு-காண்கின்றவகையினால் சித்தாகும்-இவனேசித்தாகும் பெரு வாழ்வுமிக்க-பேரானந்தகுமிந்ததானே தன்னிடத்தில் - தானே தன் னிடத்தில் பேராதபிரியமதனால் நீங்காதபிரியவைப்பதனால் அருகாத பிரியம்-குறையாதபிரியமானது சுகத்தில்வருமாதலால்-தனதுசுகத்தில் தனதுசுகத்தில்வருவசனுபவமாதலால்மைந்தனே-மகனே ஆனந்தமா ம்-இவனேயானந்தமாவான்-எ-று.

இ-ள் ஆத்மாவறிவறியாமையின்றி யறிவாயிருந்தறிதலிற் சித்தும் விடயங்களனைத்தினுமுள்ள பிரியநீங்கினுந்தனது பிரியநீங்காமையினா னந்தமுமாமென்பதாம் ௱௰௪

ஆ-கை சுகசாதனங்களிற் பிரியமிருப்பதுபோல்வாத்மாவிலும் பி ரியமிருத்தலினக்தானந்தத்திற்குச் சாதனமாகாதோவெனிலங்ஙனமா காதோவென்பதற்கனுபவங்கூறல்

அன்னபானதிசுகசாதனமாதாலைகபாலர்க்கும்வெகுபிரியமாகு மி ன்னவாறுமாவுமானந்தசாதனமெனக்கருதல்பொருளல்லவே-இராஸ் னவன்மையைவிபொருதுசாதனங்களொடு சொல்லுவாயாகின் ரு ன்ஞதானந்தம்வேறுமனுபவிப்பதாருடையவான்மாவுமுனவே.

இ-ள் அன்னபானாதி-உண்பனவகுருவனமுதலியவைகள்சுகசாதனமதாகையால்-சுகத்துக்கு சாதனமாகையால் ஆர்க்கும்-யாவர்க்கும் வெகுபிரியமாகும்-மிகுந்தபிரியமாம் இன்னவாறு-இவண்ணம் ஆன்மாவும் ஆத்மாவும் ஆனந்தசாதனமென்று-ஆனந்தத்துக்குச் சாதனமென்றுகருதல்பொருளல்லவே-நினைப்பதருத்தமல்லவே சொன்னவான்மாவை-சொல்லியவாத்மஸ்ரூபத்தை ஒருசுகசாதனங்களோடு - ஓர்சுகசாதனங்களோடுங்கூட, சொல்லுவாயாகின்-சொல்லுவையாகில் மகனே -மைந்தா, உன்னதானந்தமானது வேறே- உன்னைவிட வேறே · அனுபவிப்பதாம், அனுபவிப்பதாகிய உபயவான்மாவுமுளவோ-இரண்டாத்மாவுமுண்டோ-எ-று.

இ-ம் சாதனமுமிருந்து சாத்தியமானவிடத்திற்சேடித்தநிரதிசயானந்தமும் வேறு மத்தனுபவிக்குமாத்மாவேறு மின்றாதலினவ்வாத்மாவேயானந்தமாவதன்றி யதற்குச்சாதனமாகாதென்பதாம்.

அ-கை ஆத்மாவானந்தஸ்வரூபமாயினெனிரிட்டனுபவிக்குமானந்தமத்தாகாதோவென வரினக்துவிடயானந்தமாதலின்றாமென்பதற்கனுபவங்கூறல்

விடயசுகமதில்வருதல்பிரியமாத்திரமாகும் வெகுபிரிய மான்மாவிலாம்-விடயசுகம்வரும்பிரிய மாறிவருமான்மாவில் வெகுபிரியமாறாதுங் காண்-விடயசுகம்விடுமாங்கொளுமாமான்மாவைவிடுவதெவர்கொள்வதெவர்பார்-விடயசுகபோகங்கள் விடுமவனவனால்விடப்படாதொருநாளுமே.

இ-ள் விடயசுகமதில்-விஷயானந்தத்தில்வருதல்பிரியம்- இன்புமுண்டாதல் மாத்திரமாகும்-அற்பவளவாம் ஆன்மாவின்-ஆத்மாவினிடத்தில்வெகுபிரியமாம்-மிகுந்தபிரியமாகும் விடயசுகம்-விடயானந்தத்தில்வரும்பிரியம் -உதிக்கின்றபிரியமானது மாறிவரும் - மாறிமாறியுண்டாகும் ஆன்மாவில்-ஆத்மாவிடத்துள்ளவெகுபிரியம் - மிகுந்தபிரியமானதுமாறாது காண்-விட்டுநீங்காது விடயசுகம்-விடயானந்தமானதுவிடுமாம்-விட்டுவிடுவுமாம்கொளுமாம்கொள்ளவுமாம் ஆன்மாவை-ஆத்மானந்தத்தைவிடுவதெவர்-விடுகின்றவர்யார்கொள்வதெவர்கொள்ளுகின்றவர்யார்பார்-நன்றாகப்பார் விடயசுகபோகங்கள் - விடயானந்தனுபவங்களை விடுமவனை-நீக்கினவவ்வாத்மாவையொருநாளும் - எக்காலமும் அவனால்விடப்படாது-அவ்வாத்மாவினால் விடக்கூடாது-எ-று.

இ-ம் விடயவின்பங்களைத்து மாத்மப்பிரியதேசமாதலினத்துநீத்து மிக்குநசியாதிருந்தலினவை வானந்தவாதரார்த்தகமாவென்பதாம்.

அ-கை ஆத்மாவானந்தவடிவமாகினதனிடத்தில் வெறுப்பிருக்கின்றதேயெனி லங்ஙனமின்றென்பதற் கனுபவங்கூறல்.

வேகின்றகோபங்களாலென்னை நான்கொன்று விடுகிறேனென்று சிலபேர், சாகின்றபடியினாற்றன்னையே தான்கொன்றுசாவனெனல்சங்கையலவே, தேகந்தனைக்கொல்லுமவனால்விடப்பட்ட தேகமவனல்லான்மகனே, யாகந்தனிற் கோபமலதுதனை யொருநாளுமான்மாவெறுப்பதிலையே.

இ-ள் வேகின்றகோபங்களால்-வேகாநின்ற கோபங்களாலென்னை தன்னை நான் கொன்றுவிடுகிறேனென்று - நான்கொல்லுகின்றேனென்று, சிலபேர்-சிலர் சாகின்றபடியினால்-இறக்கின்றமையினால தன்னையே தான்கொன்று-தன்னைத்தானே கொலைசெய்துகொண்டு சாவனெனல் மரிப்பானென்பது சங்கையல-அங்ஙனஞ்சங்கிப்பது சங்கையன்றாம்தேகந்தனைக் கொல்லும் உடலைக் கொல்லுகின்ற அவனால்- அப்புருடனால் விடப்பட்டதேகம்-நீங்கப்பட்ட தேசமானது அவனல்லன்-அவ்வாத்மாவலனும்மகனே-மைந்தா ஆகந்தனில்-தேகத்தில் கோபமாவது-கோபம் வந்ததே யல்லாமல்தனை-ஆத்மாவை ஒருநாளும்-எப்போதும் ஆத்மா வெருப்பதில்லை ஆத்மாவானவன் வெறுப்பதில்லை-எ-று

இ-ம் ஆத்மாதற்பிரியத்திற்குறைவு வராமற்றேகத்தை நீக்கினதேயன்றித் தன்னிடத்தில் வெறுப்புண்டானதல்லவென்பதாம்.

அ-கை தனவானந்தமுதலியமானந்தங்க ளாத்மாவென்வருமெனிலங்ஙனமாகாவெனக்கூறியாத்மானந்தமே முக்கியமெனக்கூறல்.

தாகப்படும் பொருளிலும்மகன் பிரியமாந்தயனிலு மூடற்பிரியமாமாகத்திலும்பிரிய-மிந்திரியமாங்காணமதனிலும்பிரியமுயிராமேகப்பிராணனிலும்-வெகுபிரியமான்மா விலிந்தவசன்மாமுக்கியமுகத்தினாற்கௌணமித்தகர்த்தா மூன்றுமொன்றதிகமகனே

இ-ள். தாகப்படும்பொருளிலும் பிரியமாகச்சம்பாதிக்குந்தனங்களினும் மகன்பிரியமாம் புத்திரன் பிரியமாகும் தநயனிலும்அப்புத்திரனிலும் உடல்பிரியமாம் தேகம்பிரியமாகும் ஆகத்திலும்அத்தேகத்திலும் இந்திரியம் பொறிகளானவை பிரியமாம் பிரியமாகும் அதனிலும் அவ்விந்திரியங்களிலும் கரணம்பிரியம்அந்தக்கரணம்பிரியமாம் அதனிலும் அவ்வந்தக்கரணங்களிலும் உயிர் சீவனானது பிரியமாம் பிரியமாகும் ஏகப்பிராணனிலும் ஒன்றானசீவனிலும்ஆன்மாவில்கூடன்தனிடத்தில் வெகுபிரியம் மிகுந்த பிரியமாதலால் இந்தவான்மாமுக்கியம் இவ்வாத்மாவேமுக்கியமாம் மகனே மைந்தா ஊகத்தினால் யுத்தியினால் கௌவுணம்கௌணத்மா மித்தை மித்தையாத்மாகர்த்தாவாத்தமாகியமூன்றும்-ஒன்றினொன்றதிகம் ஒன்றினொன்றதிகமாம் எ-று

இ ம் தனமுதலியவாறினும் வைக்கின்ற பிரியங்கொளணமெனவு மாத்மப்பிரியமே முக்கியமெனவுங் கூறினதாம்

அ-கை ஆத்மானந்தமே முக்கியமாயின் புத்திரன்முதலியவைகளாத்மாவெனவு மவைகண்முக்கியமெனவுங் கூறியதென்னெனவரினதற்குத்தரங்கூறல்.

கொடாெனபொழுதிவன்காணிக்குமகனைகொளணவான்மாமுக்கியம்
விடலாதவுடலமபரிக்குநாளுடலானமித்தையான்மாமுக்கியங்
கிடமானநன்மையதிவேண்டிடுநற் கர்த்தனுஞ்சிவவான்மாமுக்கியந்
சுடமயுமுத்தியினில்ஞானவான்மாவாதாமே மகாமுக்கியம்

இ-ள் கெடலானபொழுது மரணகாலத்தில்இவன்காணிக்கு இவனுக்கினைத்துக்குவேண்டிமகனுன-புத்திரனுன கொளணவான்மா கௌணவான்மா-கௌணுத்மாவேமுக்கியம் அத்தருணத்துக்குமுக்கியமாம் விடலாதவுடலமபரிக்கிநாள்நீங்காதேமதகத்தைதாங்குகின்றநாளில் உடலான-அத்தேகமனமித்தையான்மா மித்தையாத்மாவானதுமுக்கியம் அத்தருணத்துக்கு முக்கியமாம் திடமானநன்மைகள்பலமாகியநல்ல கதியைவேண்டினல் விரும்புங்காலத்தில்கர்த்தனுஞ்சிவவான்மாநானென் னுஞ்சிவாத்மாவானதுமுக்கியம்அத்தருணத்தில்ஞான வான்மாவான் தானேஞானத்வஸ்ரூபரூபமாகியதானேமகாமுக்கியம்மிகவுமுக்கியமாம்

இ-ம் புத்திரன்முதலிய மூன்றையு முக்கியமாத்மாவென்பது ஒவ்வோர்சமயத்ததலாற் பூருவபட்சமும் ஆத்மாவைமுக்கியமென்றதென்றுமாதலாற் சித்தாந்தமுமாமென்பதாம்.

அ-கை விருப்புமுதலியமூன்றுநீங்கியவானந்தமே யாத்மஸ்வரூபமெனல்.

புலிபுமனுகூலமெனி லிட்டமாம்பகைசெயிந் புதல்வனெனினும்
வெறுப்பா-முலகிலிருவகையுமல்லாதபுல்லாயிலுதாசீனமாமாதலான்ம
கினமனு சின்மயன் பலவகையுமிப்படி மகிழ்ச்சியில்விருப்பமிகழானல்
கிலானந்தவடி வாகுமெனசொரூபத்தை யாராய்ந்துபார்மைதானே

இ-ள் புலியும்-வியாக்கிரமும் அனுகூலமெனில் அனுகூலமுஞ்செயுமாயின் -இட்டமாம் சிநேகமாகும் புதல்வனெனினும் புத்திரனாயினும் பகைசெயில்பகைக்கின் வெறுப்பாம் துவேஷமாம் உலகில் பூமியின்கண் இருவகையுமல்லாத இவ்விரண்டுமல்லாத புல்லாதியில் திரணமுதலியவைகளில் உதாசீனமாம் உபேட்சையாம் ஆதலால் ஆதலினுல்மன

னமறு களங்கமற்றசின்மயன் ஞானஸ்வரூபனுனவன்பல்வகையும் நாநாவிதத்திலும் இப்படி இவ்வண்ணம் மகிழ்ச்சியில் ஆத்மாநந்தத்தில்விருப்பமிசழான் பிரியத்தைநீங்கான் அளவில்அளவற்ற ஆனந்தவடிவாகும் பிரமானந்தஸ்வரூபமாகிய உன்சொரூபத்தை உனதாத்மஸ்வரூபத்தை மகனே-மைந்தா ஆராய்ந்துபார் ஆராய்ந்தறிவாய்-எ-று

இ-ம் விருப்புவெறுப்பு வுதாசினமாகியமூன்றுமாத்மாசுகத்திற்கு மாறுபடுதலினுனு மிவைகளின்றிய வச்சுகமாறுபடா திருத்தலினுனுமிவ்வானந்தமேயாத்மஸ்வரூபமென்பதாம்இக்துமேற்கூறும்அஷ்டவிதானந்தத்தொன்றுனை ஆத்மானந்தமெனக்கொள்க

ஆ-கை ஆத்மநிரதிசயானந்தமென்பதனுபவமாய்பொருட்டதிசயானந்தமென விதமாகக்கூறுவான் றொடங்கியானந்த மெத்தனைவகையென்றவினுவிற்குத்தரங்கூறல்.

மனஞ்சிறந்தகுருநாதனேயனந்தவகையெத்தனையென்னிலோஞானத்திகழ்ந்த பிரமானந்தம் வாகனுனந்தம் விடையானந்தமென்றானந்தமூன்றுவிதமெட்டுவகையென்பார்சிலர் வைந்துமிதிலடக்கமயனந்தவகைசொலக்கேண் மைந்தனேஎட்டு மிதுதின்னதெனவே

இ-ள் மனஞ்சிறந்த பெருமைமிகுந்த குருநாதனேதேசிகோத்தமான ஆனந்தவகைகள் ஆனந்தப்பிறிவுகள் எத்தனையென்னில்எவ்வளவென்றுகேட்பாயாகில் ஞானமகிழ்ந்துசித்துவிளங்கிய பிரமானந்தம் பிரமானந்தமெனவும் வாகனுனந்தம் வாகனுனந்தமெனவும் விடயானந்தமென்று-விஷயானந்த மெனவும்-ஆனந்தம் ஆனந்தமானது மூன்றுவிதம் மூன்றுவிதமாம் சிலர் சிலபெரியோர்கள் எட்டுவிதமென்பார் அஷ்டவிதமென்றுஞ் சொல்வார் அஷ்டவிதமென்றும் சொல்லுவார்கள் அவ்வைந்துமிதி லடக்கலம் அவ்வைந்து மிம்மூன்றிலடக்கமாம் யெட்டும் அதிஷ்டவிதானந்தமும் இத்தின்னதின்னதென இத்தின்னதின்னதென்றும் யானந்தவகைசொல நானப்பகுப்பைச்சொல்லமைந்தனே மகனே கேள் நீகேள்-எ-று

இ-ம் பிரமானந்தத்தில் ஆத்மான்ந்தமும்முக்கியனந்தமும்நிசானந்தமும் அத்துவிதனந்தமும் ஞானுதீதமுமான வைந்துமடங்கியிருக்கின்றதென்பார் அவ்வைந்துமிதிலடக்கமென வொருமையாகக்கூறினர்

இ-ம் ஆனந்தத்தின்றொகைமுக்கியபட்சமூன்றெனக்கூறினதாம்

ஆ-கை அவ்வஷ்டவிதானந்தத்தின்வகைகூறல்

போகத்தில் வருசுகம்விடயசுக நித்திரைப்போதுளதுபிரமசுகமாம்
மோகத்தனந்தலிச்சுகம்வாசனைச்சுகமுழுப்பிரியமான்மசுகமாம்
யோகத்திலுளது முக்கியசுகமுதாசினமுற்றசுகநிச்சுகமதர்
ஏகத்தைநோக்கலத்துவிதசுகம்வாக்கியமெழுந்தசுகஞானசுகமே

இ-ள் போகத்தில்வருசுகம்-போகங்களில் வருகின்றவனந்தம்விடயசுகம் விடையானந்தமாம் நித்திரைபோதுளது சுழுத்தி காலத்துள்ளவானந்தம்பிரமசுகமாம் பிரமானந்தமாம்மோகத்தநந்தலிற்சுகம்மயக்கமாகியநித்திரைதெளிந்து வருஞ்சமயத்துள்ள வானந்தம்வாசனைச்சுகம்வாசனானந்தமாம் முழுப்பிரியம் முழுப்பிரியம் முழுத்தஞ் சுகமாயிருத்தல் ஆன்மசுகம் ஆத்மானந்தமாம் யோகத்திலுளது சமாதியிலுள்ளசுகம் முக்கியசுகம் முக்கியானந்தமாம் உதாசினமுற்றசுகம் உதாசினத்திலுள்ளவானந்தம்நிச்சுகமதாம் நிசானந்தமாம் ஏகத்தைநோக்கல் பூரணதிருஷ்டியிலுள்ளசுகம்அத்துவிதசுகம் அத்துவிதானந்தமாம் வாக்கியமெழுந்தசுகம் மகாவாக்கியார்த்தத்திலுதயமானவானந்தம் ஞானசுகம்வித்தியானந்தமாம் எ

ப-ம் ஞேயத்திலுதிக்கு மின்பமென்பார்போகத்தில் வருசுகமெனவும் நனவிற்சுழுத்தியிலுள்ளது பிரமசுகமென்பார் நித்திரைப்போதுளதுபிரமசுகமெனவுங்கூறினார்

இ-ம் சுருக்கமான சொந்தத்துடனவ்வானந்தங்களினாமங்களைக்கூறினதாம்.

அ-கை அவற்றில்விடயானந்தவிலக்கணங்கூறல்

இவ்வாறுரைசெய்தசுகபேதங்களினியல்பாமவைசொல்மகனேகேள்
ஔவ்வாநனவினிலுழல்வானிடர்கெடறுறங்குஞ்சயனத்திலுறுநேரம்
செவ்வாமனமகமுகமாமதிலொளிர்சித்தின்சுரந்திழல்சேருங்கா
லவ்வதறிவனிளமகிழ்தாமனுபவமதுதான்விடயசுகானந்தம்

இ-ள் இவ்வாறு இந்தப்பிரகாசம் உரைசெய்த சொல்லியசுகபேதங்களின் ஆனந்தவேறுபாடுகளின் இயல்பாமவைச்சொல் இயல்பமாந்தன்மைகளைச்சொல்ல-மகனேகேள் மைந்தாகேட்பாய்ஔவ்வா இன்பம்பொலிந்ததநனவினில் சாக்கிரத்தில் உழல்வான கழல்பவனுடையஇடர்கெட துன்பம்நீக்கும்பொருட்டுஉறங்குறுஞ்சயனத்திலுநேரம் படுக்கையினித்திரைசெய்யுஞ்சமயத்தில் செவ்வாமனம் செவ்விதானமனமானது அகமுகமாம்அகமுகப்பட்டு அதில் அம்மனத்தில் ஒளிர்பிரகாசிக்கின்றசித்தின்சுரந்திழல்-சித்தானந்தசாயையானது சேருங்காலஞ்சேரும் அவ்வாறு அவ்வண்ணம் இவனுளம் இவன்மனமானது மகிழ்வானுபவம்மகிழ்ச்சியாகமனுபவமான அதுதான் அதுவேவிடையசுகானந்தமாகிய விடயானந்தமாகின்றது

ப-ள் அறிவறியாமையிற்சுழலும் பவத்துன்பநீங்கும்பொருட்டேச்சமாதியின்சுழுகமாய் மனஞ்சித்தத்தைத்தருசிக்கிற்சிற்சுகமுடாகுமென்பார்களவி னுழல்வாணிடாகடவுருக்குஞ்சயனத்திலு நரேரஞ்செல்வத்தைமகாமகமாமதி லெனிர்சித்தின் சுகமிழல்சேருங்காலெனவும் அங்ஙனமயிழ்கவேல ஞேயானந்தமென்பார் அவ்வாறிவனுளமகிழ்வாமனுபவமதுதான்விடயசுகானந்தமெனவுங்கூறினர்

இ-ம் சமாதியிலகமுகமாகச் சென்றறிமுடக்துண்டானது பிரமசுகமாயினு மக்தைமெதிரிட்டறிந்து மனமகிழ்தலிசைசுகம் விடையானந்தசுகமாயிற்றென்பதாம்

அ-கை பிரமானந்தவிலக்கணங்கூறல்

ஈனந்தருசுகவிடயந்திரிபுடியிடராமென்மனமசையாமற்
சேனந்தனகுலாயந்தனில் விழுசெயல்போநித்திரைசெறிசீவன்
றானந்தமில்பானுட்டோனறுவனொருவனையல்ல துபிறநினையாம
லானந்தமயமாவான்சுகமிருவதுதானுயர்பிரமானந்தம்

இ-ள் ஈனந்தருகுறைவைக்கொடுக்கின்ற சுகவிடயம் விஷயசுகமானது திரிபுடியிடராமெனதிரிபுடியானதுன்பமாமென்று மனமசையாமல்மனஞ்சலியாமல்சேனம் பருந்தானது தனதுகுலாயந்தனில்தனதுகூண்டில் விழுசெயல்போல் அடங்குந்தொழிபலப்போலநித்திரைசெறிசீவனித்திரைசெய்கின்றசீவனானவன் அந்தமில்முடிவிலாதபானுடனென்றுவன்-பிரமத்தோடுங்கூடுவன் ஒருத்தனையல்லதுஒப்பத்தனையல்லாமல்பிறநினையாமல் வேறுகருதாமல் ஆனந்தமயமாவான் ஆனந்தகாரமாவான் சுகமிதுமதுமதுதான்சுகமிதுமதுதான்சுகமிருத்தலவ்வானந்தமேஇயர்பிரமானந்தம்மேலானபிரமானந்தமாம்-என்று

ப-ம் பிரமத்தையெதிரிட்டறியன் அறியவன் அறிவு அரிபொருளென்மூன்றுமதனுற்றுன்பமெனபர் ஈனந்தருசுகவிடயம் திருபுடியிடரமெனவும் மனதையடக்கிச் சொரூபசமாதி செய்கின்ற வாத்மாபிரமத்திற்லக்குமெனபார் மனமசையமநித்திரைசெறிசீவன்றானந்தமிலபானுளமென்று வனெனவும்அங்ஙனப்பிரமத்திற்கூடியவா தமாவப்பிரமானந்தமாகவானந்திப்பானென்பார்ஒருத்தனையல்லதுபிறநினையாமலானந்தமயனுமெனவும் இக்கேதபேரானந்தமென்பார்சுகமிருமதுதானுவாபிரமானந்தமாகவானந்திப்பானென்பார்ஒருத்தனையல்லதுபிறநினையாமலானந்தமயனுவனெனவும்இக்கதபோனந்தமென்பார்சுகமிகமதுதானுவாபிரமானந்தமெனவுங் கூறினர்நித்திரையென்பதரித்துயிலெனகொள்க

அ-கை-இ-து

தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள் விழிதுயில்வோர்கடாங்கும்மலமனைகட்குகச்சிலர் சம்பாதிப்பதுதான்சுகங்

தீங்குநன்மையாண்பெண்முறைமையுந்தெரியாத மளிசெய்பொழு தேபோ லாங்குள்வெளிகளு மறியாவனுபவமதனாலதுபிரமானந்தம்,

இ-ள் சுருதிப்பொருள் - வேதமுடிவான மகாவாக்கியார்த்தத்தில் தூங்குஞ்சுகந்தா -அறிதுயிலுதயமானவாநந்தமானது பிரமச்சுகமெனி ல-பிரமானந்தமென்றுகொள்ளவிழி துயில்வோர்கணித்திரைசெய்பவ ர்கள் தாங்குமலரணை-தாங்காநின்ற புஷ்பசயனத்தை நன்றாக - நல்ல தாக சிலர்-சிலபேர்கள் சம்பாதிப்பது-சேகரிப்பது தானசுகம் - ஸ்தான சுகமாம் தீங்கும்-தீமையும் நன்மையும்-நன்கும் ஆண்பெண்முறைமை யும்-ஆண்பெண்ணென்கிறமுறைமையையுந்தெரியாது-அறியாமல் அம ளிசெய்பொழுதேபோல் நித்திரைசெய்கிற காலத்தைப்போல ஆங்கு அவ்விடத்து உளவெளிகளுமறியா அகபுறங்களுமறியாத அனுபவ மதனால்-சுவானுபவமாதலால் அதுபிரமானந்தம்-அவ்வறிதுயிர்பிரமான ந்தமாம்-எ-று.

ப-ம். வேதமுடிவான மகாவாக்கியார்த்த உபதேசத்தில் ரமிக்கும் யோகநித்திரையே பிரமானந்தமென்பார் தூங்குஞ்சுகமது பிரமச்சுக மெனல் சுருதிபபொருளெனவும் அங்ஙனஞ்சமாதியடைதற்குச் சாதன மான ஞான முயற்சியவைகளைப்பெற் றேகாந்தமாயிருந்தே யிடமென் பார் துயில்வோர்க டாங்குமலரணை நன்றாகச்சிலர்சம்பாதிப்பதுதான் சு கமெனவும் அசம்புறமினறிப் பரிபூரணமாகவிளங்கும் போதுள்ள சுக மேபிரமானந்தமென்பார் உள்வெளிகளுமறியா வனுபவமேதுவே யுயர் பிரமானந்தமெனவுங்கூறினர்.

இ-உ-க-ம் சுழுத்தியைப்போலச்சமாதியிலசலும் மாயாத்மாபிரம த்திற்சேர்ந்த தன்மையமாய்ச்சுகத்தை யனுபவித்தலி னத்துபிரமானந்த மாயிற்றென்பதாம், ௱உ௫

அ-கை சித்திற்சுகம்விளங்குமனுபவந்தெரிவான் அறிவின்றியவா னந்தமறிவிலெனனந் தோறுமென்றிடையின்வினாதல்.

உதவும்புவியினிலொருவன்னனுபவமொருவனமனதிலுதியாதே.
மதியுங்கெடுகிறதுயில்கொண்டானந்தமயனன்றேசுகமுறுகின்று
ஈதிலிருந்தானமயனுஞ்சிந்தையினினைவாய்வந்திடுமெனல்கண்டேன்
சுதைவிதனேறாபுகழ்குருநேவதிரிதுசொல்லீசகலமும்வல்லீரே

இ-ள் உதவும்புவியினில்-முத்திக்குச்சகாயஞ் செய்யுமிப்பூமியில் ஒருவனனுபவம்-ஒருவனுக்குதிக்குமனுபவமானது ஒருவன்மனதினில்வே றொருவன்மனதினில உதியாதே- உண்டாகாதே மதியங்கெடுகின்ற- அறிதலும்மிறக்கின்ற துயில்கொண்டு-யோகநித்திரையைக்கொண்டு ஆன ந்தமயனன்றே - ஆனந்தகாரனல்லவா சுகமுறுகின்றான்-பரம சுகந்

